# அன்புக் கடல்

(நாவல்)

ராஜம் கிருஷ்ணன்



வெளியிட்டோர் : அன்புப்பண்ணை, சென்னை-5.

*விற்பனை உரிமை :*

**பழனி பிரசுரம்**

*மணிக்கூண்டு* புதுக்கோட்டை

*தெப்பக்குளம்* திருச்சிராப்பள்ளி

*திருவல்லிக்கேணி* சென்னை-5.

# பதிப்புரை

'கலைமகள்' பத்திரிகையில் சென்ற ஆண்டு 'பெண் குரல்' என்ற நாவலுக்குப் பரிசு பெற்றவர் இந் நூலாசிரியை. அவரது இரண்டாவது நாவல் இது. எந்தப் பத்திரிகையிலும் வெளிவராத ஒன்று.

பெண் இனத்தின் மனோ நிலையையும், இதயத் துடிப்புக்களையும், தாய்மையின் வேகத்தையும், அன்பின் குமுறலையும் இந் நாவல் சித்தரிக்கிறது. மனதைத் தொடும் வண்ணம் வாழ்வின் இன்ப துன்ப நிகழ்ச்சிகள் வர்ணிக்கப்படுகின்றன. இனிய, எளிய நடையில் விறுவிறுப்புடன் செல்கிறது கதை.

தமிழ்நாட்டு வாசகர்கள் இம்முயற்சிக்குப் பேராதரவு அளித்து மேன்மேலும் ஊக்குவிப்பார்கள் என நம்புகிறோம்.

ஆசிரியைக்கு எமது நன்றி.

சென்னை,
26—10—'54.

மு. மீனாட்சிசுந்தரம்,
அன்புப் பண்ணை.

# அன்புக்கடல்

## 1

**வை**காசி மாதத்திய பூர்ணிமை இரவு பால் நிலவு தன் அமுத கிரணங்களால் உலகைத்தழுவிக் குளிர்வித்துக் கொண்டிருந்தது. அழகும் பசுமையும் செறிந்த பாலக்காட்டுப் பிரதேசத்தில் உள்ள மாதவபுரம் கிராமத்திலே தன்னுடைய வீட்டின் மேல்மாடியில் திறந்த வெளியிலேதான் கங்காதரம் பாடிக்கொண்டு இருந்தான். அடுத்த வீட்டு மாடியில் கைப்பிடிச் சுவரருகில் நின்றவளாக, செல்லம் அந்த இசையமுதத்தைப் பருகிக் கொண்டிருந்தாள்.

பொதுவாக இசை பயின்று வித்வான்களாகத் திகழும் எல்லோரிடமுமே குரலினிமை, ஞானம், சக்தி எல்லாம் பொருந்தி இருப்பதில்லை. குரலின் இனிமையைக்கொண்டு மக்களைப் பரவசமடையச் செய்வோரிடத்தில் ஞானம் அதிகமாக இருப்பதில்லை. ஞான பண்டிதராக இருப்பவருக்கு வசதியில்லாத சாரீரத்தை அசாத்தியமான சாதனையினை மூலம் வசப்படுத்த வேண்டியிருக்கும். இரண்டும் பொருத்தமாக அமைந்திருக்கப் பெற்றவருக்கோ, சூழ்நிலை இசை பயிலும் வாய்ப்பையே அளித்திராது. கங்காதரம் அதிர்ஷ்டசாலி. கலைவாணி இசைச் செல்வத்தை அவனுக்குப் பரிபூரணமாக அருளியிருந்தாள்.

இசை ஓய்ந்துவிட்டது. ஆனால் கேட்டவரின் கருத்திலே அழியாத சித்திரமாக இன்னும் ஒலித்துக்கொண்டே இருந்தது. செல்லம் கீழே இறங்கிச் செல்லவில்லை. கன்னி உள்ளம் துடிக்க, கங்காதரம் எழுந்து சுருதிப் பெட்டியுடன் தன் அறைக்குள் செல்லுவதைப்பார்க்க அவள் இன்னும் காத்திருந்தாள்.

உள்ளே செல்லத்திரும்பிய அவன் தண்ணிலவிலே தங்கச்சிலை என நிற்கும் மங்கையைப் பார்த்துவிட்டான்.

“ யாரது ? செல்லமா ?...”

அவள் வாய் திறக்கவில்லை.

“ இத்தனை நேரமும் நீ இங்கேயா இருந்தாய் செல்லம்? அட ! தனியாகப் பாடிக்கொண்டிருந்ததாக நினைத்தேனே ?”

அவன் சிரித்தான்.

அவனுடைய சாரீரத்தில் உதிரும் ரவைகளைப்போல, சிரிப்பிலும் பூ உதிர்வதைப்போல இருந்தது செல்லத்துக்கு.

“ வெகு நன்றாகப் பாடினீர்கள். இந்தப்பாட்டு எனக்கு மிகவும் பிடித்து இருக்கிறது. உம்...கற்றுக் கொடுப்பீர்களா ?”

தலையைச் சாய்த்துக்கொண்டு கேட்ட அவள் தன்னுடைய முல்லைப்பற்கள் தெரியப் புன்னகை செய்தாள்.

“ ஓ, கற்றுத் தருகிறேன். ஆனால் சும்மா சொல்லிக் கொடுக்க மாட்டேன். குருதட்சிணை இல்லாத வித்தை பயன்படாது. தெரியுமா செல்லம் ?...”

“ ............ ”

“ நீ எங்கள் வீட்டுக்கு வந்தால்தான் சொல்லிக் கொடுப்பேன். நான் கேட்பதைக் கொடுப்பவளாக வந்த பிறகு...”

செல்லத்தின் பொங்கிய உள்ளம் இந்த வார்த்தைகளில் கட்டுக்கடங்காமல் பெருகியது. கண்களில் நீர் துளிர்த்தது.

அது இன்பக் கண்ணீரோ, அல்லது துன்பமும் கலந்த கண்ணீரோ ?

"செல்லம்! மணி பத்தடிக்கிறது, வயசுப் பெண்ணுக்கு மொட்டை மாடியில் இன்னும் என்ன வேலே, செல்லம்!"

கீழிருந்து கீச்சுக்குரலில் செல்லத்தின் தாய் பார்வதி கத்தினள்.

"இதோ வந்துவிட்டேனம்மா" என்று பதில் கொடுத்துக்கொண்டே அவள் ஓடினள். மச்சுப்படியில் குதித்த வாறு இறங்கிக் கதவைச் சாத்தினள். அவனுடைய நாவில் நடனம் செய்த இசை அவளுடைய உடலிலும் உள்ளத்திலும் புகுந்துவிட்டாற் போலிருந்தது. இல்லாவிட்டால் ஏன் அது அப்படித் துள்ளுகிறது?

இதெல்லாம் எத்தனையோ வருஷங்களுக்கு முன்பு நடந்தவைதான்.

இருபத்துமூன்று வருஷங்களுக்குப் பிறகு இன்று செல்லத்தின் மனசில் அந்தச் சம்பவம் உயிருடன் தோன்றியது. அதே மொட்டைமாடி, அதே பூர்ணிமை இரவு; அதே பாட்டை கங்காதரம் வானவெளியில் சஞ்சரிக்கும் புள்ளென இசைக்கிருர். தன்னுடைய இன்ப வாழ்வு அமைவதற்கு வித்தாயிருக்கும் என்று அவள் கருதிய அந்த நிகழ்ச்சி அவள் மன அரங்கில் எப்படி உயிர் பெருமலிருக்கும்? அவள் அன்று க்ண்ட கனவு பொய்த்து எத்தனையோ காலமாகிவிட்டது. கங்காதரம் இன்று இசையுலகிலே ஒளிரும் ஒரு தனிப்பெரும் சுடர். அது மட்டுமல்ல. கிட்டாததை அடியோடு மறந்து விடும்படி, எங்கோ தொலேதூரம் சென்றுவிடும்படியான வாய்ப்பைக் கூட விதி அவள் விஷயத்தில் இரங்கி ஏற்படுத்தியிருக்கவில்லே. அவள் நினேத்து நினேத்து ஆற்ருமைப்படும் வண்ணம் கங்காதரம் அவளுக்கு மருமகனுக வாய்த்திருந்தார். ஆம், கங்காதரத்துக்கு மாலேயிட்ட மீனுவின் தந்தைக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்படத்தான் அவள் கொடுத்து வைத்திருந்தாள்! மீனு அவருக்கு மாமன் மகள். முறைப்பெண். வறுமையில் உழன்ற செல்லத்துக்கு அந்த ஸ்தானம் கிடைக்காததில் அதிசயம் இல்லேயே?

அன்று கங்காதரத்தின் தந்தைக்கு எண்பதாம் ஆண்டு நிறைவு நடந்தது. அந்த வைபவத்துக்கு வந்திருந்த விருந்தினர் முன்தான் அவர் பாடிக்கொண்டு இருந்தார். செல்லமும் தன் கணவர், குழந்தைகளுடன் திருச்சிக்கருகிலிருந்த தங்கள் சொந்த ஊரிலிருந்து அந்த விழாவுக்குத்தான் வந்திருந்தாள்.

"அம்மா, அம்மா? எங்கே போய் உட்கார்ந்திருக்கிருய்? வண்டிக்கு நேரமாகிவிட்டதாம். பூலோகமா கைலாசமா என்று இப்போதுதான் பாட்டுக் கேட்கச் சமயமா? கீழே அக்கா கோபித்துக் கொள்கிருள், உன்னை எங்கேயெல்லாம் போய்த் தேடுவது?"

விமலா இரைந்து அவளைக் கூப்பிட்டாள். விமலா செல்லத்தின் வயிற்றில் பிறந்த மூத்த மகள். அவளுக்கு மணமாகி, இரு குழந்தைகளுக்கும் தாயாகி இருந்தாள்.

விமலா சேலைச் சத்தத்துடன் மாடிப்படியில் விடுவிடென்று இறங்க, செல்லமும் அவளைப் பின் தொடர்ந்து கீழே வந்தாள்.

கூடத்தில் காந்த விளக்கின் வெளிச்சத்தில் குழந்தைகள் நான்கு வரிசைகளாக உடகார்ந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். பரிசாரகர்கள் இருவர் ஓடிஓடிப் பரிமாற இடுப்பில் கொத்துச்சாவி குலுங்க, கெட்டிக்கரை சரிகைச் சேலையைத் தூக்கிச் செருகிக்கொண்டு மீனுவும் குனியாமல் நெய் பரிமாறிக் கொண்டிருந்தாள். செல்லத்தைக் கண்டதுமே அவள், "உனக்குப் பாட்டுக் கேட்க இதுதான் சமயமா சித்தி? வந்த இடத்திலே அப்பாவையானும் கவனித்துக் கொள்ளக்கூடாதா?" என்ருள்.

முறைக்கு மீனு மகளாக இருந்தாலும் வயசில் செல்லத்துக்குச் சமமானவள். அந்தஸ்திலோ, அவளால் எட்டிப்பிடிக்க முடியாத அளவுக்கு உயர்ந்தவள். விளக்கின் பகட்டான ஒளியிலே மீனுவின் காதுகளிலும் மூக்கிலும் இருந்த கமலங்கள் வர்ணக்கதிர்களை வாரி வீசி அவளுடைய குரலில் தொனித்த அதிகாரத்துக்கு அநுசரணையாக ஒளிர்ந்தன. தாலிச்சரடைத்தவிர வேறு ஒரு

அணிக்கும் கொடுத்துவைக்காத தன் கழுத்தைச் சாயம் மங்கிய புடைவையின் தலைப்பால் இழுத்து மூடிக்கொண்டு மீனாவைத் தாண்டிச் செல்லுவதைத் தவிர, செல்லத்தினால் அப்போது ஏதும் பதில் பேச முடியவில்லை. வாசல்புற மிருந்த அறையில் மீனாவின் தந்தையான செல்லத்தின் கணவர் ரங்கநாதம் கீழே பாயில் உட்கார்ந்திருந்தார். விமலாவின் கணவன் மூர்த்தி, குழந்தைகளுடன் செல்லத்தினிடம் விடை பெறுவதற்காகக் காத்திருந்தான்.

"போய் வருகிறோம். நீங்கள் போகும்போது கட்டாயம் அங்கு இறங்கிவிட்டுத்தான் போகவேண்டும். என்ன, விமலா நேரமாகிவிட்டது!" என்று அவன் அவசரப் படுத்தினான்.

"வரட்டுமா, அம்மா? அப்பா?" என்று விமலா இருவரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டாள்.

"கோயம்புத்தூர் ஒருமணி நேரத்தில் போகும் தூரம் தான். கட்டாயம் வரவேண்டும்!" என்று இறுதியாகக் கூறிவிட்டு அவர்கள் இருவரும் வாசலில் நின்ற வண்டியில் ஏறிக்கொண்டார்கள். அப்போதைய மனநிலையில் செல்லம் வாயைத்திறந்து ஒன்றுமே பேசவில்லை.

வண்டி புறப்பட்டுச் சென்றுவிட்டது. மாடியில் ரஸிகர் குழாம் கரகோஷம் செய்தது செல்லத்தின் காதுகளில் விழுந்தது.

"மாடியில் இருந்தாயா செல்லம்? எனக்கு அருகில் வந்து கேட்க முடியவில்லையே என்ற தாபம்தான். இந்தக் குழந்தைகளின் இரைச்சலிலும் அந்த நாதம் காதில் விழும் போது எத்தனை இன்பமாக இருக்கிறது? நாட்கள் ஆக ஆக அவனுடைய சாரீரத்தில் மெருகு ஏறித்தான் வருகிறது. பெரியவர்கள் செய்திருக்கும் புண்ணியம்; நாம் கொடுத்து வைத்திருக்கிறோம்" என்றார் ரங்கநாதம் உணர்ச்சியுடன்.

ஒரு கால் சுவாதீனத்தை இழந்தவர் அவர். மாடி ஏறி இறங்கச் சக்தி இல்லை அவருக்கு.

சிலைபோல் நின்ற செல்லத்துக்குத் துயரம் பெருகி வந்தது. முப்பத்தெட்டு வயதைக் கடந்துவிட்ட அவளுக்கு, இரு பேரக் குழந்தைகளையும் பெற்றுவிட்ட அந்தப் பாட்டிக்கு, வாழ்வின் ஏமாற்றம் அப்போதுதான் உறுத்தியது போலும்! மனக்கிளர்ச்சிக்கு இடம் தந்து தளர்ந்து விட்ட இருதயத்துக்கு நிதானம் ஏது, பொறுமை ஏது?

அவள் முகத்தை நிமிர்ந்து பார்த்த ரங்கநாதம் திடுக்கிட்டார். அவள் வாழ்க்கையில் நிறைவைக் காணவில்லை என்பதை அவர் அறியாத போனலும், நகைகள், பட்டுச் சேலைகள் இவை இல்லாத குறையினால் தன்னை அதிகம் வாட்டிக்கொள்கிருள் என்பதை நன்கு உணர்ந்து இருந்தார். மீனவோ, தன் சகோதரி கமலம்மாளோ அவளை அதனல் மரியாதைக் குறைவாக ஏதேனும் சொல்லியிருக்கலாம். அதுவே அவள் வருத்தத்துக்குக் காரணம் என்று நினைத்தவராக அவர், "சே, செல்லம், என்ன இது? விட்டுத்தள்ளு, அவர்கள் எது சொன்னலும் பொருட்படுத்தாமல் இருப்பதுதான் அழகு. உனக்கு நான் சொல்லித்தர வேண்டுமா செல்லம்?..." என்று அவளைச் சமாதானப்படுத்த முயன்றார்.

ஆனல் உள்ளூரக் கனிந்து தகிக்கும் அந்தக் கொதிப்பு அவருடைய இந்த நான்கு சொற்களில் ஆறி விடுமா? அவள் ஆறவில்லை.

அப்போது மீன ஏதோ காரியமாகத் தாம்பாளமும கையுமாக அங்கு வந்தாள். "நீங்கள் சாப்பிட்டாயிற்ரு மாமா?" என்று கேட்டுக்கொண்டு கங்காதரமும் அங்கு வந்தார்.

செல்லம் கண்ணீர்க் கறைபடிந்த முகத்துடன் நிற்பதைக் கண்டு, "என்ன இது?" என்ரூர் சகஜமாக அவர்.

ரங்கநாதம் தலையைக் குனிந்துகொண்டார். செல்லத்தின் கண்ணீர் கங்காதரத்தின் கேள்வியில் இன்னும் பெருகியது. மீன படபடப்பாக ஏதோ சொல்ல வாயெடுத்தாள்,

இந்தச் சமயத்தில்தான் லாலலலா...என்று உல்லாசமாக ஒரு ஹிந்தி மெட்டை இழுத்துக்கொண்டு நிஜாரும் ஜோடுமாக ரவி அங்கு வந்தான். அவனைத் தொடர்ந்து முகம் மலர எளிய தோற்றமுடைய பாலுவும் வந்தான். அவனுடைய கையில் அன்று மாலை வந்த செய்தித்தாள் இருந்தது.

ரவி, மீனு—கங்காதரத்தின் செல்வ மகன். பாலு செல்லத்தின் ஆசை மகன்.

"அப்பா, பாலுவுக்கு 'ஃபஸ்ட்கிளாஸ்'" என்று ரவி சந்தோஷத்துடன் கூவினன்.

'எங்கே?' என்று கங்காதரம் மகிழ்ச்சியுடன் பாலுவை நோக்கித் திரும்பினர்.

செல்லத்தின் கண்கள் கண்ணீரிடையே மலர்ந்து நின்றன. அவளுடைய ஆற்ருமை எங்கேயோ ஓடிவிட்டது. "என் மகன், என் மகன்தான்!" என்ற பூரிப்பில் ஓங்கி நிமிர்ந்து நின்றது அவள் உள்ளம்.

ஒரு பெண்ணுக்கு முதல் ஆதரவும் பெருமையும் தந்தையிடத்தில். அடுத்து கணவனிடத்தில். கடைசியாக அவள் மகனின் பெருமையிலும் ஆதரவிலும் இன்பம் காண்கிருள். முதல் இரண்டு பருவங்களிலும் ஏமாற்றமும் துயரமுமே கண்டிருந்த செல்லத்தின் உள்ளம் தாய்மைக் கொடியில் பசைத்து, மலர்ச்சியை எதிர்பார்த்துத் தளிர்த்தது இயல்பானதுதானே?

## 2

வழக்கறிஞர் என்ற பலகையை மாட்டிக்கொண்டு வருவாய் இல்லாமல் வறண்டு போயிருக்கும் துரதிர்ஷ்டசாலி ரங்கநாதம். அவருடைய முதல் மனைவி சரஸ்வதி சீரும் சிறப்பும் உள்ள இடத்திலிருந்து வந்தவள். தந்தையின் திரண்ட செல்வத்துக்கு உரிய ஒரே மகள். 'பையன் பார்க்க லட்சணமாக இருக்கிருன், சட்டப்படிப்புப் படிக்கிருன், நம் இஷ்டத்துக்கு இணைந்து வருவான்' என்ற

எண்ணத்துடன்தான் சரஸ்வதியின் பெற்றோர் அவரை மருமகனாகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். ஆனால் அவர்கள் நினைத்தபடி ரங்கநாதம் அவர்களுடைய இஷ்டத்துக்கு இணைந்து கொடுக்கவில்லை. தன்மானமிழந்து பெண் கொண்ட வீட்டில் ஐக்கியமாகிவிட அவர் ஒப்பவில்லை. தொழில் நன்கு நடக்காவிட்டாலும் அவருக்கு உண்ண உணவு கொடுக்கும் பிதிரார்ஜித நிலம் இருந்தது. காவிரி நதி ஓடும் அவருடைய பிறந்த ஊரில் அவருக்கு இருக்க ஒரு வீடுமிருந்தது.

சரஸ்வதி பெருமையிலும் ஆடம்பரத்திலும் வாழ்ந்தவளாயிற்றே? அவளுக்கு அந்த எளிய வாழ்க்கை எப்படிப் பிடிக்கும்? அவர்களுடைய இல்லறம் ஒழுங்காக, முழுசாக மூன்று மாதங்கள்கூடச் சேர்ந்தாற்போல் நீடித்ததில்லை. பத்து நாட்கள் சண்டை சச்சரவுடன் அவரிடம் வந்து அவள் குடும்பம் நடத்தினால், மீதி வருஷத்தின் முந்நூற்றைம்பத்தைந்து நாட்களும் பிறந்த வீட்டில்தான் கழிந்தது. இந்தத் தாம்பத்தியத்தில் உதித்த குழந்தை மீனா தந்தையின் வீட்டுக்கே வந்ததில்லை. செல்லத்துக்கும் சீருக்கும் வரும்படியில்லாத வக்கீலிடம் என்ன உண்டு? சரஸ்வதி 'டைபாயிடு' சுரம் வந்து சாகும்போது மீனா பதின்மூன்று வயசுப் பாலிகை. பாட்டி, தாத்தா, அம்மா இவர்களுடைய மனப்பாங்குக் கேற்ப வளர்ந்தவள்தானே அவள்? தந்தையிடம் வந்திருக்க அவளும் அவ்வளவாக ஆசைப்படவில்லை. அவள் ஆசைப்பட்டிருந்தாலும் அருமைப் பாட்டியும் தாத்தாவும் விட்டிருக்கப் போவதில்லை. கணவனுடன் இருந்து வாழவேண்டிய மகளையே அவர்கள் அனுப்பியிருக்கவில்லையே?

சரஸ்வதி இறந்த பிறகு மூன்று ஆண்டுகள் ரங்கநாதத்தின் வாழ்க்கை அல்லலுமில்லாமல் ஆனந்தமுமில்லாமல் ஜீவனற்றுச் சென்றது. ஏழைப் பெண்ணைப் பார்த்து மறுவிவாகம் செய்துகொண்டு இன்பமாகக் காலம் தள்ளலாமே என்று உள்ளத்தில் தலைதூக்கும் ஆசைக்கும், ஊராரும், மேலாக சரஸ்வதியின் பெற்றோரும் என்ன நினைப்பார்களோ என்ற தயக்கத்துக்கும் இடையே

போராடினாலும் அவர் வாயைவிட்டு எவரிடமும் எதுவும் பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால் ஏற்கெனவே துளும்பிக் கொண்டிருக்கும் நீருக்கு ஒரு போக்குக் கிடைத்தால் வெளிப்பட்டு விடுகிறதில்லையா?

மீனாவுக்குக் கல்யாணம் என்று ஒருநாள் அவருக்கு அழைப்பிதழ் வந்தது. மருமகனை பாட்டன் வீட்டார் எங்கிருந்தோ தேடிப்பிடித்து வந்திருக்கவில்லை. ரங்கநாதத்தின் சொந்தத் தமக்கையான கமலம்மாள் அவரைவிடப் பத்து ஆண்டுகள் மூத்தவள். உடன்பிறந்தவளாக இருந்தும் அவள் ரங்கநாதத்திடம் வந்து போய் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவில்லை. மணமாகிப் பாலக்காட்டுப் பக்கம் சென்றபின் கமலம்மாள் தாய் தந்தை இருக்கும் போது ஓரிருமுறைகள் பிறந்தவீடு வந்ததுதான். அவள் கால் வைத்திருந்த இடம் முந்திரியும் மிளகும், மாங்காயும் தேங்காயும், நெல்லும் கதலியும் ஆண்டுதோறும் செல்வத்தைக் குவிக்கும் இடம். அவளைத்தவிர வீட்டை நிர்வகிக்கும் பெண் மக்கள் அங்கு யாரும் இல்லை. எனவே அவள் பிறந்தவீட்டுப் பக்கம் வருவதற்கு சந்தர்ப்பங்கள் இடம் கொடுக்கவேயில்லை. அவளுடைய ஒரே மகனான கங்காதரத்துக்கும் தன்னுடைய மகள் மீனாவுக்கும் கல்யாணம் நடைபெற இருப்பதாக ஒரு அழைப்பிதழே தன்னைத் தேடி வந்திருந்த போதிலும் ரங்கநாதம் மகிழ்ச்சியே கொண்டார். எவருடைய அலட்சியத்தையும் பொருட்படுத்தாமலேயே அவர் திருமண வைபவத்தில் கலந்து கொண்டார். அத்துடன் அவர் திரும்பி இருந்தால் எப்படியோ அவருடைய வாழ்க்கை கழிந்திருக்கும். ஆனால்,

விதி என்று ஒன்று குறும்புச் சிரிப்புடன் காத்திருக்கிறதே? ஆட்டக் காய்களைக் கையாளும் ஆட்டக்காரன் போல் அல்லவோ அது மனிதனின் வாழ்க்கையில் திருப்பங்களை ஏற்படுத்திவிடுகிறது? அவர் எதிர்பாராவிதமாக, அத்தனை நாட்களாக இல்லாதபடி, கமலம்மாள் அவருடைய வாழ்க்கையில் அக்கறை காட்டினாள். தம்பியின் தனிவாழ்வைக் காணச்சகியாத தமக்கையாக அவள் அவரிடம் மறு விவாகப் பேச்சைத் துவக்கினாள்.

"எத்தனை காலம் இப்படிச் சந்நியாசி வாழ்க்கை நடத்தப் போகிறாய்? தலையைக் காலை வலித்தால் உன்னை ஏனென்று கேட்கக்கூடியவர் யார் இருக்கிறார்கள்? உன் உடம்பு என்ன, கல்லால் கட்டிச் சாந்தால் பூசி இருக்கிறதா? வயசுதான் அப்படி என்ன ஆகியிருக்கிறது? இன்னும் நாற்பதாகவில்லையே? ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்துகொள்!" என்று அவள் உபதேசித்தபோது அவர் மௌனமாகவே உட்கார்ந்திருந்தார்.

மௌனத்துக்கு என்ன அர்த்தம் என்பது உலகம் அறிந்த கமலம்மாளுக்கா தெரியாது?

கங்காதரம்—மீனா திருமணமும் வரவேற்பும் கழிந்த மறுமாதமே பேரூர் ஈசுவரன் அறிய ரங்கநாதம் செல்லத்தின் கரம் பற்றினார். அடுத்த வீட்டிலே மதமதவென்று வளர்ந்து நிற்கும் செல்லத்தை மனசில் வைத்துக்கொண்டுதானே கமலம்மாள் தம்பியிடம் மறுமணப் பேச்சையே எடுத்தாள்? நாதியற்ற சமையல்காரியின் மகளுக்கு ரங்கநாதத்தைவிட நல்ல கணவன் எங்கிருந்து வரப்போகிறான்? அவருக்கென்ன, அழகு இல்லையா, படிப்பில்லையா, சொத்தில்லையா?

ஏழைப் பெண் என்ற ஒரு யோக்கியதாம்சமே ரங்கநாதத்துக்குத் திருப்தியைக் கொடுக்கக் கூடியதாக இருந்துவிட்டது. அவரைப் பொறுத்தமட்டில் இல்லறம் அமைதியாகவே ஆரம்பமாகி நடைபெற்றது. அசட்டுப் பிசட்டென்று கனவுகள் கண்டு, அப்படியே வாழ்க்கையையும் நடத்த ஆசைகொண்டலையும் நிலையில்லாத இளம் பருவத்தை அவர் தாண்டி இருந்தார். மனம் பருவகாலச் சுழற்சிகளிலிருந்து விடுபட்டு அமைதியாக நிற்கும் காலம் அது. எனவே அவள் என்ன நினைக்கிறாள், தன்னைப் பற்றியே இன்பக் கனவுகள் கண்டவண்ணம் இருக்கிறாளா என்றெல்லாம் இரண்டாம் மனைவியைப் பற்றிய அதீதமான சிந்தனைகளில் அவர் தன் மனதை உழப்பிக் கொள்ளவில்லை. அவருடைய தேவைகளை அவள் கவனித்து நிறைவேற்றினாள். அவருக்கு அதுவே போதுமானதாக இருந்தது. அவள் மூலமாக அவர் நான்கு

குழந்தைகளுக்கும் தகப்பனுக ஆனுர். மூத்தவள் விமலா; இரண்டாவதாக பாலு: அடுத்து முறையே ஜானகியும் சுந்துவும். பெண்களும் பையன்களும் வளர்ந்தார்கள். வளர்ச்சியின் பாரம் தாங்காமல் வருவாயில்லாத அவருடைய குடும்பம் தாளுகவே வளைய ஆரம்பித்துவிட்டது. விமலாவுக்கு உரிய காலத்தில் ஒரு மருமகனைத்தேடி மணம் செய்விப்பதற்கு அவருடைய குடும்பத்தை உரமூட்டி வளர்த்த பூமியும் கைமாற வேண்டி இருந்தது.

கஷ்ட நஷ்டங்கள் வந்தால் ஒன்றன்பின் ஒன்ருகத் தொடர்ந்து வருவது வழக்கம். ரங்கநாதத்தின் வாழ்க்கை ஓட்டத்தில் ஒரு திடீர்த் திருப்பத்தை ஏற்படுத்தி, பாதையைக் கஷ்டங்கள் நிறைந்ததாகப் பிரித்துவிட்டுக் கைகொட்டிச் சிரித்தது விதி. இல்லாவிட்டால் கால் இடறிக் கீழே விழுவதில்லையா எவரும்? அத்துடன் காலே ஊனமாகிவிடுமா?

ரயில் வண்டியில் ஏறும்போது ஒருநாள் அவர் கால் இடறிக் கீழே விழுந்தார். சுளுக்கிக் கொண்டதுபோல் கால் வலித்தது. வீட்டுக்கு வந்ததும் அதற்கான பரிகாரங்களைச் செய்தார். ஆனுல் முழங்காலில் வீக்கம் கண்டது; வலியால் புழுவாகத் துடித்தார். அந்த ஊரில் புதிதாக வைத்தியம் செய்ய வந்திருந்த இளம் மருத்துவரும் தன்னுலான சிகிச்சைகளைச் செய்து பார்த்தார். வீக்கத்தில் சீழ் கட்டிவிட்டது. திருச்சி நகர வைத்திய சாலையில் ஆறுமாதப் படுக்கையுடன் காலின் சுவாதீனத்தையும் அமைதியையும் இன்பத்தையும் இழந்துவிடும் வரையில் அவரைப்பிடித்த சனியன் விடவில்லை. எலும்பும் தோலுமாகத் தாடி மீசையுடன் அவர் கோலின் உதவி கொண்டு தம் வீட்டுப் படி ஏறுகையில் செல்லமும் அவரைப் பழைய செல்லமாக வரவேற்கவில்லை. அவளுடைய பொலிவு, புன்னகை, பொன்னகை எல்லாவற்றுடன் அவளுடைய பழைய அமைதியான குணமும் போயிருந்தது.

அவளுடைய கஷ்டங்களை அவர் உணர்ந்து இருந்தார். அதனுலேயே அவர் அவள் மனம்விட்டுச் சுடு

சொற்களை உதிர்க்கையில் வாய்திறவாமல் சகித்து வந்தார். ஏற்கெனவே குடும்பச் சுமையைத் தாங்க இந்த வெறும் தொழிலை நம்பிப் பயனில்லை என்று அவர் உருப்படியாக இரண்டு காசு தேடும் வகையில் நான்கு பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லித்தந்து கொண்டிருந்தார். இப்போது ஒற்றைக்காலனுக ஆகிவிட்டபிறகு அவர் நிரந்தர உபாத்தியாயர் உத்தியோகத்துக்குத் தாவிவிட்டார்.

முக்கலும் முன்கலுமாகக் குடும்பம் இந்த நிலையில் அரை வயிற்றுக் கஞ்சிக்குத் தாளம் போடும்போது, பாலுவை உயர்தரக்கல்வி பயிலவிடுவது எப்படி? அவன் பொறி இயல் கல்லூரியிலோ, அல்லது வேறு துறையிலோ இன்னும் சில வருஷங்கள் கல்வி கற்கப் பெரிதும் ஆசைப்பட்டான். சாதகமாக 'இன்டரில்' வேறு முதல் வகுப்பிலும் தேர்ச்சியடைந்துவிட்டான். அவனைக் கலாசாலையில் சேர்த்துப் படிக்கவைக்கவே முதலில் ரங்கநாதத்துக்கு இஷ்டம் இருக்கவில்லை. ஆனால் செல்லத்தின் அதீதமான அன்பில் பொறுப்பறியாமல் வளர்ந்திருந்த அவன் முணுமுணுத்தான். பக்கபலமாகச் சிபாரிசுகள், செல்லத்தின் திடமான பேச்சு எல்லாமாக அவரைச் சம்மதிக்கவைத்திருந்தன. திருச்சிக் கல்லூரியில் இரண்டாண்டுகள் அவன் படித்த நாட்களிலே அவர்கள் திணறிய திணறல் கொஞ்ச நஞ்சமல்ல. குடும்பத்தில் அதன் மூலமாக ஏற்பட்டிருக்கும் கடனலே இன்னும் கடனவே இடமில்லாதபடி வளர்ந்து இருக்கிறது. மேலும், குடும்பக் கஷ்டத்தில் இவ்வளவேனும் நம்முடைய கல்விக்காகப் பெற்றோர் பாடுபடுகின்றனரே என்று மனம் நிறைந்து ஒதுங்கிப்போகும் தன்மை இல்லை பாலுவுக்கு. பணத்தைத் தண்ணீர்பட்டபாடாக வாரி இறைத்துக்கொண்டு உல்லாசமாகத் துள்ளித்திரியும் கல்லூரி மாணவனுக இருக்க முடியவில்லையே என்ற தாபம் அவனைச் சிறு குறையையும் மலையளவுள்ளதாகப் பாராட்டிக் கடுகடுக்கச்செய்தது. பரீட்சை முடிவு வந்ததிலிருந்து அவன் நிலையறியாமல் மேலே என்ன செய்யட்டும், நான் படிக்கத்தான் படிப்பேன் என்றெல்லாம் இரகசியமாகத் தாயையும் தந்தையையும் நச்சரிக்கத் துவங்கிவிட்டான்,

எண்பதாம் ஆண்டுக் கல்யாண வைபவம் ஒருவாறு முடிந்துவிட்டது. உறவினர்கள், நண்பர்கள், கங்காதரத்தின் சங்கீதத்தை ரசிக்கவந்தவர்கள் எல்லோரும் விடைபெற்றுக்கொண்டு கிளம்பிவிட்டார்கள். செல்லம், ரங்கநாதம் முதலியவர்கள்தான் பாக்கி. கங்காதரமாக வந்து, 'பாலு என்ன செய்யப்போகிறான்' என்று கேட்கவில்லை. சகஜமாக மீனு வந்து சின்னம்மாவிடம் அருமைத் தம்பியைப்பற்றி விசாரிக்கப்போகிறாளா? ஆனால் செல்லம் இந்த வைபவத்துக்கு ரங்கநாதத்துடன் கிளம்பிவந்ததே பாலுவின் மேல்படிப்புக்கு உதவிபெறும் நோக்கத்தைக் கொண்டுதான். எனவே அவர்களாக வந்து விசாரிக்க வேண்டும் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை.

"நீங்கள்தான் அவரை அழைத்துக் கேளுங்களேன்? நாம் என்ன, முன்பு கேட்டோமா, பின்பு கேட்கப் போகிறோமா? உடனுடன் ரவி இதே பரீட்சையில் மூன்று வருஷங்களாகத் தோற்கிறான். படிக்கும் குழந்தை, ஆசைப்படுகிறான். கோயம்புத்தூரில் குடித்தனம் வைக்கப் போகிறார்களாம். கொஞ்சம் சிரமம் பார்த்தால் ஆகுமா?" என்று ரங்கநாதத்தை ஆனபடியும் அசைத்தாள் அவள். அவர் பிறந்தது முதல் அதுவரை யாரிடமும் உதவி கேட்டதில்லை. அதுவும் மருமகனிடம் வாய்விட்டுக் கேட்க லஜ்ஜையாக இருந்தது. செல்லத்தின் இடைவிடாத வற்புறுத்தலின் பேரில் கடைசிப் பையன் சுந்துவை அழைத்து, "அத்தானை அப்பா கூப்பிடுகிறார் என்று அழைத்து வாடா!" என்று அனுப்பினார்.

## 3

மாடியில் கங்காதரத்தினிடம் போய் "அப்பா கூப்பிடுகிறார்" என்று சுந்து அழைக்கையில் அவர் மீனுவின் சொற்பிரயோகத்துக்கு இலக்காகி இருந்தார். பையன் வந்து அழைத்ததும் அவள் முடுக்கிவிட்ட யந்திரம் போல் இன்னும் வேகமாகச் சொற்களால் தாக்க ஆரம்பித்துவிட்டாள். "வழவழ, கொழகொழ என்று தலையை ஆட்டிவிட்டு வீண் வம்பை விலைக்கு வாங்கிக்கொள்ளக்கூடாது.

வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று தீர்த்துவிடவேண்டும். ஆமாம், இல்லாவிட்டால் மீறு ரொம்பவும் பொல்லாதவளாக இருப்பேன்!" என்று இறுதியாக எச்சரிக்கை விடுத்தாள். செல்லத்தின் நோக்கம் என்ன என்பது தான் அவளுக்கு முன்பே தெரியுமே?

தலையை ஆட்டிவிட்டு கங்காதரம் ஒருவாறுகக் கீழே இறங்கிவந்தார்.

"ஏன் மாமா? கூப்பிட்டீர்களாமே?" என்று கேட்டுக்கொண்டே ரங்கநாதம் இருந்த அறைவாசல் படியில் வந்து நின்றார். சுவரோரமாக உள்ளே செல்லமும் நின்றிருந்தாள்.

"ஆமாம், உட்காரேன்?" என்றார் ரங்கநாதம்.

அறைமூலையில் ஒரு பலாப்பழத்துண்டு இருந்தது. அதைச்சுற்றி ஈக்கள் மொய்த்துக்கொண்டிருந்தன.

"அந்தப் பழத்துண்டை எடுத்து முதலில் அப்புறப் படுத்து சித்தி, ஏன் இப்படிக் கண்ட இடங்களிலும் பழத் துண்டுகளைப் போட்டு ஈமொய்க்க விடுகிறீர்கள்?" என்றார் சற்றுக் கடுமையாய்.

அவர் மனசில் எதுவுமின்றி சாதாரணமாகத்தான் அதைச் சென்னார். ஆனால் செல்லத்தின் நுண்ணிய அறிவுக்கு அது, 'பலாப்பழத்தில் மொய்க்கும் ஈக்களைப் போல் பணம் உள்ளவனைச் சுற்றி ஏனிப்படி மொய்க்கிறீர்கள்?' என்று அவர் எரிச்சலுடன் கேட்பதுபோல் தொனித்தது.

மௌனமாகவே அவள் அதை எடுத்து அப்புறப் படுத்தினாள்.

கங்காதரம் உள்ளே வந்து உட்கார்ந்ததும், "ஒன்றுமில்லை......எனக்கே எப்படிக் கேட்பது என்று புரியவில்லை" என்று பீடிகையிட்டவராக ரங்கநாதம் மெள்ளச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் இப்படியும் பல்லை

இளித்துக் கேட்கும் காலம் வந்ததே என்ற வேதனை விரவி இருந்தது.

அவருடைய இந்த அநாவசியப் பீடிகை செல்லத்துக்குப் பிடிக்கவில்லை. சட்டென்று அவள், "ஒன்றுமில்லை, பாலுவைப்பற்றித்தான். இன்னும் இரண்டுவருஷங்களும் அப்படியே அங்கேயே ஓட்டிவிடலாம் என்றுதான் நினைத்திருந்தோம், ஆனால் இப்போதெல்லாம் வெறும் பி. ஏக்கு மதிப்பில்லையாமே? அவனும் படித்துவிட்டு வீட்டில் உட்கார்ந்திருந்தால் என்ன செய்வது? கோயம்புத்தூரில் குடும்பம் வைக்கப்போவதாக மீனுவும் அக்காவும் பேசிக் கொண்டிருந்தார்கள். அதுதான் ஒரு சபலம். இன்ஜினீயரிங் படிக்கவேண்டுமென்ற ஆசை அவனுக்கு அதிகம் இருக்கிறது. நீங்கள் என்ன அபிப்பிராயப்படுகிறீர்கள் என்று தெரிந்துதான் மேற்கொண்டு எல்லாம் செய்ய வேண்டும்..." என்று எடுத்த எடுப்பிலேயே கூறிவிட்டாள். ரங்கநாதம் கௌரவத்தை விட்டுக் கொடுத்துக் கொள்ளாமல் அவள் பேசும் திறமைக்கு உள்ளூற வியந்து கொண்டார்.

கூட்டில் சிக்கிக்கொண்ட எலியைப்போல் கங்காதரத்தின் மனம் தத்தளித்தது. சங்கடத்தின் இறுக்கம் தாளாமல் நெற்றியில் குப்பென்று புதிதாக வியர்வைத் துளிகள் அரும்பின. எப்படியோ சமாளித்துக்கொண்டார்.

"சரிதான், ஆனால் இன்ஜினீயரிங் படித்தால் மட்டும் உடனே வேலை கிடைத்துவிடுகிறதா இந்த நாட்களில்? குறைந்தபடிப்பாக இருந்தாலும் எந்தவேலை கிடைத்தாலும் ஒப்புக்கொள்ள மனம்வரும். அதிகப் படிப்புப் படித்தால் அதற்குக் குறைந்த அந்தஸ்தில் வேலை செய்யவும் மனம் வராது. இரண்டும் கெட்டான் பிழைப்பு..." என்று அவர் இழுத்தார்

செல்லத்துக்கு உள்ளம் பொருமியது. இந்த உதவியைக்கூடவா மறுத்துவிடுவார் என்று அவள் நம்பியிருந்தாள்.

வெளியே எங்கோ சென்றிருந்த பாலு இந்த சமயத்தில் அங்கு வரவும் அவளுடைய பொருமல் வெடித்து விட்டது.

இன்னது பேசுகிறோம் என்ற வரம்பை இழந்தவளாக, "எதற்கு வீண் ஆசைப்படுகிறாயடா பாலு? அவர்களால் ஒன்றும் செய்ய முடியாதாம். ஏழை வயிற்றில் பிறந்து விட்டு என்ன ஆசை வேண்டியிருக்கிறது?" என்று படபடத்தாள்.

கங்காதரம் உளறிவிட்டு விழிக்கிறாரா, சமத்காரமாகத் தப்பித்துக் கொள்கிறாரா என்றறிய விரைந்து வந்து கொண்டிருந்த மீனு செல்லத்தின் பொருமல் கேட்டுப் பாய்ந்து வந்தாள்.

"ஏனிப்படிக் காய்ந்து விழுகிறாயாம்? ஆகாது உனக்கு இது! என் அப்பா நன்றாக இருக்கவேண்டும்!" என்றாள்.

இத்தகைய பழிச்சொற்களைச் செல்லம் பொறுப்பாளா?

அழும் குரலில் அவளும் எதிர்ப்பாணம் தொடுக்கையில் பாலுவுக்குக் கோபம் வந்தது.

"என்னம்மா இது? எதற்கு இப்போது அழுது ஆர்ப்பாட்டம் செய்கிறாயாம்? போ இங்கிருந்து!" என்று தாயை அதட்டினான்.

வாழ்வில் வெற்றிகண்டு களிக்கையில் அதன் காரணங்களைப்பற்றி யாரும் அதிகமாக நினைப்பதில்லை. ஆனால் தோல்வியோ, ஏமாற்றமோ கிட்டிவிட்டால் அது எத்தனை காலத்துக்கு முந்தையச் சூழ்நிலையின் காரணமாக ஏற்பட்டதாக இருந்தாலும் விடுவதில்லை. நினைத்து நினைத்து மருகுகிறது மனம். செல்லத்துக்கு அப்போதுதான ரங்கநாதத்தைக் கைப்பற்றியது போலிருந்தது. சேலைத் தலைப்பால் முகத்தை அழுத்திக்கொண்டு அங்கிருந்து அகன்றாள். செல்லம் அங்கிருந்து சென்றபின்னர் கங்காதரத்துக்கு ஏதோ கட்டவிழ்ந்தது போலிருந்தது.

" இதோ பார் பாலு, பெரிய படிப்புப் படித்தால் மட்டும் வேலை சுலபமாகக் கிடைத்துவிடுகிறதா ? இன்னும் மேல்படிப்பு, மேல்படிப்பு என்று நாலைந்து வருஷம் அவதிப்படுவதைக் காட்டிலும் ஏதேனும் ஒரு தொழிற்சாலையிலோ, வியாபார ஸ்தாபனத்திலோ வேலைக்கு நுழைந்தாயானல் சொந்த சாமர்த்தியம் உண்டானல் தானகவே முன்னுக்கு வருகிருய். மாமாவும் அசக்தராகி வருகிருர். குடும்பத்தில் இன்னும் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகள் இருக்கின்றன. ...ஜானகிக்குக் கல்யாணம் செய்ய வேண்டாமா ? எனக்குத் தெரிந்த சில பேர்களிடம் சிபாரிசு செய்கிறேன். ஒரு வேலையில் ஒட்டிக்கொள். உன் திறமையை அதில்காட்டு" என்று மெதுவாக எடுத்துச் சொன்னர். இந்த அபிப்பிராயம் பாலுவுக்குப் பிடித்ததோ இல்லையோ, ரங்கநாதத்துக்குப் பிடித்துவிட்டது. அவன் படிப்பு விஷயமாக உதவி கிடைத்தாலும் இன்னும் நான்கு வருஷங்களுக்கு குடும்பபாரத்தை எப்படித் தாங்குவது ? அவன் வேலைக்குப் போனல் அவனைப்பற்றிய கவலையும் விடும், குடும்பத்துக்கும் கொஞ்சம் ஆதரவு இருக்குமல்லவா ?

" நீ சொல்லுவது உண்மையான விஷயம். பட்டத்திலும் பதவியிலும் என்ன இருக்கிறது ? அதிர்ஷ்டம் என்பது தனியானது. அவள் கிடக்கிருள், எதற்கெடுத்தாலும் அவளுக்கு வரவர ஆத்திரம் வருகிறது. நீ மனசில் வைத்துக் கொள்ளாதே," என்று ரங்கநாதம் மருமகனைச் சமாதானம் செய்யும் தோரணையில் பேசினர்.

ஜன்னலில் சாய்ந்து நின்ற பாலுவின் உள்ளம் ஏமாற்றம் தாளாமல் துடிதுடித்தது. காதுமடல்கள் குப்பென்று சிவந்தன. சரேலென்று வெளியே வந்தான்.

" கங்காதரம் இருக்கிருரோ ?"

படியேறி வந்து கேட்ட கனவானுக்கு பாலு பதில் கூறுமுன் கங்காதரமே வாசலுக்கு வந்துவிட்டார்.

" ஓ, வரவேண்டும், வரவேண்டும், டேய் பாலு ? உள்ளிருந்து நாற்காலியை எடுத்துவா!" என்று வந்தவரை

அவர் தடபுடலாக வரவேற்ருர். பாலுவுக்கு அவரைத் தெரியும். அன்று நடந்த வைபவத்துக்கு அவர் வந்திருந்தார். உணர்ச்சியை விழுங்கியவனுக அவன் கூடத்திலிருந்த நாற்காலியை எடுத்துவந்து வாசல் வராந்தாவில் போட்டான்.

" அக்காவிடம் சொல்லிக் காபி பலகாரம் வாங்கிவா, மரக்கடை கணபதி இவர், தெரியுமல்லவா?" என்று பின்னும் பாலுவின் காதோடு வந்து கட்டளை இட்டார் கங்காதரம்.

'இந்தமாதிரி வேலைகள் ஏவுவதற்கு மட்டும் சகஜம் பாராட்டலாம் போலிருக்கிறது!' என்று மனசுக்குள் முணுமுணுத்தவண்ணம் அவன் உள்ளே சென்ருன்.

கையில் சிற்றுண்டித் தட்டையும் காபியையும் ஏந்தி அவன் வாசலுக்கு வருகையில் மச்சுப்படி வளையின்கீழ் அழுதகண்களும் சிவந்த மூக்குமாகச் செல்லம் நிற்பதைப் பார்க்க நேரிட்டது. அவனுடைய ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு எழும்பியது. பல்லைக் கடித்து அடக்கிக் கொண்டான்.

அவர்கள் வராந்தாவில் இல்லை. அறையில் ரங்கநாதத்துக்கு எதிரே கீழே ஜமக்காளத்தில் அமர்ந்திருந்தனர்.

பெயருக்கேற்ற தோற்றம் பெற்றிருந்த கணபதி தலையை ஆட்டிச் சிரித்துக்கொண்டே, "அவன் என்ன கோர்ஸுக்கு இஷ்டப்படுகிருனே, அதைப் படிக்கட்டுமே? பெண்ணுக்கும் வயசே அதிகம் ஆகவில்லையே? பையனுக்கு வயசு பத்தொன்பதுதானே என்று யோசிக்கவே வேண்டாம்!" என்று அருகில் வந்த பாலுவையும் பார்த்தார்.

பாலுவுக்குக் கையிலிருந்த தட்டு நழுவிவிடும்போல் இருந்தது. அவன் படிக்க உதவி இந்த ரூபத்திலா வர வேண்டும்? மேல் படிப்புக்கு வசதி செய்கிறேன் என்று வலுவில் வந்து ஏன் ஆசைகாட்டுகிருர்? பாலு பார்த்துக்

கொண்டே நிற்கையில், "உங்களுடன் சம்பந்தம் செய்து கொள்வதற்குக் கொடுத்து வைத்திருக்கவேண்டும். கங்காதரத்தின் நண்பர் என்பதே எனக்குப் போதும்..."என்று ரங்கநாதம் இழுத்தார்.

பாலுவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. அவருக்குமா புத்தி கெட்டுப்போகவேண்டும்? முகத்தைச் சுளித்து நேர் எதிரே இருந்த தந்தையைக் கடுமையாக நோக்கினான்.

புன்னகை தவழ்ந்தது ரங்கநாதத்தின் சுருக்கங்கள் கண்ட வறண்ட முகத்தில்.

"ஆனால் நான் இத்தனை சீக்கிரம் பையனுக்கு மணம் செய்ய உத்தேசித்திருக்கவில்லை. எனக்கும் வயசு வந்த பெண் குழந்தை இருக்கிறாள். எனவே.........இது இப்போது உசிதமாகப்படவில்லை!" என்று முடித்தார்.

'அப்பாடா' என்று நிம்மதியாகப் பாலு மூச்சு விட்டான்.

'இவனுக்கும் இத்தனை ராங்கியா?' என்று கேட்பது போல் கணபதி முறைப்புடன் எழுந்து சென்றார்.

## 4

**வா**யு எங்கேயாவும் ஒளிந்துவிட்டானோ, அண்டமே அசைவற்று விட்டதோ என்று தோற்றும்படி அந்த இரவு அத்தனை புழுக்கமானதாக இருந்தது. மனப்புழுக்கத்திலும் வேறு வெதும்பும் ஆத்மாக்களுக்கு அந்த இரவில் தூக்கம் எப்படிவரும்? மனதை ஆட்டி அலைக்கழிக்கும் எண்ணங்களுடன் இரவின் தனிமையிலே புழுங்க வேண்டியதுதானே?

வாசல் வராந்தாவில் ரங்கநாதம் இருந்த அறை வாசல் படிக்கு நேராகத் தலைவைத்துப் படுத்திருந்தாள் செல்லம். உள்ளே ரங்கநாதத்தின் கைவிசிறி ஆடும் ஒலி இரவின் நிசப்தத்தில் 'டொக், டொக்'கென்று கேட்டுக்கொண்டிருந்தது. காற்றில்லாத வெப்ப இரவுகளிலே கொசுவுக்கும

கொண்டாட்டம்தான். 'ஙொய் ஙொய்'யென்று செல்லத்தின் காதுகளைச் சுற்றிச் சங்கீதம் பாடிய அந்த கோஷ்டி அவளைப் போருக்கு அழைத்தது.

"கொசு என்னமாய்ப் பிடுங்குகிறது; இலை அசங்காதோ?" என்று முணுமுணுத்துக்கொண்டே செல்லம் திரும்பிப் படுத்தாள். கண்களை மூடிக்கொண்டு தூங்க முயன்றாள்.

ஆனால் கண்களை மூடிக்கொண்டால் மனம் ஓய்ந்துவிடுகிறதா என்ன? சுற்றிச் சுழன்ற பல்வேறு சிந்தனைகள் அவளைத் தூங்கவிடவில்லை.

தாய்மையில் விளையும் அன்புக்கு வைரம் பாய்ந்த மரத்தின் உறுதிஉண்டு. அதிலும் செல்லத்தின் பெண்ணுள்ளம் ஏற்கெனவே குத்திக் காயப்படுத்தப்பட்டது. எனவே அதில் பூத்திருந்த தாய்மைக்கு அளவிட இயலாத வேகம் இருந்தது. தன்னுடைய ஆசைகளை எல்லாம் திரட்டி அவள் மூத்த மகன் பாலுவின் மீது வைத்திருந்தாள். அவளுடைய கனவுகள் எல்லாம் அவனுடைய எதிர்காலத் திட்டங்களை உருவாக்குவதிலேயேதான் நிறைந்திருந்தன. அதனால் கங்காதரம் கைவிட்ட பின்னரும் அவள் அவனைப் படிக்கவைக்கும் யோசனையைக் கைவிடவில்லை. பதிலாக, கிளறிவிட்ட மண்ணில் செழித்து வளரும் செடியைப் போல ரோசத்துடன் எழுந்தது வேகம். கணபதி வந்து சென்ற விஷயம் தெரிந்ததிலிருந்து அவளுடைய நம்பிக்கை இன்னும் புதிய கோணத்திலேயும் முளைவிட்டது. 'அவர்கள் முகத்தில் அடித்தமாதிரி, எந்தக் காரியத்துக்கு அவர்கள் கைகொடுக்க மறுக்கிறார்களோ, அதே காரியத்தைச் சிறப்புடன் அவர்களுடைய கண் முன்னரேயே நிறைவேற்றாத வரையில் அவளுடைய மனசு ஆறுமா? ரங்கநாதமாகப் பெருமையும் சந்தோஷமும் தாங்காது கணபதி வந்து சென்ற விஷயத்தைப் பற்றித் தன்னிடம் யோசனை கேட்பார் என்று அவள் எதிர்பார்த்திருந்தாள். ஆனால் அவராகவே முடிவு கூறிவிட்டு, அவளிடம் அதைப்பற்றிய பேச்சைக்கூட எடுக்கவில்லை!

அப்படியே விட்டுவிடும் பொறுமை ஏது அவளுக்கு?

அலுப்புடன் ரங்கநாதம் கைவிசிறியைக் கீழே போட்டார்.

தன்னைமீறிச் செல்லம் மனசில் குடைந்து கொண்டிருந்த கேள்வியைக் கேட்டுவிட்டாள்.

"ஆமாம், அவருக்கு ஏன் அப்படிப் பிடி கொடுக்காமல் விட்டுவிட்டீர்கள்? அவனுக்குப் படிக்கவேண்டும் என்ற ஆசை அடங்காமல் இருக்கிறது. பெண் சிறு வயசுதானுமே?..."

அந்தப் பேச்சைக் கேட்ட உடனேயே அவர் பதிலை எட்டிக்காயைக் கடித்துத் துப்புவதைப்போல் துப்பினார்.

"சே, அசடு. நான் பட்டது போதும். இப்போதே படிக்கவைக்க ஏற்றுக் கொள்கிறேன் என்றால் என்ன அர்த்தம் தெரியுமா உனக்கு?"

"என்ன அர்த்தமாம்?"

"மகனை நாம் உயிருடன் இழந்துவிட வேண்டும் என்று அர்த்தம்!"

"கன்னு பின்னுவென்று பேசாதீர்கள்! பாலு ஒன்றும் அப்படிப் பெற்றவரை மறந்துவிடமாட்டான்!"

"உனக்குத் தெரியாது செல்லம்; அவன் மறந்து விடுவானென்று நான் சொல்லவில்லை. ஆனால் வேறு வழியிருக்காது. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவிப்பான். மாட்டை விலைக்கு வாங்கி நன்றாகக் கறக்க வேண்டுமென்று தீனியும் போடுகிறோம். அது பால் கொடுக்கும் பருவம் வந்ததும் அது வளர்ந்த முந்தைய இடத்துக்கு ஓட்டிவிடுவோமா? சொல்லு, மனம் வருமா?"

இந்த உபமானத்தை அவள் கொஞ்சமும் ஒப்பவில்லை.

"ஆமாம், உங்களுக்கு அவன் முன்னுக்கு வருவதில் இஷ்டமில்லை. மாடு வாங்குவதும் மருமகனைப் படிக்க

வைப்பதும் ஒன்றாகிவிடுமாக்கும்!" என்றாள் குரோதத்துடன்.

"வீணாக உன் மனசையும் அலட்டிக்கொண்டு என்னையும் வருத்தாதே. அவனுக்கு இனிமேல் படிக்க வசதி கிடையாது. என்னுடைய சக்தி அவ்வளவுதான். நான் பட்டது போதாதா? குழந்தைப் பையன் அவன், கல்யாணமாம், கல்யாணம்! ஒரு பெண், பிறந்த வீட்டுச் செல்வாக்கு, ஒரு வேளையில் அவள் என்னை மதித்துப் பேசினாளா? பட்டினி கிடந்தாலும் தன் மதிப்பையும் சுயமரியாதையையும் இழக்காமல் இருப்பது, அவற்றை இழந்துவிட்டுக் காரில் பவனிபோய் ஆயிரமாயிரமாய்ச் சம்பாதிப்பதைவிட மேல். இப்போது கெஞ்சுகிறானே, இந்த மனிதன் நாளைக்குக் கல்யாணம் ஆனபின் உன்னையும் என்னையும் மதிப்பான் என்று நீ நினைக்கிறாயா? உன்னை அவர்கள் வீட்டு வேலைக்காரியையும் விடக் கேவலமாக மதிப்பார்கள்!" என்றார் அவர் காரமாக. தன்னுடைய அநுபவத்தில் மூழ்கி அவர் கண்டு தந்த இந்தச் சொற்களும் செல்லத்துக்கு உறைப்பதாக இல்லை.

"மதிக்காவிட்டால் போகிறார்கள். குழந்தை முன்னுக்கு வருவானோ இல்லையோ?" என்று கேட்டது, தாய்மையின் பரிதாபம் நிறைந்த அந்தக் குரல்.

ரங்கநாதத்துக்கு ஆச்சரியமாக இருந்தது.

"செல்லம், நீ அறிந்துதான் பேசுகிறாயா? இங்கேயே அவமானம், அலட்சியம் பொறுக்கவில்லை என்கிறாய். இதைக் காட்டிலும் கௌரவமான, நேருக்கு நேர் சமமான ஸ்தானத்தில் இருக்கும்போது அவமரியாதைகளைப்பற்றி லட்சியம் இல்லை என்று பேசுகிறாயே? பட்டினி கிடந்தாலும் பொறியில் உள்ள தீனிக்கு எந்தப் பிராணியும் ஆசைப்படாது" என்றார் அவர் மீண்டும்.

"ஆமாம், உங்களுக்குப் பேசத் தெரிகிறது, பேசுகிறீர்கள். உங்கள் மகள் சீரும் செல்வமுமாகக் கொழிக்கிறாள். உங்களுடைய காரியம் நிறைவேறிவிட்டது. என்னுடைய குழந்தைகள் எப்படிப் போனால் உங்களுக்

கென்ன ?'' என்று கண்ணீராகிய புகையைக் கக்கிக் கொண்டு 'உன், என்' என்று பேதமான வார்த்தைக் குண்டுகள் அவளுடைய நெஞ்சத்திலிருந்து வெடித்தன.

திடீரென்று வான் நிலை மாறியது. காற்று 'உஸ்'என்ற சத்தத்துடன் மரங்களின் கிளைகளைச் சுழற்றி வீசச் செய்து செத்தைகளையும், புழுதியையும் கிளப்பி வான மண்டலத்தை மறைக்கச் செய்தது. அடிவானிலிருந்து கண்களைப் பறிக்கும் ஒளியுடன் மேலே எழும்பி மின்னி விட்டு ஒரு கணத்தில் மறைந்தாள் மின்னல்கொடி. தொடர்ந்து அவளுடைய காதலன் பயங்கரமாக முழங்கி முரசம் கொட்டினான். சடபடவென்று பனிக்கட்டிகள் விழப் பெருமழை பெய்தது.

மறுநாள் காலை. கங்காதரம் அன்றுமாலை மதுரை செல்ல இருந்தார்.

இதை அறிந்திருந்த ரங்கநாதம் முன்னதாகவே தாம் புறப்படப் போவதாக கங்காதரத்திடம் தெரிவித்தார்.

'சரி' என்று உடனே சொல்லிவிட்டால் அது மரியாதையாகுமா?

"இருக்கட்டுமே மாமா? நீங்கள் எங்குமே வராதவர்கள். ஒரு மாசம் இருந்துவிட்டுப் போகலாமே? இப்போது போனால் எப்போது வரப்போகிறீர்கள்?'' என்றார் கங்காதரம்.

மருமகன் சொன்னதற்காக உடனே ஒரு மாசம் தங்கி விட உத்தேசித்துவிடலாமா? ரங்கநாதமும் தன் பெருந் தன்மையைக் குறைத்துக் கொள்ள விரும்பவில்லை. இளைய மகள் ஜானகியை ஊரில் தனியே விட்டு வந்திருப்பதைக் காரணமாக எடுத்துக் காட்டியும், மூர்த்தியும் விமலாவும் கோவையில் அவசியம் இறங்கித் தங்கிப் போகவேண்டும் என்று வற்புறுத்தி இருப்பதை எடுத்துக் கூறியும், அன்றே புறப்படுவதாக முடிவு கூறிவிட்டார்.

"பாலுவுக்கும் கூட இப்போது அவசரமா? அவன் கொஞ்ச நாட்கள் தங்கக்கூடாதா? ரவியும் ஒத்தவனாக

இருக்கிறுன்..." என்று அருகில் நின்ற பாலுவைப் பார்த்துக் கேட்டார் கங்காதரம்.

"இல்லே அத்தான், எனக்கும் போகத்தான் வேண்டும், ஊரில் கொஞ்சம் வேலே இருக்கிறது..." என்று அவனும் இழுத்தான்.

வேலே என்பது வெறும் சாக்கு, அங்கு தங்க அவனுக்கு இஷ்டமில்லே என்பது கங்காதரத்துக்கு நன்ருகத் தெரியும். அதேபோல அவரும் அத்தியந்த அன்புடனே, ஆசையுடனே தன்னே இருந்துவிட்டுப் போகும்படி வற்புறுத்தவில்லே, வெறும் உபசாரத்துக்குத்தான் சொல்லுகிருர் என்பது பாலுவுக்கும் தெரியாமலில்லே. மரியாதை, அன்பு என்பதெல்லாம் இந்நாட்களில் வாய்ச்சொல்லளவிலும், அலுங்காத உடுப்பளவிலும், போலி நடிப்பளவிலும்தானே ஓங்கி வருகின்றன?

முதல்நாளிரவு அத்தனே மழை பெய்திருந்தும் வெயில் சுரீரென்று மண்டையைத் தாக்கியது.

பஸ் நிலேயத்தில் கங்காதரம் நின்று கொண்டிருந்தார்.

ரங்கநாதம் சௌகரியமாக ஏறி உட்கார்ந்துவிட்டார். பின் வரிசை ஆசனமொன்றில் அமர்ந்திருந்த செல்லம் பக்கத்தில் தெரிந்த ரயில்வண்டி நிலேயத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பார்வைக்கு அவளுடைய வயசுக்கு அவள் அதிகம் முதுமை அடைந்துவிட்டாற் போலத் தோன்றியது. ஏழைமையும் கவலேயும் துயரமும் அவளுடைய செந்தாழை மடலே ஒத்த மேனியிலும் முகத்திலும் சதைப்பற்றை உறிஞ்சிச் சுருக்கங்களே இட்டிருந்தன. 'பளிச்' சென்று நெற்றியிலே ஒளிர்ந்த குங்குமம் ஒன்றே அவளுடைய ஆபரணங்கள் இல்லாத குறையை ஈடு செய்து கொண்டிருந்தது.

கங்காதரத்தின் சிந்தனேக்கொடி அவளேப்பற்றியே ஓடிக்கொண்டிருக்கையில் பஸ் கிளம்புவதற்கு அடையாளமாக உறுமியது.

"போய்க் கடிதம் போடுங்கள், ஊருக்குப் போனதும் என்ன செய்யப்போகிருய் என்பதை விவரமாக எழுது பாலு!" என்று அப்போதுதான் நினைவில் வந்ததுபோல அவர் உரத்துக் கூறினர்.

அவர் பேச்சுக்கு ரங்கநாதம் தலையை ஆட்டுகையி லேயே பஸ் நகர்ந்துவிட்டது.

அவர்கள் போய்விட்டார்கள்.

மழை பெய்து அடங்கிய பின்னும் ஏன் வெப்பம் தணியவில்லை ?

கங்காதரம் ஆருத மனசுடன்தான் வீடு திரும்பினர்.

## 5

பகல் இரண்டு மணியிருக்கும். ரங்கநாதம் முதலியவர் களைச் சுமந்துவந்த பஸ் கோவை நிலையத்தில் வந்து நின் றது. வண்டிக்காரர்களும் கூடைக்காரர்களுமாகச் கசகச வென்று குழுமியிருந்த அங்கு விமலாவின் கணவன் மூர்த்தி தலையில் துண்டை மடித்துப் போட்டுக்கொண்டு வெயிலைத் தடுத்தவண்ணம் சைகிளைப் பிடித்துக்கொண்டு நின்ருன். அன்றையப் பகலுக்குக் காரியாலயத்துக்கு லீவு போட்டுவிட்டு அவன் அவர்களை வரவேற்க வந்திருந் தான்.

"மூர்த்தி வந்திருக்கிருனு பாரடா பாலு!" என்று கூவிய ரங்கநாதம் கைத்தடியை ஊன்றிக்கொண்டு பஸ் ஸைச்சுற்றிக் குழுமியிருந்த கூட்டத்தினிடையே தம் பார் வையால் துழாவினர்.

இதற்குள், "ஹலோ, இதோ, பாலு!" என்று கூட் டத்தையும் வண்டிக்காரர்களையும் தாண்டி நடைபாதையில் நின்ற மூர்த்தியின் குரல் அந்த இடத்தின் இரைச்சல்களை எல்லாம் அமுக்கிக்கொண்டு ஒலித்து, பாலுவை அவன் இருந்த பக்கம் தாவிவரச் செய்தது.

"கன்கிராஜுலேஷன்ஸ், முதல் வகுப்பு போலிருக்கிறதே?" என்று அவன் முதுகில் மூர்த்தி மகிழ்ச்சியுடன் தட்டினன்.

ரங்கநாதம் கழியை ஊன்றிக்கொண்டு மெள்ள நடைபாதைக்கு வந்தார்.

"சாமான்களைப் பார்த்து இறக்குங்கள்," என்று கூறிவிட்டு மூர்த்தி, "ஏ, ஜட்கா? 'விநாயகா காலனி' என்ன கேட்கிருய்?" என்று வண்டி பேசலானன்.

பள்ளி முடிவுப் பரீட்சை தேறியபின் உயர்தரக் கல்வி கற்க வசதியின்றி சுருக்கெழுத்தும் 'டைப்பும்' பயின்று வேலை கிடைக்காமல் மாதக்கணக்கில் அலைந்தபிறகு 'சர்வீஸ் கமிஷன்' பரீட்சை கொடுத்து சர்க்கார் காரியாலயம் ஒன்றில் புகுந்து வேலை செய்யும் அடிப்படைக் குமாஸ்தா மூர்த்தி. முப்பது ஆண்டுகளைக் கடக்குமுன் கன்னம் ஒட்டித் தலை நரைத்து, இளமையின் கனவுகளெல்லாம் வாழ்க்கையில் பொய்த்துவிடும் உண்மையை நிதரிசனமாக அநுபவித்து உணரும்படி ஒன்றையொன்று எட்டிப்பிடிக்க இயலாத குறைந்த வருமானத்துக்கும் நிறைந்த செலவுக்கும் இடையே ஒவ்வொரு மாதமும் போராடும் கோடிக்கணக்கான இந்தியப் பிரஜைகளில் ஒருவன். வாழ்க்கையின் வழவழப்பான பாதையில் உல்லாசமாகச் செல்லப் பசைஇன்றியும், கரடுமுரடான கட்டைவண்டிப் பாதையில் செல்லத் துணிவின்றியும் நடுநிலையில் ஊசலாடிக்கொண்டு மாதத்தில் மூன்று வாரங்களைக் கழிந்ததே என்று தள்ளும் மத்தியதரக் குடும்பங்கள் பல நிறைந்த 'விநாயகா காலனி' யில் அவன் குடியேறி ஐந்தாறு மாதங்களே சென்று இருந்தன.

வாசலில் ஒரு சிறிய வராந்தாவும் இரண்டு அறைகளுமே கொண்ட அந்தச் சிறிய வீட்டை எத்தனை கச்சிதமாகவும் சுத்தமாகவும் வைத்துக்கொள்ள முடியுமோ அந்த அளவுக்கு வைத்துக்கொண்டு கூடுமானவரை அவர்கள் இருவரும் தங்கள் குழந்தைகளுடன் சந்தோஷமாகவே இருந்துகொண்டிருந்தார்கள். நகர எல்லையைத்தாண்டி

அந்தக்காலனி இருந்ததால் அங்கு தண்ணீர்க் குழாய் வசதி இருக்கவில்லை. பொதுவாக இருந்த கிணற்றிலும் நீர் இருக்குமிடம் கண்ணுக்குத் தெரியாது. மகள் ஒரு சுமை கயிறுடன் தண்ணீர் இறைக்கப்புறப்படும் காட்சி ரங்கநாதத்துக்கு சகிக்க முடியாததாக இருந்தது. அவர் மகளின் வீட்டையோ, அவள் கணவனுடன் குடும்பம் நடத்துவதையோ அதற்குமுன் வந்து பார்த்தவரல்ல. தன்னைப் பற்றியே அவர் அதுவரையில் மிகவும் தாழ்வாக நினைத்திருந்தார். நீருக்கும், இடத்துக்கும், அன்றாடத் தேவைகளுக்கும்கூடத் தாராளம் இல்லாதபடி அவர்கள் கஷ்டப்படுவதைக்கண்டு மிகவும் துயருற்றார். பிஞ்சுவிட ஆரம்பித்திருக்கும் இள மரங்கள் சுருங்க ஆரம்பித்துவிட்டால் மீதிக் காலம் எப்படி? மூர்த்தி சுபாவத்தில் மிகவும் இனியவன். விமலாவும் அவனுக்கேற்றவள். இல்லாவிட்டால் அந்தச் சிறிய வீட்டில் அவர்களை அத்தனை அன்புடன் வரவேற்று உபசரிப்பார்களா?

ரங்கநாதம் மனசுக்குள் மகளைப்பற்றி இவ்வாறு சலித்து இருக்கையில் செல்லம் நேர் மாறான நிலையில் இருந்தாள். கபடில்லாது கலகலவென்று பேசும் மருமகனிடமும் அன்புடன் ஓடிஓடி உபசரித்த மகளிடமும் அவள் மிகுந்த சந்தோஷம் கொண்டாள். பாலுவுக்கும்கூட இந்த சகஜமான, மனம்விட்டுப் பேசக்கூடிய சூழ்நிலையில் உற்சாகமாக இருக்க முடிந்தது. அன்றிரவு சாப்பிட்டான பிறகு எல்லோரும் சூழ்ந்து உட்கார்ந்து பேச ஆரம்பித்தனர்.

"......அப்புறம் பாலு என்ன செய்யப்போகிறான்?" என்று மூர்த்தி சிரித்துக்கொண்டே பிரச்னையைத் துவக்கி வைத்தான்.

ரங்கநாதம் மௌனமாக இருந்தார். பாலு தந்தையைப் பார்த்தான்.

சமையலறை மறைவில் உட்கார்ந்திருந்த செல்லம் துடிப்புடன் மகனை நோக்கினாள்.

"என்ன, 'ஆர்ட்ஸ் கோர்ஸா, ஸயன்ஸா'?" என்று மூர்த்தி மீண்டும் கேட்டுப் புன்னகை செய்தான்.

ஒன்றுமில்லை என்று சட்டென்று சொல்லிவிட பாலுவுக்கு மனம் வரவில்லை. "இன்னும் ஒன்றும் நிச்சயப்படவில்லை" என்றான்.

"என்ன செய்வதப்பா, இந்த இரண்டு வருஷங்களே சிரமமாகப் போய்விட்டது. ஜானகிக்கும் வேறு கல்யாணம் செய்யவேண்டும். இந்த நிலையிலே, நீதான் சொல்லேன், அவனை எப்படி மேலே படிக்கவைப்பது?" என்றார் ரங்கநாதம். திடுக்கிட்டவன்போல் மூர்த்தி பாலுவையும் ரங்கநாதத்தையும் மாறிமாறிப் பார்த்தான். "என்ன இப்படிச் சொல்லிவிட்டீர்கள். பாதிக்கிணறு தாண்டுவதில் என்ன உபயோகம்? அப்படியானால் நீங்கள் இந்த யோசனையை அப்போதே செய்திருக்கவேண்டும். இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன, எப்படியோ முட்டி மோதிப் பாதியையும் முடிக்காமல் தளர்ந்து விட்டீர்களே? அப்படியானும் நஷ்டப்பட்டுவிட்டீர்களா, முயற்சியைக் கைவிட்டுவிட?" என்று அடுக்கினான்.

தன்னை எங்கேவந்து அண்டிவிடுவானோ என்ற பயம் அன்று கங்காதரத்தை வேறுவிதமாகப் பேசச் செய்தது. மூர்த்திக்கு அந்தத் தயக்கமில்லையே? மனசில் பட்டதைச் சொல்லிவிட்டான்.

ஆனால் அலைகடலில் தத்தளித்துக் கொண்டிருப்பவன் ஒரு துரும்பு கிடைத்தாலும் விட்டுவிடுவானா? இந்தத் துரும்பு நம்மைக் காப்பாற்றுமா என்று அவன் சிந்திப்பதில்லையே? மூர்த்தியின் இந்தச் சொற்களே செல்லத்துக்குத் தெம்பளிக்கப் போதுமானதாக இருந்தன.

"அப்போதே யோசனை இல்லை. இந்த லட்சணத்துக்குக் காலேஜிலேயே சேர்ந்திருக்கவேண்டாம்" என்று கூறுகையில் பாலுவின் முகம் வாடிவிட்டது.

"சேசே, நீங்கள் இப்போது விடக்கூடாது. இப்போது கஷ்டப்பட்டால் பின்னுக்கு எத்தனையோ சௌகரியம்,

பட்டதாரி என்றால் முதலில் குமாஸ்தாவாகப் போனாலும் முன்னுக்குவர வழி இருக்கிறது. எங்களைப் பாருங்கள். வருஷம் முந்நூற்றறுபத்தைந்து நாட்களும் வெறுக்காமல் அலுக்காமல் உழைக்கிறோம். என்றாலும் முன்னுக்குப் போக வழியில்லை. உயர்ந்த ஸ்தானங்களில் காலி நேரிடும் போதெல்லாம் வெளியிலிருந்து புதிய பட்டதாரிகளை எடுக்கிறார்கள். இல்லாவிட்டால் பட்டதாரியாக இருப்பவனுக்கு உத்தியோக உயர்வு கிடைக்கிறது. வேண்டாம், பாலுவை எப்படியேனும் இன்னும் இரண்டு வருஷங்கள் படிக்கவைத்து ஒரு பட்டதாரியாக ஆக்கிவிடுங்கள். இத்தனை கேவலமில்லை. நாளைக்கு அவன் குடும்பத்தலைவனாக நான்கு குழந்தை குட்டிகளுடன் வரும் சம்பளம் வாய்க்கும் வயிற்றுக்கும் எட்டுமுன் மாயமாகப் பறந்துவிடுகையில் படும் சிரமத்தை நினைத்துப் பாருங்கள்!" என்று தன்னுடைய சொந்த அநுபவம்தரும் உணர்ச்சியின் வேகத்திலே மூர்த்தி பொழிந்து தள்ளினான்.

ரங்கநாதத்துக்கு இதுவும் உண்மை என்றே பட்டது. ஆசைக்கும் துன்பத்துக்கும் இடையே தொங்கலாடும் மனசுக்கு யார் யார் எவ்வெப்போது எப்படி எப்படிச் சொல்லுகிறார்களோ அதெல்லாம் அவ்வப்போது சரியானதுபோல் தோற்றும் போலும்!

செல்லமோ தன்னையும் மீறி இரைந்து பேசியிராத அந்நிய மருமகனிடம் பேசிவிட்டாள்.

"அதுதான் நானும் சொல்கிறேன். இதுபோல ஊருடன் வீட்டுடன் இருந்தால் படிக்கவைப்பதும் காலேஜுக்குப் போய்வருவதும் சிரமமாகத் தெரியாது. வண்டியேறிப் போக வேண்டியிருக்கிறது. என்ன செய்வது?... ஒரு உறவு மனிதர் என்று யாரேனும் ஒத்தாசை செய்தாலும் படிக்க வைக்கலாம்...!" என்று நெடுமூச்செறிந்தாள்.

'உறவு மனிதர்' என்று அவள் குறிப்பிட்டதை லேசாகக் கங்காதரத்தைக் குற்றம் சாட்டுவதாகவே எல்லோரும் அந்தச் சமயம் நினைத்தார்கள்.

'இவளை யார் முந்திரிக்கொட்டைபோல அந்த அவமானத்தை முந்திக்கொண்டு இங்கே சொல்லிக்கொள்ளச் சொன்னார்கள்,' என்று பாலுவுக்குக் கோபமும்கூட வந்தது.

ஆனால் அவளுடைய அந்த வார்த்தைக்கு உண்மையான அர்த்தம் வேறு இருந்தது. மறுநாள் அவர்கள் தங்கள் ஊரைநோக்கி ரயிலில் பிரயாணம் செய்துகொண்டிருக்கையில் அவள் தன் எண்ணத்தைச் செயலாற்றும் முயற்சியில் இறங்கினாள்.

"விமலா என்னிடம் படித்துப்படித்துச் சொன்னாள். உடன் பிறந்தவர் என்று இருந்தால் ஒருவருக்கொருவர் உதவிக்கொள்ள மாட்டார்களா? இப்போது என்னம்மா? என்று இன்னொரு யோசனையும் கூடச் சொன்னாள்..." என்று செல்லம் பீடிகையிட்டதும் முழுப்பட்டினி கிடப்பவன்முன் ஒரு அவல் வந்து விழுந்தாற்போல பாலுவுக்கும் ரங்கநாதத்துக்கும் ஆவல் துடித்தது.

"விமலாவா? என்ன சொன்னாள்?" என்று ரங்கநாதம் முகத்தில் ஒளிபடர விசாரித்தார்.

"ஏனம்மா, நீங்கள் சம்பளமும் கட்டிப் புத்தகமும் வாங்கித் தந்துவிட்டால் வீட்டோடு வீடு, சோற்றோடு சோறு, இங்கு எனக்கென்ன அவன் தனிப்பாரமா, அதற்காக அவன் படிப்பை நிறுத்தலாமா என்று கேட்டாள்"... ரங்கநாதத்தின் ஆவல் வந்த சுருக்கில் சப்பென்று வற்றிவிட்டது.

"சேசே, பாவம் குழந்தை, அவளே கஷ்டப்படுகிறாள், சின்ன இடம், மட்டுச் சம்பளம், அவள் தெரியாமல் ஆதங்கத்தில் சொல்லுகிறாள், அவன்வேறு..."—அவர் முடிக்குமுன் செல்லம் குறுக்கிட்டாள்.

"அவரே தான் சொன்னாராம்! நானாகச் சொல்லுவது நன்றாக இருக்காது, நீயே சொல் என்றிருக்கிறார். சின்ன இடம் என்ன? பட்டண வாசத்தில் வாடகையை நிறையத்

தந்தாலும் அப்படித்தான் கிடைக்கிறது. எப்படியோ பல்லேக்கடித்துக்கொண்டு...''

"என்ன செல்லம், இங்கிதம் தெரியாமல் பேசுகிருய்? இரண்டு வருஷகாலம் பல்லேக்கடிக்க முடியும் காலமா? அவனே சொன்னாலும் நாம் யோசிக்கவேண்டாமா?''

"ஆமாம், நீங்களாகவும் ஒன்றும் செய்ய மாட்டீர்கள், பிறராகச் செய்ய வருவதையும் இப்படி ஏதானும் சொல்லித்தடுப்பீர்கள். உண்மையில் அவன் முன்னுக்கு வர வேண்டும் என்ற கருத்து உங்களுக்கே இல்லே. அவன் என் வயிற்றில் பிறந்தவன்தானே? உங்கள் பணக்கார அக்காவும் மகளும் உதவவில்லே. அதைக் குத்திக் காட்டுவதுபோல இந்த ஏழைப்பெண் தன்னுலானதைச் செய்கிறேன் என்று வரும்போதும் ஏற்கக்கூடாது என்கிறீர்கள்...''

நிஷ்டூரத்தைச் சொற்களிலே பதித்து, கண்களிலே ஒருதுளி நீரையும் காட்டிவிட்டாள் அவள்.

ரங்கநாதத்துக்கு அவளுடைய நிஷ்டூரம் ஒருபுறம் உறுத்தியதைவிட, அவ்வளவு சுலபமாக அவளுடைய எண்ணம் எத்தனே நுட்பமாகப் போகிறது என்ற துயரம் கலந்த வியப்புத்தான் மேலோங்கியது.

பெண்ணின் இந்த இறுதி அஸ்திரம் எந்தத் தாம்பத்தியப் போர்க்களத்தில்தான் தோல்வியடைந்திருக்கிறது?

ஊர்வந்து சேர்ந்ததும் செல்லத்தின் வார்த்தைகளின் சாராம்சம் அடங்கியதொரு கடிதம் மூர்த்திக்குப் பறந்தது. அநுகூலமான பதில் சுருக்கமாக வரவே, பாலு கல்லூரியில் சேர்ந்து பி. ஏ. படிப்பது என்று முடிவாயிற்று.

'அவர்களுடைய கண்முன்னே என் குழந்தையை அதே கோயம்புத்தூரில் படிக்கவைப்பேன்!' என்று செல்லத்தின் உள்ளம் எக்களிப்புடன் கூறிக்கொண்டது,

## 6

சாதாரணமாகப் பதினெட்டு வயதிலேதான் ஆண் விளையாட்டுப் பருவம் மாறி உலகத்துள் வருகிறன். உலக அநுபவத்தில் புரண்டு அவனுடைய இளமை வேகம் ஒரு நிலைக்கு வருவதற்கு இன்னும் சில ஆண்டுகள் பிடிக்கின்றன. ஆனல் பெண், அதே பிராயத்தில் இன்பம், துன்பம் இரண்டையும் அளவுமீறிக் காட்டாமல் அடக்கிக்கொண்டு குடும்பத்தேரை இழுத்துச் செல்லும் பொறுப்பை அடையத் தகுதி பெற்றுவிடுகிருள். அதிலும் அதிகம் வசதிகளில்லாத குடும்பங்களிலே நெருக்கமாக வளரும் பெண் குழந்தைகள் இயல்பாகவே நுண்ணிய அறிவும் நிதான புத்தியும் உடையவராக இருந்துவிட்டால் தங்கள் குடும்பங்களின் உண்மை நிலையை வெகுசீக்கிரம் உணர்ந்து விடுகிருர்கள்.

இப்படிக் குடும்பத்தில் ஒவ்வொருவர் நிலையையும் அணு அணுவாக ஆராய்ந்து தன் பிராயத்துக்கு மீறிய பொறுப்பையும் புத்தியையும் அடைந்த பெண் ஜானகி. பாலுவைவிட அவள் இரண்டாண்டுகள் இளையவள்தான். எல்லோரையும்போல அவளுக்கும் இளமையில் எழும் ஆசைகள் இல்லையா? ஊருக்குப்போகவேண்டும், அக்கா அத்தான் எல்லோருடனும் சந்தோஷமாகச் சில நாட்கள் கழிக்கவேண்டும் என்று அவளுடைய உள்ளத்திலும் ஆவல் இல்லையா? இருக்கத்தான் இருந்தது.

ஆனல், தாயும் தந்தையும் எவ்வளவுக் கெவ்வளவு செலவைக் குறைக்க முயன்ருர்கள் என்பதை அவள் அறிவாள். மேலும் எந்த நோக்கத்துடன் அவர்கள் தாத்தாவின் எண்பதாம் ஆண்டுக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளச் செல்லுகிருர்கள் என்பதையும் அவள் உணர்ந்திருந்தாள். எனவே பெற்ருேர் வற்புறுத்தாமலேயே அவள் ஊரில் தங்கிவிட்டாள்.

பொறுப்பை உணர்ந்து தன்னுடைய ஆசைகளை அடக்கிக்கொண்டு பிறருக்கு விட்டுக்கொடுக்கும் தன்மை அவளுடனேயே பிறந்ததோ என்னவோ?

அன்று பிற்பகல் ஒரு மணி இருக்கும். அவர்களுடைய வீட்டின் கொல்லைப்புறம் ஓடும் கால்வாயில் முழங்கால் அளவு நீரில் நின்றுகொண்டு ஜானகி துணி துவைத்துக்கொண்டிருந்தாள். அந்த நேரத்திலே வாய்க்கால் துறையிலே அக்கம்பக்கங்களில்கூட யாரும் இருக்கவில்லை. ஆனிமாதக் கடைசியாதலால் வாய்க்காலில் புதுத்தண்ணீர் இரண்டு தினங்கள் முன்புதான் விடப்பட்டிருந்தது. கரையோரம் செழித்து வளர்ந்திருந்த செவ்வரளிச் செடிகளில் கொத்துக் கொத்தாகப் பூக்கள் மலர்ந்திருந்தன. வாய்க்காலின் ஒருபுற மேடு முழுதும் வெயில் தெரியாமல் குளுகுளுவென்று வைத்திருக்கும் அடர்ந்த தென்னந்தோப்பில் மட்டைகள் ஒன்றோடொன்று காற்றில் உராயும் போது ஏற்படும் ஓசையும், மறுகரையில் மடை வழியாகக் கொடிக்காலுக்கு நீர்பாயும் சலசலவென்ற சத்தமும் அந்தப் பிற்பகல் வேளையில் இனிமையாக ஒலித்தன.

ஜானகியின் சந்தணநிற மேனியை ஒரு மெல்லிய மில்-சிற்றுடை அலங்கரித்தது. நீண்ட அமைதி தவழும் விழிகள்; இன்னும் வளர்ச்சியை முற்றிலும் பெறாத உடற்கட்டு. காதிலே மினுக் மினுக்கென்ற சிறிய ஒற்றைக்கல் சிவப்பு நட்சத்திரத்தைத் தவிர வேறு ஒரு ஆபரணமும் அவளுடைய மேனியில் இருக்கவில்லை. எப்போதும் அவள் துணி துவைக்கும்போது லொடக் லொடக்கென்று மணிக்கட்டில் வந்துவிழும் ஒற்றைப் பொன் வளையலும் கூட இப்போது இல்லை. பாலுவுக்கு ஊருக்குப் போகக் கைச் செலவுக்காக அது சிட்டாகப் பறந்துவிட்டது. அவளுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அந்த ஒற்றைவளை அவளுடைய தந்தக் கையில் தேய்ந்து கொண்டிருந்தது. அவளுடைய கை வளர்ந்து உருட்சி பெறப்பெற அந்த வளையலும் தட்டார் உலையிலே காய்ந்து நீண்டு அவளுடைய கையை அலங்கரித்து வந்தது. இனி அவர்களுடைய வீட்டிலே பாங்கிக்கோ, கடைக்கோ போகக்கூடிய பண்டம் ஒன்றுமே கிடையாது—அவளுடைய சிவப்பு நட்சத்திரங்களையும் அம்மாவின் மங்கலச் சின்னங்களாக விளங்கும் அற்பப் பொன்னையும் தவிர! எல்லாம் பாலு படித்து வேலைக்கமரும் வரையில் அந்தந்த இடங்களில்

இருக்க வேண்டியதுதான்! அதற்கு நடுவில் எங்கிருந்து பணம் வரப்போகிறது?

அந்த வளையலைக் கழற்ற அவளுடைய தாய்க்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. "கல்யாணம் பண்ணும் வயசு. எல்லோரும் நகை செய்து போடுவார்கள், நான் கழற்று கிறேன், பாவி!" என்று கூறும்போது அவளுக்குக் கண்கள் பனைத்துவிட்டன. அதைக்கண்டு ஜானகிக்கும் கண்கள் கலங்கிவிட்டன.

"அசடே, நாளைக்கே அவன் நிறையச் சம்பாதிப்பான். உனக்கு இதற்குமேல் பத்து மடங்கு நகைகள் வரும். எதற்குக் கண் கலங்குகிறாய்? நான் கழற்றும் வேளை நல்ல வேளையாக இருக்கட்டுமே? கங்கண ப்ராப்தம் வரக் கூடாதா? கிளிபோல் அழகுக்கும் புத்திக்கும் அருமை தெரிந்தவனானால் ஒரு காசு செலவு வைக்காமல் கல்யாணம் பண்ணிக்கொள்ள வரலாம்..." என்று அவள் நடவாத தொரு குருட்டு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்துப் பேசினாள். அது அவளையும் அவள் மனதைத் தேற்றிக் கொள்ளும் சமாதானச் சொற்கள் என்பதை ஜானகி எப்படி அறிவாள்?

அவளுடைய திருமணத்தைக் குறித்துப் பெற்றோர் செய்திருந்த தீர்மானத்தையும் ஜானகி அறிவாள். அது இதுதான்:

பாலு படித்து ஒரு வேலையில் அமர்ந்துவிட்டானானால் உடனே வீட்டை ஈடுகாட்டி மூவாயிரமோ, நாலாயிரமோ கடன் வாங்கி அவளை மணம் செய்து கொடுப்பார்கள். பின் அவனுடைய மாத வரும்படியின் ஒரு பகுதி கடனடைக்கப் போகும்.

இது நடைமுறையில் சாத்தியமாகுமா? பாலு வேலைக்கு அமர்ந்ததும் ஏற்கெனவே விழித்துக் கொண்டிருக்கும் கடன்கள் இல்லையா? இன்னும் அவன் படிக்கும் இரண்டாண்டுகளில் வேறு புதியனவாக எத்தனை கடன்கள் முளைக்குமோ? அவன் சம்பாதித்துச் சம்பாதித்து ஆயுள் முழுவதும் கடனடைக்க வேண்டியதுதானா?...பாவம்,

அவனுக்கு இத்தனை பொறுப்புகள் நம்மீது விழக் காத்திருக்கின்றன என்று தெரியுமா?...

துணிகளை விரித்து ஓடும் நீரில் திருப்பித் திருப்பி அலசியவண்ணம் சிந்தித்துக் கொண்டிருந்த அவளுடைய பிறை நுதலில் வியர்வை முத்துக்கள் அரும்பின.

'சரக் சரக்' என்று எதிர்க்கரையில் கேட்ட செருப்புச் சத்தம் அவளை நிமிர்ந்து பார்க்கச் செய்தது. வேட்டியை முழங்காலுக்குமேல் மடித்துக் கட்டிக்கொண்டு ஒரு கையில் செருப்பைக் கழற்றி எடுத்துக் கொண்டவராய் கந்தையா மறுகரையில் வாய்க்காலில் இறங்கினார். கந்தையாவுக்கு வயசு அறுபதிருக்கும். போலீஸ் இலாகாவில் அதிகாரியாக உத்தியோகம் வகித்து ஓய்வு பெற்றவர். நல்ல மனிதர். கொஞ்ச நாட்களாகத்தான் அவர் அங்கு வந்து சொந்தமான நிலத்தைச் சாகுபடி செய்வதிலே முனைந்திருக்கிறார். ஒரே ஒரு மகனைத் தவிர அவருக்கு வேறு சுற்றமே இருக்கவில்லை. "இந்த நேரத்தில் தனியாக இங்கு வரலாமா? ஏனம்மா?" என்று அவர் தன் நெற்றிச் சுருக்கங்கள் அகலப் புன்னகை செய்தார், ஜானகியைப் பார்த்ததும்.

அவளும் பதிலுக்குத் தன் இதழ்கள் மலர, "பிசாசு கிசாசு என்று உங்களுக்குக்கூடவா நம்பிக்கை இருக்கிறது? நீங்கள் எப்படித்தான் போலீஸ் உத்தியோகம் பார்த்தீர்கள் மாமா?" என்று குறும்பாகக் கேட்டாள்.

அதை ரசித்து அவரும் மனம்விட்டு நகைத்தார்.

"பிசாசைவிடப் பயங்கரமாக மனிதர்களே இல்லையாம்மா? அதனால்தான் சொன்னேன். மூன்று, நாலு மணிக்கு வந்து துவையேன்?" என்றார் கந்தையா.

தலையை ஆட்டிச் சிரித்துவிட்டு ஜானகி பிழிந்த துணிகளுடன் கரையேறினாள். வீட்டின் பின்புறக் கதவு தாளிடப்பட்டிருந்தது.

"அம்மா, அம்மா!" என்று ஜானகி கத்தினாள்; கதவை இடித்தாள், பதிலே வரவில்லை.

'எல்லோருக்குமே காது செவிடாகிப் போய்விட்டதா?' என்ற ஆத்திரத்துடன் அவள் பாதி நனைந்து போயிருந்த சேலை தடுக்க, சந்துவழியாகச் சுற்றி வீட்டின முன்புறம் வந்தாள்.

வாசல் திண்ணையில் பாலுவும் அவனுடைய நண்பன் ராமுவும் பேசிக் கொண்டிருந்தார்கள். செல்லம் கையில் கரண்டியுடன் வாசல்படியில் நின்று அவர்களுடைய பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்தாள். ரங்கநாதம் ஒன்றையுமே கவனியாதவராகத் திண்ணை ஓரத்தில் ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்து இருந்தார்.

ஜானகியைக் கண்டதுமே செல்லம், "ஐயோ, கதவைச் சாத்திவிட்டானா சுந்துத் தடியன்? கூப்பிடக்கூடாதா ஜானகி?" என்று அங்கலாய்த்துவிட்டுப் பரபரவென்று உள்ளே சென்றாள்.

ஜானகி பிழிந்துவந்த துணிகளைப் பிரித்து உலர்த்தலானாள்.

அதைக்கண்ட ராமு, "நீ ஒரு முழுச் சோம்பேறியடா பாலு! உன் இடுப்புத் துணியைக்கூடப் பாவம், ஜானகி தோய்த்து வந்திருக்கிறாள் இத்தனை நாட்களாக. இனிமேல் கஷ்டப்படுவாய் பார், கஷ்டப்படப் போகிறாய்!" என்று விளையாட்டாகக் கூறி நகைத்தான்.

"டேய், உன் வாயால் நன்றாக இரு என்று ஆசீர்வாதம் பண்ணினால் பலிக்காதே ஒழிய இது பலித்துவிடுமடா பழி, கஷ்டப்படுவாய் என்று ஏன் சாபம் கொடுக்கிறாய்?" என்றான் பாலுவும் பதிலுக்குச் சிரித்தவண்ணம். ராமு பாலுவுக்கு நெடுநாளையத் தோழன். ஒரு வருஷத்துக்கு முன்புதான் அவன் சென்னையில் வைத்தியக் கல்வி கற்கச் சேர்ந்திருந்தான். விடுமுறைக்கு ஊர் வந்திருந்த அவன் அன்று பாலு ஊருக்குப் புறப்பட இருந்ததால் அவனுடனேயே இருந்தான்.

அவர்களுடைய பேச்சு முன் சொன்ன விதமாகத் திரும்பவே, ஜானகியும், "ஏன், இங்கே தங்கை இருந்தால்

அங்கே அக்கா!" என்று அவர்களுடைய நகைப்பில் பங்கு பற்றினள்.

"அக்கா ஒன்றும் இந்தச் சோம்பேறிக்குத் துணி துவைத்துப் போடமாட்டாள். அவளுக்கு அத்தானைக் கவனிக்க வேண்டும்!" என்று ஜானகியைப் பார்த்துக் கொண்டு ராமு கூறியதும் 'கொல்' லென்ற சிரிப்பொலி மீண்டும் ஒலித்தது.

ஜானகியின் நன்றி ததும்பிய நோக்கும், கண்ணுடிக் குள் ஒளிர்ந்த ராமுவின் விழிகளிலிருந்து வந்த பார்வையும் ஒரு கணம் ஒன்றுபட்டன.

## 7

தூளியில் குழந்தையை விட்டு ஆட்டிக் கொண்டிருந் தாள் விமலா. மூர்த்தியும் பாலுவும் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அன்று ஞாயிற்றுக்கிழமை.

"டேய் பாலு! ஒரு வாரத்து அழுக்கு மூலையில் சுருட்டி எறிந்து இருக்கிருய். கிணற்றடியில் இப்போது ஆட்கள் இருக்கமாட்டார்கள். வண்ணுனுக்குப் போட வேண்டியதைப் பொறுக்கி வைத்துவிட்டு மீதித் துணி களை அழகாய்த் துவைத்துப்போடு. நாளைக்குக் காலே ஜுக்குப் புறப்படும்போது கைக்குட்டை இருக்கிறதா, சட்டை இருக்கிறதா என்று கேட்கவேண்டாம், உன் அத் தானைப்போல!" என்று விமலா உள்ளிருந்தபடியே ஒரு போடு போட்டாள்.

"சபாஷ்! பார்த்தாயா பாலு? ஒருவரைக் கொட்டி இன்னொருவருக்கு நெறி ஏறும்படி செய்யும் இந்தப் பேச்சை? இந்த மாதிரி பேச நமக்கெல்லாம் வருகிறதா? போனல் போகிறது. வயசுப்பிள்ளையாக லட்சணமாக நீ இப்போது எழுந்து உன் வேலையைக் கவனிக்கப்போ. என்னைப்போல் சோம்பேறிப்பட்டம் வாங்கிக்கொள்ளாமல் நீ 'அவளி'டம் நாளைக்குப் புத்தியுடன் பிழைக்கவேண்டும். நானும் இப்படிக் கொஞ்சம் படுத்து ஒரு குட்டித் தூக்கம்

போடுவதற்குள்...'' என்று அவன் முடிக்குமுன் விமலா மீண்டும் உள்ளிருந்தபடியே குறுக்கிட்டாள்.

''எண்ணெயைத் தேய்த்துக் குளித்துவிட்டு இப்போது தூங்கவேண்டாம்! இதோ இந்தப் பாத்திர 'ஷெல்பை' ஒழித்துத் துடைத்து வைத்திருக்கிறேன். பாலுவின் புத்தகங்கள் கண்டபடி அந்த மேசையில் இறைந்து கிடக்கின்றன. ஆணி அடித்து இதை மாட்டிக்கொடுங்கள். அவன் புத்தகங்களை இதில் அடுக்கிக் கொள்ளட்டும்,'' என்று உத்தரவு விடுத்தாள்.

''அப்பாடா,'' என்று இழுத்துக்கொண்டே மூர்த்தி எழுந்தான்.

''விமலா, நீ ஒரு காரியாலயத்தின் பொறுப்புவாய்ந்த ஆபீசராக இருக்கத் தகுதி பெற்றவள். பாவம், இந்த அடுப்பங்கரையில் கிடந்து உழலுகிறாய். ஹூம்! என்ன செய்கிறது. உலகமே இந்த நாட்களில் தலைகீழாகத்தானே நடக்கிறது? உனக்கு இருக்கும் கருரும், கண்டிப்பும், நிர்வாகத் திறமையும், ஒழுங்கும் சர்க்கார் காரியாலயங்களில் வேலை செய்யும் எல்லோருக்கும் மட்டும் இருந்துவிட்டால், அடா அடா அடா......லஞ்சம், வஞ்சம், ஊழல், சிவப்பு நாடா எல்லாம் பறந்துபோய்......''என்று அவன் ரசனையுடன் நீட்டிக்கொண்டு போனான்.

''போதுமே பரிகாசம்! பேசிப்பேசி ஒன்றுமே ஆவதில்லை!'' என்று அவள் மறுபடியும் கடுகடுக்கவே, ''எஸ் மேடம்! இனி செயலில்தான், பேச்சிலில்லை!'' என்று மூர்த்தி எழுந்தான். பாலுவும் சலிப்புடன் சீட்டுகளைக் கூட்டுக்குள் போட்டுவிட்டு எழுந்து மூலையில் கிடக்கும் அழுக்குத் துணிகளைப் பரிசீலனை செய்யலானான்.

அந்த ராமு எந்த வேளையில்தான் 'கஷ்டப்படுவாய்' என்று சாபமிட்டானோ! இந்த நிலைமையை அவன் அன்றே நினைக்காதது தான் எத்தனை முட்டாள்தனமானது?......

உண்மையாகவே, தமக்கையின் இரண்டு அறை வீட்டில் ஊரில் உள்ள சொந்தவீட்டில் இருந்து படித்ததைவிடச் சௌகரியமாகப் படிக்க முடியுமா, அவளுக்கு நாம் சிரமம் கொடுக்கலாமா என்றெல்லாம் எண்ணிப்பார்க்க அப்போதைய மனநிலை அவனை அநுமதித்திருக்கவில்லை. 'இண்டரில்' முதல் வகுப்பில் அவன் தேர்ச்சிபெற்றிருந்தது மட்டுமன்றி, கல்லூரியிலேயே முதலாவதாகத் தேறி இருந்தான். அவனுடைய நண்பர்கள், தெரிந்த ஆசிரியர்கள் எல்லோரும் அவனுடைய அந்த வெற்றியைக் குறித்து வெகுவாகப் பாராட்டி உற்சாகம் அளிக்கையில், மேலே நான் தொடர்ந்து படிக்கப்போவதில்லை, என்னுடைய குடும்பநிலை அதற்கு இடம் தராது என்று நான்கு பேர்களின் முன்னிலையில் ஒப்புக்கொள்ள, கௌரவம் பாராட்டும் அவனுக்கு அவமானமாக இருக்காதா?

எனவேதான் முதலில் ஆசைப்பட்டபடி நான்கு ஐந்து வருஷக் கல்வி கிடைக்காதபோதிலும் முற்றிலும் ஒன்றுமில்லாமல் ஏதோ இந்த வெறும் பி. ஏ. யானும் கிடைத்திருக்கிறதே, இதற்குமேல் வசதி இருந்தால் இந்த வழியிலேயே இன்னும் மேலான பட்டத்தைப்பெற முயற்சி செய்யலாமே என்ற தெம்பிலேதான் அவன் தன்னுடைய ஆசைத் தீபத்தை அவியாமல் வைத்திருந்தான். உண்மையிலே அந்தந்த வகைகளான கல்விகளில் உள்ள ருசியோ, அவற்றைக் கற்கவேண்டும் என்ற பேரார்வமோ அவனுக்கு அப்போது இருந்ததாகவும், அதனால் கலாசாலைப் படிப்பை அவ்வளவு தூரம் விரும்பினான் என்றும் சொல்ல முடியாது. பட்டங்கள் தரும் பெருமதிப்பு, அவற்றால் கிடைக்கும் உத்தியோகம், பதவி உயர்வு, இந்தக் குறிகளுடன் கல்வி பயிலவரும் மாணவர்களில் ஒருவனாகவே பாலுவும் இருந்தான். அதனாலேயே பெற்றோரின் ஏற்பாட்டுக்கு அவன் எந்தவிதமான ஆட்சேபமும் கூறவில்லை. ஆனால் தமக்கையின் வீட்டில் காலெடுத்துவைக்கையில் இந்த ஊக்கம், ஆவல் எல்லாம் இந்த மூன்றே மாதங்களில் ரசமற்றுச் சப்பென்று ஆகிவிட்டன. இயல்பாகவே அவன் அடிக்கடி சலித்துவிடும் தன்மையை உடையவன். அதிலும் புதிது புதிதாகக் கனவுகாணும் பருவம்,

புதுமையின் மெருகு வெகுசீக்கிரம் அழிந்து குறைகள் பல்லை இளிக்கத் தொடங்கிவிட்டன. வெறும்-புத்தகங்கள், கல்லூரிச் சம்பளம், இரண்டு வேளை உணவு; இவற்றுடன் அந்தக் கலைத்தேவியின் முத்திரையைத் தன் பெயருக்குப் பின்னால் இணைத்துக்கொள்ள முடியும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. பார்க்க அற்பமாக இருக்கும் குறையும் அவனுடைய குறைப்படும் மனசுக்கு மிகுந்த சஞ்சலத்தை விளைவிக்கக்கூடியதாக இருந்தது.

அவன் ஊரில் இருந்து படித்த நாட்களில் வீட்டில் எத்தனை கஷ்டநஷ்டங்கள் இருந்தபோதிலும் அவன் ஒன்றையுமே அறியாவண்ணம் அவனுடைய தாய் எப்படியோ இட்டு நிரப்பி இருந்தாள். அப்படி இருந்தும் அங்கேயே அவன் அதிருப்தி காண்பித்து வந்தான். இங்கு குறைகளை எல்லாம் சகித்துப்போகும் நிர்ப்பந்தம் அவனை நெருக்கியது. மேலும் அந்த இடம் அவனுக்குப் பிறந்த நாள் முதல் பழகிய இடம். அவனைப்போன்ற நிலையில் ஒட்டிப்பழகும் பலமாணவர்கள் இருந்தனர். இந்த இடம் அவனுக்கு சகஜமானதாகவே ஆகவில்லை. சகஜமானவர்களிடம் ஒட்டிப் பழகவே அவனுக்குக் கூச்சமாக இருந்தது. அப்படி நெருங்கிப்பழக முயன்றாலும் பரிகாசப் பேச்சுகள் கிளம்பி அவனைத் தனியாகவே ஒதுங்க வைத்தன.

ஆனால் இங்கு சௌகரியங்கள் குறைவாக இருந்த போதிலும் மேகத்தைச்சுற்றிக் காணப்படும் வெள்ளி விளிம்பைப்போல மூர்த்தியின் கள்ளமற்ற கலகலப்பு இருந்தது. விமலாவின் பேச்சு கண்டிப்பாகவும் காரமாகவும் இருந்தபோதிலும் அவளுடைய உள்ளத்தில் அவனைக் கரைக்கும் பரிவு இருந்தது. தேவை அதிகமாக உறைக்கும் சமயத்தில்தானே பரிவின் அருமை தெரியும்? அவனுடைய அன்னை அவனிடம் அளவுக்குமீறிய பரிவும் அன்பும்தான் காட்டினாள் என்றாலும் இவ்வளவுதூரம் தேவையை அவன் உணரவேயில்லையே?

அந்தப் பாதாளக் கிணற்றில் நீர் இறைத்ததனால் முரட்டு வேலை செய்து அறியாத அவனுடைய உள்ளங்கை

ரோஜா மலரெனச் சிவந்துவிட்டது. வாளியில் பிழிந்த துணிகளைப் போட்டுத் தூக்கிக்கொண்டு கயிற்றையும் குடத்தையும் சுமந்தவனாக அவன் வீட்டின் பின்புறம் வருகையில் சமையலறையில் மூர்த்தியும் விமலாவும் பேசும் குரல் கேட்டது. தன்னைப்பற்றி அவர்கள் என்ன நினைக்கிறார்களோ என்ற எண்ணம் அவன் மனசில் அடிக்கடி தோன்றும் வழக்கமிருந்ததால், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை நின்று கேட்க ஆவல் தூண்டியது. அங்கேயே நின்றான்.

" அடுத்த மாசம் பணம் அனுபபும் போது ஏதானும் சேர்த்து அனுப்ப மாட்டார்களா? அம்மா பேசாமலிருந்தாலும் இருப்பாள். அப்பா, பாவம், இங்கே வந்து தங்கியிருந்த இரண்டு நாட்களில் ஆற்றுப்போய்விட்டார். அவரே வாய்விட்டுக் கேட்கமாட்டார், அவராக பாலுவை அங்கே அனுப்பலாமா என்று கேட்டிருக்கையில் பேசாமலிருக்க மாட்டார்தான். என்றாலும் மூன்று மாசங்களுக்கு மேல் ஆகிவிடவில்லை? நமக்குக் கஷ்டமாகவும் இருக்கிறது, சங்கோசமாகவும் இருக்கிறது. என்ன செய்ய?..."

விமலாவின் வாயிலிருந்து இத்தகைய சொற்கள் வந்ததும் பாலு அயர்ந்து நின்றான்.

அவனுடைய அப்பாவா எழுதினார்? வேறுவிதமாகப் பேசி அம்மா அல்லவோ அவரை வற்புறுத்தினாள்?...

பற்களைக் கடித்துக்கொண்டு மூர்த்தி என்ன பதில் கூறுகிறான் என்று கேட்க இன்னமும் நின்றான்.

"பாவம் படிப்பில் கூர்மையுள்ள பையன், நடுவில் வெட்டக் கூடாதென்று நானே தெம்பு கொடுத்தேன். அவருக்கும் வேறு வழியில்லை. நீ ஏதானும் எனக்குத் தெரியாமல் எழுதிவிடாதே, ஆமாம்! பாலுவின் காதிலும் எதையும் போட்டுவிடாதே. நம்முடைய கஷ்டம் இருக்கவே இருக்கிறது. அவனுடையநிலையில் நான் மேலே படிக்க வேண்டும் என்று எத்தனை கஷ்டப்பட்டேன் தெரியுமா? அந்த வயசில் மனசில் ஆசைகள் எப்படியிருக்கும்

என்பதை நான் அறிவேன். பணமும் காசும் பிரதானமல்ல விமலா, அதற்காக மனிதத்தன்மையை இழந்து விடக் கூடாது...''

மூர்த்தியின் இந்த பதிலைக் காது குளிரக்கேட்ட பாலு வுக்கு இருதயம் கரைந்தது. கண்களில் நீர்துளிர்த்தது. மேல்துண்டின் நுனியால் அவன் கண்களை ஒத்திக்கொள் கையில் மீண்டும் சம்பாஷணை தொடர்வது கேட்டது.

''எனக்கு ஒரு 'அயனு'ன யோசனை இருக்கிறது விமலா, நீயும் அதை ஆமோதிப்பாய் என்று எண்ணு கிறேன்...''

''என்னவாம்?''

''நம் சீதாவுக்கும் பாலுவுக்கும் மனசில் முடிந்து வைத்திருக்கிறேன். ஆட்சேபம் சொல்லுவாளு?''

''ஆட்சேபம் என்ன சொல்லக் கிடக்கிறது? உங்கள் தங்கையையும் என் தங்கையையும் கல்யாணம் செய்து கொள்ள வருபவன் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இந்த யோசனை உங்களுக்குப் புதிசாக இருக்கலாம். நான் எப்போதோ தீர்மானம் செய்ததுதானே?''

''விமலா, ஒருமித்தமனம் என்ருல் உலகிலேயே நாம் தான் உதாரணமாக இருப்போம். என்ன ஆச்சரியம் பாரேன்?......''

இதற்குமேலும் நிற்கப் பொறுமை இல்லாதவனுக பாலு உள்ளே நுழைந்துவிட்டான்.

''என்னடா இது, தோய்க்கிற தோய்ப்பில் வண்ணுன் பிழைப்புக் கெட்டுவிடுமோ என்று பயந்து போனேனே? எங்கே விமலா? உன் தம்பியைக் கவனி!'' என்று அவ னைக் கண்டதுமே மூர்த்தி தனக்கே உரிய தோரணையில் பேச்சை மாற்றிவிட்டான்.

அதிருப்தி இருந்தால் பொதுவாக எல்லோருக்கும் கோபம் வருகிறது. தமக்குச் சமமானவர்களிடம் குறையைச்

சொல்லி அழுகிறார்கள். சமமாக இல்லாத வேறோ ரிடம் எரிந்துவிழுகிறார்கள். மூர்த்திக்கும் விமலாவுக்கும் வாழ்க்கையில் குறைகள் நிறைய இருந்தன. ஆனால் அவர்கள் அழுதோ, எரிந்து விழுந்தோ பொழுதைப் போக்கவில்லை. சிரித்துச் சிரித்துத் தங்கள் குறைகளை மறைத்துக் கொண்டார்கள். விமலா சுபாவீகமாகவே இத்தகைய பண்பைப் பெற்றிருந்தாளோ, அல்லது தங் தத்துடன் தேய்ந்து தேய்ந்துதான் பித்தளையும் கறுக் காத தன்மையைப் பெற்றதோ?

வாழ்க்கை யாரைத்தான் சோதனைக்கட்டத்துக்கு இழுத்துச் செல்லாமல் கொண்டு செல்லுகிறது? உறுதி யொன்று மனசில் வைத்துவிட்டால் அதை அசைக்க அத்தனைக்கத்தனை கடுமையான சோதனைகள் எதிர்ப் பட்டே தீருகின்றன.

மாதக் கடைசியும் தானுமாக, ஓடிவிளையாடும் சிறுவனான மோஹன் ஜுரம் கண்டு படுத்துவிட் டான். விமலாவின் கைமருந்துகளுக்கெல்லாம் காய்ச்சல் தணியவில்லை. அதிகமாகியது. சர்க்கார் வைத்திய சாலைக்குச் சென்றால் வைத்திய உதவி இலவசமாகக் கிடைக்கும். ஆனால் குழந்தையை அங்கு அழைத்துச்சென் றோம், காட்டி மருந்து வாங்கி வந்தோம் என்று லகுவில் நடந்துவிடுமா? அங்கு சீட்டுவாங்க, வைத்தியரின் அறைக் குள் நுழைய, மருந்து வாங்க என்று எத்தனை காலம் காத்து நிற்கவேண்டும்? இத்தனைக்கும் அங்கு செல்ல வண்டிச்செலவே இரண்டு ரூபாய்களாகி விடுமே?

எனவே யோசித்து யோசித்து அவர்கள், அந்தக் காலனியிலே அவர்களை நம்பிப் பலகையை மாட்டிக்கொண் டிருக்கும் வைத்தியரிடம் குழந்தையைக் கொண்டு போனார் கள். அவர் பரிசோதனை செய்து பார்த்துவிட்டு, அன் றைக்குள் ஜுரம் இறங்காதபோனால் குழந்தையின் உட லில் ஏற்றப்படவேண்டும் என்று ஒரு ஊசி மருந்தை எழுதித் தந்தார். விலை எட்டு ரூபாய்க்குள் இருக்கும் என்றும் தெரிவித்தார்,

சிரித்துப் பேசும் மூர்த்திக்கு முகத்தில் ஈயாடவில்லை. விமலா அடிக்கொருமுறை குழந்தையை வந்து தொட்டுப் போவதும் உள்ளே வேலையைக் கவனிப்பதுமாக யந்திரம் போல் நடமாடினுள்.

பாலுவுக்கு இருப்பர்கவே இருக்கவில்லை. மனம் இறக்கை கட்டிக்கொண்டு பறந்தது.

மூர்த்தி காரியாலயம் சென்றுவிட்டான். கணவனும் சோதரனும் உண்ட எச்சில் கலங்களையும் மறந்து விமலா ஜுரத்தில் திணறும் குழந்தையையே கவலை தோய்ந்த முகத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுக்குக் கண்ணீர் முட்டிக்கொண்டு வந்தது. பாலுவினுல் அதைப் பார்க்க சகிக்கவில்லை.

'ஊருக்கு நிச்சயம் எழுதிப் பணம் தருவிக்கவேண்டும். அம்மாவாம் அம்மா! அவளுக்குக் கொஞ்சமேனும் இருதயம் இருக்கிறதா? அவளும் குடும்பம் நடத்திப் பார்ப்பவள் தானே?' என்றெல்லாம் செல்லத்தின்மீது பாய்ந்த விமலாவின் கோபம் கொழுந்துவிட்டது.

"பாலு!"

குரல் கம்ம விமலா அழைத்தாள்.

"ஏன் விமலா? குழந்தைக்கு ஒன்றுமில்லை. பயப்படாதே, போய் சாப்பிடு நீ. நான் வேண்டுமானுல் இன்று இங்கேயே இருக்கட்டுமா?" என்முன் பாலு.

"இல்லை பாலு, டாக்டர் 'இஞ்ஜெக்ஷன்' கொடுத்தால் பயமில்லை என்கிருர். யாரிடமானும் கைமாற்றுத்தான் கேட்டுப்பார்க்க வேண்டும் என்று அத்தான் ஆபீஸுக்குப் போய்விட்டார். எட்டு ரூபாய் ஆகுமாம். உன்னிடம் இருக்குமா பாலு? நீ பாவம் கைச் செலவுக்கு வைத்திருப்பாயோ என்னமோ? உன்னைக் கேட்கக்கூடாது என்று அவர் கண்டிப்பாகச் சொல்லிவிட்டுப் போனுர். ஆனுலும் மனசு கேட்கவில்லை. இரண்டு நாட்கள் போனுல் சம்பளம் வந்துவிடும். நான் உனக்குத் தந்து விடுகிறேனடா,,,..."

"இதற்காகவா அழுகிருய்? அசடு, கண்களைத் துடைத்துக்கொள். நானுகவே மருந்தை வாங்கி வரத் தான் இருந்தேன். எங்கே? 'ப்ரிஸ்கிருப்ஷனைக்' கொண்டா. நீ ஒன்றும் என்னிடம் கேட்கவும் வேண்டாம் திருப்பித்தரவும் வேண்டாம்; அத்தானிடம் சொல்லவும் வேண்டாம்" என்ருன் பாலு. அவள் சீட்டைக் கொண்டு வந்துகொடுத்தாள்.

வெளியில் வரும்வரையில் அவனுடைய திடமனம் எப்படி நீடித்திருந்ததோ? அவன் எப்படி அப்படித் தைரியமாகப் பேசினுன்? சொன்னதை எப்படி நிறை வேற்றுவான்?

பெண்பிள்ளைபோல அவனுக்குக் கண்ணீர் வந்தது. அவனுடைய சட்டைப்பை, பெட்டி, மேசை இழுப்பறை எல்லாவற்றிலும் துழாவியும் அவனுடைய இருப்பில் சேர்ந்திருந்த பணம் நான்கு ரூபாய், மூன்றணு, ஆறு தம் பிடிகள் தான்!

## 8

**அ**ன்று பகல் மணி பதினென்று இருக்கும். வீட்டில் ரங்கநாதம் ஜானகி, சுந்து மூவரும் இருக்கவில்லை. ஊர்ப் பெரிய மனிதர் ஒருவரின் குமாரத்திக்கு அன்று கல்யா ணம். அந்தப் பெண் ரங்கநாதத்திடம் சேர்ந்தாற்போல நான்கு வருஷங்கள் 'ட்யூஷன்' படித்தவள். அவர்கள்வற் புறுத்தி வண்டியும் அனுப்பியிருந்ததால் அவர் குழந்தை களுடன் சென்றிருந்தார். செல்லம் மட்டும் கூடத்தில் வாசல்படிக்கு நேராக உட்கார்ந்து பலகையில் உளுந்தை வைத்து உருட்டிக் கரம்பைகளைப் பிரித்துக்கொண்டு இருந்தாள்.

வாசலில் வேட்டி விசிறும் ஓசையும் அடிச் சத்தமும் அவள் கவனத்தைத் தூண்டியிட்டு இழுத்தன. அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

பார்த்த கண்கள் நிலைத்துவிட்டன.

அவளுடைய உள்ளம் ஏன் அப்படிச் சுருண்டு சீறி விழும் நீரின் மோதலைப்போல் கொந்தளிக்க வேண்டும் ?

"வாருங்கள்" என்று அவள் அழைக்கவில்லை.

வாசல்படியிலே வந்து நின்ற கங்காதரத்துக்கு அவளுடைய அந்த வரவேற்பு எதிர்பாராததல்லவே ?

"மாமா இல்லையா ?..."

அந்தக் குரலில்தான் எத்தனை தயக்கமும், பதைப்பும் !

"இல்லை !"

வெடுக்கென்று ஒரே சொல்லில் வந்த பதிலுக்குப்பின் தெறித்த கடுமை அவருக்குப் போகலாம் என்பதைக்கூடத் தெரிவித்திருக்க வேண்டும். ஆனால் அவர் போகவில்லை.

நிலைக்குள் குனிந்து உள்ளே தலையை நீட்டி "எங்கே போயிருக்கிறார் ?" என்று விசாரித்தார்.

"எங்கேயோ கல்யாணம், போனார். எங்கேயோ போகிறோம், பிழைக்கிறோம். என்ன கேள்வி வேண்டி இருக்கிறது ?"—உள்ளத்தின் வேகம் சொல்லிலும் வீசியது.

அவர் வாசற்படியைத் தாண்டிக் கூடத்துக்குள் வந்தார். ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு நின்றார்.

ஜுரம் கண்டவளைப் போல அவளுக்கு ஏனோ படபடப்பு உண்டாகவேண்டும் ? அவள் நேற்றுத்தான் மணமாகி அங்கு வந்திருக்கிறாளா ?

காரணம் தெரியவில்லை அவளுக்கு.

"செல்லம் ?"

"செல்லம் இல்லை ! செல்லம் செத்துவிட்டாள் !"

"ரொம்ப சரி. ஆனால் என்மேல் நீ இப்படிக் கோபம் கொள்வதனால் என்ன பயன் ? நீ இப்படி இருப்பதனால்

என் மனம் சந்தோஷமாக இருக்கிறதென்று நீ நினைக்கிருயா?..."

எரியும் தழலில் பச்சை இலை பட்டாலும் வெடிக்கத் தானே செய்யும்? "கோடானுகோடி ஏழைகளில் நானும் ஒருத்தி. பணம் பெற்ற அந்தஸ்துக்காரர்களுக்கு இங்கு என்ன வேலை? சமமில்லாத இந்த வீட்டில் இந்த மனிதர்களுடன் எதற்காக உறவு கொண்டாட வேண்டும்?"

"அந்தஸ்து, கௌரவம் என்று என்னை வார்த்தைக்கு வார்த்தை துளைக்காதே செல்லம், என்மீது உனக்கு இரக்கம் இல்லையா? கட்டுப்பாடுகளையும், சட்டதிட்டங்களையும் எதிர்த்து வர இயலாத பலவீனன் நான். என்னை இன்னும் ஏன் வதைக்கிருய்?......குழந்தைகள் கூட இல்லையா?" மனசுக்குள் வெம்பும் வேதனை அவருடைய குரலிலே கீறலிட்டு ஓடியது.

"என்னுடைய குழந்தைகள் ஏழைக் குழந்தைகள், பிச்சைக்காரக் குழந்தைகள். இங்கு வந்து நின்றுகொண்டு என் வயிற்றெரிச்சலை ஏன் கிளப்பவேண்டும்?"

"ஆத்திரத்தை நீ அடக்கிக்கொள்ள வேண்டும். இப்படி ஆத்திரப்படுவதனால் என்ன பயன்? சந்தர்ப்பங்களும் சூழ்நிலையும் இளம் பிராயத்திலே விதவிதமான கனவுகளைப் பின்னி விடுகின்றன. அதன்படி நாம் நம்மைத் தயாராக்கிக் கொண்டாலும் வாழ்க்கை பெரும்பாலும் நமக்கிணைய அமைவதில்லையே? அதனால் ஏங்கி ஏங்கித் துன்புறுவதிலே என்ன லாபம், செல்லம்? நீ கிடைத்ததை சந்தோஷமாக ஏற்கவில்லை என்பது எனக்குத் தெரியும். அதுவே என் மனசைப் புண்ணுகக் குடைந்து வருகிறது. இத்தனை வருஷ காலத்தில் நீயும் மாறி உன் நிலையில் பொருந்திவிடுவாய் என்று நானும் எத்தனையோ முறைகளில் எதிர்பார்த்தேன். நீ இன்னும் எரிமலையாகவே இருக்கிருய். உனக்கும் எனக்கும் வாழ்வு வெவ்வேறு திசைகளில் திரும்பி எப்படியெல்லாமோ மாறிவிட்டன. வெவ்வேறு கடமைகள் இருக்கின்றன. இந்த ஏக்கத்தின் நிழலை அடியோடு அகற்றுமல் கடமையைச் சரிவரச் செய்ய

முடியாது. அகற்றுமல் நீ துன்புறுவது குற்றமும் ஆகும்!"

"கோழை என்று இத்தனை வருஷங்களுக்குப் பின் ஒத்துக் கொள்ளுபவர், அசட்டுத் துணிச்சலாக அன்று நம்பிக்கையை வளர்க்கலாமா, முற்றாத மனசிலே? வளர்த்து விட்டு ஒடித்து எறிந்தீர்களே?..."

குரல் தழுதழுத்தது. முகத்தை மூடிக்கொண்டு சிறு குழந்தைபோல அவள் விம்மினாள்.

இத்தனை வருஷங்களுக்கிடையே அவர்களுக்குள் இத்தகையதொரு சந்திப்பு ஏற்படுவதற்குச் சந்தர்ப்பமோ, சூழ்நிலையோ பொருந்தி இருக்கவில்லை. குமைந்துகொண்டு இருந்த அவள் நிலையும், அதைக் கிளறிவிடுபவர் போல அவர் தென்பட்டதும் அவளை அந்தக் காலத்துக்கு, ஏமாற்றத்தின் பசுமை மாறாத நிலைக்குக் கொண்டு சென்ற தில் விந்தையில்லையே?

"அழாதே செல்லம், நான் மன்னிக்க முடியாத தவறு தான் செய்தேன். உன்னை நேருக்குநேர் பார்க்கவோ, பேசவோ அதனாலேயே நான் கூசினேன். காலம் எந்த மனப் புண்ணுக்கும் மருந்தில்லையா? ஆத்திரமாகிய மன எழுச்சிக்கு இடம் கொடுக்காதே. அது சிறுகச் சிறுக உன்னைக் கீழே இழுத்துச் செல்லும். மாமாவோ குழந்தைகளோ வந்தால் என்ன நினைப்பார்கள்? அழாதே செல்லம், பாலு படிக்கிறானா மேலே?..."

சற்று இளகியிருந்த அவள் நெஞ்சம் இந்தக் கேள்வியில் மீண்டும் கடுமை கொண்டது.

"ஆமாம், எந்தவிதமேனும் நீங்கள் எனக்கு இரக்கம் காட்டுவீர்கள் என்று நம்பியிருந்தேன். ஆனால் பணமும் பதவியும் ஏழைமையுடன் என்றும் ஒட்டாது. அவை எண்ணெயும் தண்ணீரும் போல என்று நிர்த்தாட்சண்யமாகச் சொல்லிவிட்டீர்கள்..."

"அப்படி ஒரேயடியாகக் குற்றம் சாட்டாதே செல்லம், மீனுவின் மனசில் ஏற்கெனவே உன்னைப்பற்றிவெள்ளையான

அபிப்பிராயம் இல்லை. அவளுக்கு நான் சாதாரண மாக ஏதானும் உதவினால் கூடச் சந்தேகமாகத் தோன்று கிறது. விஷ வார்த்தைகளை வீசுகிறாள். அவளுடைய எதிர்ப்புக்கிடமாக பாலுவை உடன் வைத்துக்கொண்டால் அவள் என்னவெல்லாம் பேசுவாளோ? அது எனக்கு மட்டுமா இழுக்கு? நீ அப்போதிருந்த நிலையில் உள்ள சிறு பெண்ணா, செல்லம்? வெற்று உள்ளத்துடன் பேசு, பழகு. நீ அபலை. கணவனாலும் போதுமான அளவு தாங்கக்கூடிய சக்தி கிடையாது என்று எனக்குத் தெரியும். என்னை அத்தனை கேவலமானவனாக நினைக் காதே செல்லம்!..." இத்தனை சொற்களும் அவளுக்கு ஆறுதல் அளிப்பதாக இல்லை.

"இந்த விளக்கமெல்லாம் எனக்கு எதற்கு? ஒரே வார்த்தையில்தான் நான் அப்போதே சொல்லிவிட் டேனே? நாங்கள் கீழானவர்கள், நீங்கள் உயர இருப் பவர்கள். தெரியாமல் வந்தேன், வெட்கம் கெட்டு உதவி கேட்டேன். அவமானப்பட்டுத் திரும்பினேன். இவ்வளவு தானே?" படபடப்பாக வார்த்தைகளை உதிர்த்துவிட்டு அவள் அங்கு நிற்காமலேயே பின் கட்டுக்குள் மறைந்து விட்டாள்.

கங்காதரம் திகைத்தார்; தயங்கினார்.

இரண்டொரு நிமிஷங்களில், "நான்...வரட்டுமா? ரேடியோ கச்சேரிக்காக வந்தேன், மாமா வந்தால் சொல்லு..." என்ற குரல் அவளைத் தேடி வந்தது. அடுத்த கணத்தில் அவருடைய அடிச் சத்தம் மெல்லச் சென்றது; சென்று மறைந்துவிட்டது.

கங்காதரம் போய்விட்டார்.

மழை பெய்த பிறகுதானே ஆற்றுவெள்ளம் பெருகி வருகிறது?

'மீனா அவதூறு சொல்லுவாளாம்! என்ன சாதுரியம், என்ன உருக்கம்? இவரை யார் இங்கே வரச் சொன்னார் கள்?...என் குழந்தை, என் குழந்தை எப்படியோ படித்து

முன்னுக்கு வருவான்' என்று கனலும் கண்ணீரும் ஒருங்கே திரண்டு வந்தன.

அவள் பல்லைக் கடித்துக் கொண்டாள். கண்களைத் துடைத்துக்கொண்டு மீண்டும் கூடை உளுந்தைக் கொட்டிக்கொண்டு கீழே உட்கார்ந்தாள்.

வாசலில் வண்டிச் சத்தம் கேட்டது. செல்லம் எட்டிப் பார்க்குமுன் கல்யாண வீட்டின் சந்தனமும் தாம்பூலமும் மணக்க ஜானகியும் சுந்துவும் குதித்துக்கொண்டு வந்தார்கள். பின்னால் இறங்கிய ரங்கநாதம் திண்ணையிலேயே துண்டை விரித்துக்கொண்டு உட்கார்ந்தார்.

"நீ ஏன் வரவில்லை என்று மரகதம்மா ரொம்பவும் கோபித்துக்கொண்டார்கள், அம்மா. கல்யாணம் எத்தனை பெரிசு தெரியுமா? பந்தலே கோவில் வாசல் வரையிலும் போட்டிருக்கிறார்கள். பாவம், பங்கஜத்தைக்கண்டு பிடிக்கவே முடியவில்லை, அப்படி நகையால் மூடிவைத்திருக்கிறார்கள்!" என்று நகைத்த ஜானகி சட்டென்று நினைவுக்கு வந்தவளாக, "மாப்பிள்ளை ஒரு சிடுமூஞ்சி போலிருக்கிறது அம்மா, சிரிப்பையே காணோம், முறைப்பாக இருக்கிறார்!" என்று கூறிவிட்டுக் கலகலவென்று மீண்டும் நகைத்தாள்.

சிரிக்கும் மகளைக்கண்டு வெம்பி வாடிய தாயுள்ளம் பெருமூச்செறிந்தது.

'அந்த மாப்பிள்ளை நெட்டை, இந்த மாப்பிள்ளை குட்டை, இவன் முகத்தில் சிரிப்பில்லை என்று ஊரில் நடக்கும் கல்யாணப் பையன்களுக்கெல்லாம் அநுபவம் வாய்ந்த கிழவியைப்போல அபிப்பிராயம் கொடுக்கிறாளே, இந்தப் பெண்ணுக்குக் குறையொன்றுமில்லாத மணாளனைத் தேடி எப்போது அவன் கையில் ஒப்படைக்கப் போகிறோம்? அதை நினைக்காமலிருப்பாளா, குழந்தை?'

ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்திருந்த ஜானகி அதன் மேலிருந்த தலைக்கு வைத்துப் படுக்கும் கட்டை மணையை அகற்றினாள்.

"அம்மா? ஏதம்மா பணம்?"

செல்லம் விரிந்த விழிகள் அசைவறப் பார்த்தாள்.

புதிய ரூபாய் நோட்டுகள்...ஆம், அவர்தான் வைத்து விட்டுப் போயிருக்கவேண்டும்!

யாரேனும் பணம் கேட்டார்களா? இதை எதற்காக வைத்துவிட்டுப் போகவேண்டும்?

'ஏன்? நீதான் ஏழை, ஏழை என்றாயே? அதுதான் வைத்திருக்கிறார்!'

மனசில் கேலிச்சிரிப்பின் குரல் ஒலித்தது.

அதே சமயம் அவளுடைய உள்ளத்தீ அந்த நோட்டுக்களைச் சுட்டெரித்து விடவேண்டும்போல் துடித்தது.

பணம்,......பணம்!

அவளுக்குத் தேவைதான். அவளுடைய அப்போதைய தேவைக்கு அந்த ஐம்பது ரூபாய்களைப்போல எத்தனை ஐம்பது ரூபாய்கள் இருந்தாலும் வேண்டியதுதான்.

அப்படியிருக்க அவளுக்கு அத்தனை வெறுப்பு ஏன?

தாய் திகைத்து நிற்பதைக்கண்டு "ஏம்மா? உனக்கே தெரியவில்லையா? எப்படியம்மா வந்து குதித்தது?..." என்று ஜானகி வியந்து கேட்டாள். செல்லம் பதிலே கூறாமல் பணத்தை அவள் கையிலிருந்து வாங்கினாள். விடுவிடென்று உள்ளே சென்றாள். எரித்துவிடவேண்டும் என்று எழுந்த ஆக்ரோஷத்தை மகனின் மீதிருந்த பாசத்தின் வேகம் அமுக்கிவிட்டது. பணம் அவனுக்கு உபயோகப்படுமே?

ஜானகிக்கு இன்னொருதரம் பணம் ஏது என்று கேட்கப் பயமாக இருந்தது. அவள் கேட்க வாயசைக்கும் போதே செல்லத்தின் முகத்தில் அத்தனை கடுமையைக் கண்டாள்.

'ஏது பணம்? அம்மாவின் முகம் ஏன் இப்படி மாற வேண்டும்? யாரேனும் வந்தார்களா?' என்றெல்லாம் ஜானகியின் பேதை மனம் குழம்பியது.

# 9

சுகமும் துக்கமும் வாழ்க்கையில் மாறிமாறி வரும் இரவும் பகலும் போன்றவை என்கிறார்களே, அது எத்தனை உண்மையானது?' கையிலிருந்த பற்றாத் தொகையை நிரப்பக் காலணாவும் கடன்வாங்கத் துணிவோ, சம்பாதிக்கும் ஆற்றலோ இன்றி பாலு திண்டாடும் நிலையில் இருக்கையில் அவனுடைய கருத்தை அசைக்கும் கன்னி விழிகள் குறுக்கிட வேண்டுமா?

எந்தவிதத்தில் குழந்தைக்கு மருந்து வாங்கிப் போகலாம் என்று நிர்ப்பந்தத்திலும் வேதனையிலும் சுழன்ற அவனுக்கு அன்று கலாசாலைப் பக்கம் செல்லவே கால்கள் மறுத்தன. எங்கெங்கெல்லாமோ சுற்றினான். யோசனை செய்தான். யாரிடம் என்ன சொல்லிக் கடன் கேட்பது என்பது அவனுக்குத் தெரியவில்லை. சகமாணவர்கள் எவரிடமும் கடன் கேட்கும் அளவுக்கு அவன் நெருங்கிப் பழகியிருக்கவில்லை. சங்கோசம் வேறு குறுக்கிட்டது.

விமலாவை எந்த முகம் கொண்டு பார்ப்பது?

நிலைமையை விவரித்து ஊருக்குக் கட்டாயம் எழுதத் தான் போகிறான். ஆனால் அன்று மாலைக்குள் எப்படிப் பணம் கிடைக்கும்? புத்தகத்தை, சட்டையை விற்கலாம் என்ற அபூர்வ யோசனையைக் கூடச் செயலாற்ற இயலாத படி அவனிடம் இன்றியமையாத அளவில்தான் இருந்தன. மேலும் அப்படியும் கூடத் தேவையான பணம் கிடைக்காது.

குழந்தைக்கு ஏதானும் அபாயம் நேர்ந்துவிட்டால்?... அவன் என்ன செய்வான்?

நடைபாதையிலே வெறித்து நோக்கிய வண்ணம் அவன் குறியில்லாமல் நடந்து கொண்டிருந்தான்.

"ஹலோ, என்னப்பா, பாலு? பார்க்காதது போல் நடக்கிறாயே? இங்கேயா இருக்கிறாய்?" என்று கேட்டு அவன் முதுகில் யாரோ தட்டினார்கள்.

கனவுலகில் திரும்பிப் பார்ப்பது போல அவன் பார்த்தான்.

நோயால் நலிந்து நம்பிக்கையைக் கைவிடும் நிலையில் உள்ளவனுக்கு சஞ்சீவி மருந்து கிடைத்தாற்போல இருந்தது அவனுக்கு. மடிப்புக் கலையாத நிஜாரும், 'லினன்' புஷ்கோட்டுமாக பௌடர் வாசனை குப்பென்று வீச, ரவி தான் அவன் முதுகை இன்னும் பலமாகத் தட்டினன்.

"இங்கேதான் இருக்கிருயாடா? எனக்குத் தெரியவே இல்லையே? நடையைப் பார்த்ததுமே பாலு போல் இருக்கிறதே என்று சந்தேகம் தட்டியது. காலேஜில் சேர்ந்திருக்கிருயா?..." என்று விசாரித்தான்.

'இவனை விடக்கூடாது, கடவுளாகத்தான் கருணை கூர்ந்து இவனை அனுப்பி இருக்கிருர்' என்று கடன் கேட்கும் யோசனையில் தாவிவிட்ட பாலு, "நான் இங்கே தான் பி.ஏ.க்குச் சேர்ந்திருக்கிறேன். விமலாவின் வீட்டில் இருக்கிறேன்..." என்ருன்.

அவன் இடி இடி என்று சிரித்தான். கஷ்டம் அறியாத அவனை யூக சக்தி குறைந்த அசடு என்றுகூடச் சொல்லலாம்.

"பி.ஏ.க்கா? ஏம்ப்பா? வேறு துறையில் இடம் கிடைக்கவில்லையா?" என்று அவன் திருப்பித் திருப்பிக் கேட்டுக்கொண்டே பாலுவையும் இழுத்துக்கொண்டு ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். சளசளவென்ற அவனுடைய பேச்சிலோ, அவன் வரவழைத்த சிற்றுண்டிகளிலோ பாலுவின் கவனம் கொஞ்சமும் செல்லவில்லை.

சாப்பிட்டுவிட்டு 'பில்' கொடுக்க ரவி பர்ஸைத் திறந்தான். ரூபாய் நோட்டுகளும் சில்லறையுமாகப் பை குலுங்கியது.

குடல் காயத் தவித்துக் கொண்டிருப்பவன் அறுசுவை உண்டியைக் கண்முன் பார்த்தானேயானல் எப்படித் துள்ளுவான்?

"ரவி...?" என்ருன் பாலு துடிக்கும் நெஞ்சுடன். "நான் இன்று 'பர்ஸை'ப் பறிகொடுத்துவிட்டேனடா..." என்ருன் எப்படியோ.

"அடாடா...அதற்குத்தான் அப்போதிலிருந்து அழுது வடிகிருயாடா? சட்டைப் பையிலேயே பர்ஸை எப்போதும் வைத்துக்கொள்ளக் கூடாது. நான் கையிலேயேதான் வைத்துக்கொள்ளுவேன். எங்கே பஸ்ஸிலா கோட்டைவிட்டாய்? இந்த ஊரிலும் கைதேர்ந்த ஆசாமிகள் இருக்கிருர்களடா..." என்று அவன் சிரித்தான்.

பாலு நிசமாகவே அழுதுவிட்டான் என்று சொல்லிவிடலாம்.

"இல்லே ரவி, அக்கா குழந்தை மோஹனுக்கு உடம்பு சரியில்லே, மருந்து வாங்கப் பணம் தந்தாள். அத்துடன் நான் வைத்திருந்த சில்லறை, என் கத்தி, சாவி எல்லாம் போய்விட்டது. மருந்து வாங்கிப் போகவேண்டும். இங்கு மருந்துக் கடையில் வந்து பார்த்தேன், பை காலியாக இருக்கிறது. நாலு மணிக்கு இன்ஜெக்ஷன் கொடுக்க வேண்டும் என்று டாக்டர் வாங்கிவரச் சொன்னுர்..."

"அதற்கென்ன? எவ்வளவு வேண்டும்? ஐந்து ரூபாய் போதுமா? இந்தாடா, அழுது தொலேக்காதே! இதெல்லாம் ஒரு அநுபவமாக்கும்!"

ரவிக்குத் தன் மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கொண்டே பாலு பணத்தை வாங்கிக் கொண்டான்.

ஹோட்டல் வாசலில் அப்போது கஜேந்திரபுரம் போகும் பஸ் வந்து நின்றது. "பஸ்கூட வந்துவிட்டது, வீட்டுக்குவாயேன், பாலு? அடுத்த 'ஸ்டாப்'பில் இறங்கிஞல் போதும்!" என்று ரவி அவனே அழைத்தான்.

பாலு அவன் கொடுத்த ரூபாய் நோட்டைக் கையிலிருந்த சிறிய நோட்டுப் புத்தகத்தில் பத்திரமாக வைத்துக்

கொண்டு ரவியுடன் பஸ்ஸில் ஏறினன். அந்த நேரத்தில் பஸ்ஸில் கூட்டமிருக்கவில்லை. பெண்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த இடத்தில் ஒரே ஒரு பெண் அமர்ந்திருந்தாள். அவளுக்கெதிரே காலியாக இருந்த வரிசையில் ரவியும் பாலுவும் உட்கார்ந்தவுடன் பஸ் புறப்பட்டது. ரவி அந்தப் பெண்ணைக் கண்டதுமே புன்னகை செய்தான். "அப்பா ஊரிலில்லையே, சுதா? உனக்குத் தெரியாது? வீட்டுக்குத்தானே போகிறுய்?" என்று விசாரித்தான்.

"இன்று வந்துவிடுவதாகச் சொல்லியிருந்தாரே? வரவில்லை?" என்று அவனைத் திருப்பிக் கேட்டாள் அவள்.

பாலு அவளேயே பார்த்துக் கொண்டிருந்தான். ரவி இவ்வளவு சரளமாக விசாரிக்கும் அவள் யாராக இருப்பாள் என்று அவனுடைய உள்ளம் துழாவியது.

செந்தாமரை மடலையொத்த மேனி; கனிவு ததும்பும் கருவிழிகள். சற்றுப் பூசினுற்போன்ற உடற்கட்டு, பச்சைப் பட்டுப்பாவாடையை மறைத்த ரோஜாநிற மெல்லிய ஸில்க் தாவணி, கையிலே இருந்த நோட்டுப்புத்தகம், எல்லாவற்றையும் மாறிமாறி நோக்கிய அவன் அவள் ஒரு பெரிய தனவந்தர் மகளாக இருக்கவேண்டும், அத்தானிடம் சங்கீதம் பயிலுகிறுளோ என்னமோ என்ற முடிவுக்கு வந்தான்.

அடுத்து பஸ் நின்றதும் அவர்கள் இறங்கினுர்கள்.

சுதா முன்னே நடந்தாள்.

'இவள் யார்?' என்று ரவியைக் கேட்க பாலுவுக்குத் தோன்றியது. ஆனுல் நா எழவில்லை.

"அப்பாதான் இல்லையே? வேகமாக போவானேன் சுதா?" என்முன் ரவி.

"அப்படியானுல் நான் வீட்டுக்கே வரவேண்டாம் என்கிறீர்களாக்கும்!" என்று திரும்பிப் பார்த்துவிட்டு நின்ற

அவள் பாலுவைத் தன் அகன்ற விழிகளைச் சுழற்றி ஒரு முறை நோக்கினாள்.

வாசல் வராந்தாவில் பிரம்பு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் மீனா சுவாரசியமாக ஒரு கதைப்புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள்.

அவர்களைக் கண்டதுமே எழுந்த அவள் பாலுவை நோக்கித் திடுக்கிட்டவள்போல, "ஏண்டா பாலுவா? இங்கே எங்கே வந்தாய்? வேலையாக இருக்கிறாயா என்ன?" என்று விசாரித்தாள்.

சுதா அவர்களைத் தாண்டி கூடத்து வாசல்படிக்கு அருகில் நின்று அவர்கள் பேசுவதைக் கவனித்தாள்.

மீனாவுக்கு பாலுவாகப் பதில் கூறுமுன் ரவி முந்திக் கொண்டான்.

"இங்கே பி. ஏ. க்குச் சேர்ந்திருக்கிறானும் அம்மா! விமலா வீட்டில் இருக்கிறானும். பார், இன்று பர்ஸைக் கோட்டை விட்டிருக்கிறான் பஸ்ஸிலே!" என்று தெரி வித்துவிட்டுப் பெரிதாகச் சிரித்தான்.

பாலு நாக்கைக் கடித்துக்கொண்டான். மீனாவிடம் அவன் 'அந்த விஷயத்தைச் சொல்லாமலிருக்க வேண் டுமே?

நல்லவேளை. மீனா அதிக நேரம் அவனுடன் பேச நிற்கவில்லை.

"மாமா இன்னும் வரவில்லையே சுதா?" என்று கூறிக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

அப்புறம் ரவியின் தொணதொணப்பிலிருந்து விடு பட்டு வரும்வரை பாலுவுக்குப் போதும் போதுமென்று ஆகிவிட்டது. வனஸ்பதி சமையல் புத்தகத்திலிருந்து, ஒருவாரத்தில் சுருக்கெழுத்து கற்றுக்கொடுக்கும் ஸ்தாப னத்தின் விவரங்களடங்கிய புத்தகம்வரை, பத்திரிகை களில் பார்க்கும் விளம்பரங்களுக்கெல்லாம் தபால் பில்லைகள்

அனுப்பித் தான் சேகரித்திருந்த அத்தனை துண்டுப் பிரசுரங்களையும் விலைப்பட்டியல்களையும் அவன்முன் கொண்டு வந்து பரப்பிவிட்டான். அவைகளில் இருந்து ஏதாலும் ஒரு அருமையான திட்டம் தன் 'பிஸினஸ்' மூளைக்கு எட்டலாம் என்பது அவனுடைய உறுதியான நம்பிக்கை.

ஒருவழியாக "மருந்துவாங்கிப் போகவேண்டும், நான் இன்னொருநாள் வருகிறேன், ரவி" என்று பாலு விடை பெற்றுக்கொண்டு எழுந்தான். தயங்கி நின்ற அவனிடம் உள்ளிருந்தபடியே மீனு, "வருகிறாயாடா பாலு? வந்து போய்க்கொண்டிரு. விமலாவையும் வரச்சொல்லு" என்று விடை கொடுத்தாள்.

அந்தத் தெருமுனைதான் பஸ் நிற்குமிடம்.

'பஸ்ஸிலேயே போய் இறங்கிவிடலாம். அங்கேயே மருந்துக்கடையும்கூட இருக்கிறது. நல்லவேளை. கடவுள் கருணை வள்ளல்தான்!' என்ற உள்ள நிறைவுடன் அவன் தெருமுனைக்கு வந்து நின்றான்.

சற்றைக்கெல்லாம் அவன் திரும்பிப் பார்க்கையில் அந்த ரோஜாத் தாவாணிக்காரியும் கையில் நோட்டுப் புத்தக சகிதம் குறும்பு வெடிக்கும் சிரிப்புடன் அங்கு வந்து கொண்டிருந்தாள். அவளும் பஸ் ஏற வருகிறாள் போலும்! பாலுவின் உள்ளம் குருகுருத்தது. அவன் அவளைப் பார்க்காமல் மறுபுறம் நோக்கி நின்றான்.

அவள் அவனுக்கு அருகில் வந்துவிட்டாள். அவனுக்குத் திரும்பிப் பார்க்கவும் ஆசை இழுத்தது. சங்கோசமும் பின்னே தள்ளியது.

அவள் கனைத்துக் கொண்டாள்.

"உங்களுடைய நோட்டுப் புத்தகத்தை அங்கேயே வாசல் மேசையில் வைத்துவிட்டீர்கள்... இந்தாருங்கள்!"

இனிய குரல் அவன் செவிகளில் விழவே அவன் திடுக்கிட்டான்,

பணம் இருக்கிறதென்று ஞாபகமாகக் கையில் நோட்டுப் புத்தகத்தை எடுத்தல்லவோ வந்திருக்கிறான்?

மின்னல் வேகத்தில் அவன் கைப்புத்தகத்தைப் பார்த்தான்.

அட பாவமே? அவன் புத்தி இப்படி எப்படிப் பேதலித்தது?

'உங்கள் தேவைக்கு இன்றே எழுதுங்கள்!' என்ற முகப்புடன் காணப்பட்ட ஒரு விலை விவரங்கள் அடங்கிய புத்தகம் அவனைப்பார்த்துப் புன்னகை செய்தது.

"அடே? மறந்து இதைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டேனா? ..தாங்க்ஸ்" என்று அசட்டுச் சிரிப்புடன் அவன் அவள் கையிலிருந்த தன் நோட்டுப் புத்தகத்தைப் பெற்றுக்கொண்டான்.

"நான் மேஜைமீது பார்த்தேன். அப்புறம் ரவியிடம் காட்டிக் கேட்டேன். அவர் நீங்கள் இங்குதானிருப்பீர்கள் என்று சொல்லவே வேகமாக வந்தேன். பர்ஸைப் பறிகொடுத்துவிட்டு இதிலும் ரூபாய் நோட்டு வைத்திருக்கிறீர்களே?" என்றாள் அவள் குறுநகையுடன்.

இதற்குள் அவன் ஏறவேண்டிய பஸ் வந்துவிட்டது. கூட்டம் நிறைந்து இருந்தபடியால் பாலுவுக்கு நிற்கத்தான் இடம் இருந்தது. வழி முழுவதும் பஸ்ஸில் குலுங்குவதாக்வே அவனுக்கு நினைப்பில்லை. காந்திநகரில் வந்து இறங்கி மூலை மருந்துக்கடைக்கு வந்தான். நோட்டுப் புத்தகத்திலிருந்து ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக்கொண்டு சட்டைப்பைக்குள் வெறும் காகிதத்தில் மடித்துவைத்திருந்த தன் சொந்தப் பணத்துக்காகக் கையைவிட்டான்.

சற்றுமுன் கருணை வள்ளலாக இருந்த கடவுளே? உன் கருணை இதுதானா?

பொய்க்காகக் கைமேல் தண்டனையா?

அவன் மடித்து வைத்திருந்த நான்கு ஒரு ரூபாய் நோட்டுகளும் விமலா கொடுத்திருந்த டாக்டரின் சீட்டுடன்

அந்தர்த்தானமாகிவிட்டிருந்தது! பஸ்ஸில் கூட்டத்தில் நெருங்கி நின்ருனே?

அவன் சொன்ன பொய் செய்த வினையோ, அன்றி அந்தக் கன்னி விழிகள் தந்த மயக்கம் செய்த வினையோ?

மருந்துப் பெட்டியும் கையுமாகத்தான் வீட்டுக்குள் நுழைய வேண்டும் என்று வீட்டைவிட்டு இறங்கியவனுக்குக் கடனுடன் காதல்தானு கிடைத்தது? வீட்டின் பக்கம் அண்ட அண்ட நடை தளர்ந்தது. வீட்டின்முன் வந்ததும் அவனுடைய இருண்ட முகம் திகைத்தது.

கதவு ஏன் பூட்டப்பட்டிருக்கிறது?

அடுத்தவீட்டுச் சிறுமி அவனைக் கண்டதும் சாவியுடன் ஓடிவந்தாள்.

"மாமாவும் மாமியும் மோஹனை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போயிருக்காங்கோ. சாவி கொடுக்கச் சொன்னுங்கோ!" என்று சாவியை நீட்டினுள்.

மனப்பளு குறைந்தவனுகப் பாலு கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றுன். கைமாற்று கிடைக்காததால் பகல் நேரத்துடன் மூர்த்தி திரும்பிவர, இருவரும் குழந்தையைச் சர்க்கார் வைத்திய சாலைக்கு அழைத்துச் சென்றிருந்தார்கள். டாக்டர் விரும்பியபடி குழந்தையை அங்கேயே விட்டுவிட்டு அவர்கள் திரும்புகையில் மாலை மணி ஏழடித்துவிட்டது.

விமலா அவனைக் கண்டதுமே தனியாக வந்து, "இப்போது கொஞ்சம் தேவலை, நீவேறு மருந்தை வாங்கிவிட்டாயா பாலு?" என்று கவலையுடன் விசாரித்தாள்.

பாலு ஒரே நொடியில் சமாளித்துக்கொண்டு விட்டான்.

"ஆமாம், வாங்கிவந்து படியேறினேன். கதவு பூட்டியிருந்தது. ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போய்விட்டதாக பானு சொன்னுள். கடைக்காரன் பில் போட்டாகிவிட்டது,

திருப்பி எடுக்கவே மாட்டேன் என்று தகராறு செய்தான். அவனிடம் வாதாடித் திருப்பினேன்,'' என்று ஒரு அண்டப்புளுகைக் கற்பித்து உண்மையை மறைத்து விட்டான்.

தலைவாரிக் கொண்டு கண்ணாடியின்முன் நின்ற பாலுவுக்கு அன்று இப்படிப் பொய் சொல்லும் திறமை தனக்கு எப்படி உண்டாயிற்று என்பதை நினைக்கையிலேயே உள்ளூற மகிழ்ச்சி பொங்கியது.

## 10

"நிச்சயமாக ஏதோ இருக்கிறதுபோல்தான் தோன்றுகிறது விமலா. நானும் அரைமணியாகப் பார்க்கிறேன், கண்ணாடியும் சீப்பும் தேய்ந்து விடும்போல இருக்கிறது. ஆனந்தம் வேறு அடக்க முடியாமல் பொங்குகிறது. டேய், நான் உன்னுடன் பெண்ணைப்பார்க்கவந்து காபி டிபனை ஒருகை பார்க்கலாம் என்று நாக்கைத் தீட்டிக்கொண்டு காத்திருக்கிறேன். நீ குறுக்குவழியில் இறங்கி ஏமாற்றி விடுவாய் போலிருக்கிறதே? இப்போதேயானும் சொல்லி விடு அதை!'' என்றான் மூர்த்தி.

"நீ...ங்கள் ஒன்று அத்தான், காலணாவுக்கு வழியில்லாதவனிடம் போய் இந்தப் பேச்செல்லாம் பேசிக் கொண்டு!'' என்று சிரிப்பினிடையே பகர்ந்த பாலு சீப்பைக் கண்ணாடியின் மேல் வைத்துவிட்டுச் சாப்பிட வந்து உட்கார்ந்தான்.

"காலணா இல்லாதபோனால் என்ன? காதலுக்குத்தான் கண்ணே கிடையாதே? ஒரு லட்சாதிபதியின் மகளுக்கும் உனக்கும் இடையே வந்து சிக்கிக்கொள்கிறது. அப்புறம் உன்னைக் காலணாவுக்கு வழியில்லாதவன் என்று சொல்ல முடியுமா?...''

"ஆமாம், பாலுவின் ஜாதகப்படி, 'அவள்' மூலமாக நிறைய சொத்து வர இருக்கிறதாம். நம் மேம்பாலத்து ஜோசியன் அவனுக்குப் பத்து வயசிலேயே அதைச்

சொல்லி இருக்கிறான். ஏற்கெனவே யாரோ மரக்கடை கணபதியாமே? படிக்கவைத்துப் பெண்ணையும் கொடுக்கிறேன் என்று வந்தாராம். அம்மாவுக்குக்கூட இஷ்டம் தான். அவள் தான் சொன்னாள். அப்பா தான் வேண்டாம் என்று மறுத்துவிட்டாராம், அது தான் நம்மிடத்தில் வந்து தாளம் போடுகிறான்...'' என்று விமலாவும் கணவனுக்கிணைய அவனைக் கேலி செய்தாள்.

" அப்படியா சங்கதி? அப்படியானால் நாம் கொஞ்சம் ஜாக்கிரதையாகத்தான் பழக வேண்டும். ஏன் விமலா? அந்த ஜோசியன் சொத்து எப்படி வரும் என்று சொல்லி இருக்கிறான்? வீடாகவா, நிலமாகவா, அல்லது ரொக்கமாகவேவா? ஒரு தட்டுமுட்டு என்றால் கைமாற்றுக் கேட்க வருவேனப்பா. இப்போதே சொல்லிவைக்கிறேன், மறந்து போய்விடாதே!"

'' ஐயோ, போயும் போயும் ஐந்து பத்துகை மாற்றுத் தானா உங்களுக்கு அவனிடம் கேட்கத் தோன்றவேண்டும்? யாசித்தாலும் கௌரவம் வேண்டாமா? ஜம்மென்று மெருகழியாத காரில் போய்க்கொண்டிருப்பான். அன்று மோஹனை அழைத்து வரும்போது ஆஸ்பத்திரிக்கு அருகில் பஸ்ஸுக்குக் காத்து நின்றோமே கால் கடுக்க? அது போல் குழந்தையையும் தோளில் சாத்திக்கொண்டு நிற்போம். அந்தமாதிரி சமயங்களில் பார்த்தால் கொஞ்சம் கவனித்து ஒரு 'லிப்ட்' கொடுடாப்பா என்றாலும் கௌரமாக இருக்கும்...'' என்று விமலா முடிக்குமுன் மூர்த்தி குறுக்கிட்டான்.

" இது ரொம்ப கௌரவமாக்கும்! ஒன்றரையணா விவகாரம்! ஐந்து பத்து கை மாற்று இதைவிட எத்தனையோ உயர்ந்தது!'' என்றான்.

தட்டில் சோற்றை வைத்துக்கொண்டு அதை உள்ளே செலுத்த இயலாமல் பாலு விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தான்.

' அந்த தம்பதிகளிடையே தன்னுடைய நாட்கள் முடிவின் எல்லையைச் சமீபித்துவிட்டன என்பதை அவன்

அப்போது எப்படி அறிவான், பாவம்? அன்று பகல் நேரத்தில் கலாசாலையில் முதல் 'பீரியட்' முடிந்ததுமே பாலு வெளியே கிளம்பிவிட்டான். கஜேந்திரபுரத்துக்குச் செல்ல அவனுக்கு அன்று பல முகாந்தரங்கள் இருந்தன.

'வந்து போய்க்கொண்டு இருடா!' என்று அவனுடைய அன்பான தமக்கை சொல்லி இருக்கிருள். முதல் நாள்தான் ஊரிலிருந்து பணம் வந்திருக்கிறது. ரவியிடம் அன்றுபட்ட கடனைத் திருப்பிக்கொடுக்க வேண்டும்...... இவை மட்டும்தானு? இதற்குக் கலாசாலை முடிந்தபின் போகக்கூடாதா? மீனு அக்கா அவன் போனதும் மகிழ்ந்து குழைந்து உபசரிப்பது குறைந்துவிடப் போகிறதா? ரவிதான் அவனுடைய பிச்சைச்காசு ஐந்து ரூபாயின்றி அடுத்த வேளைக்கு என்ன செய்யலாம் என்று மேட்டுவளையைப் பார்த்துகொண்டு வியாகூலத்தில் முழுகியிருக்கப் போகிருனு?

மூன்று மணி வேளை பார்த்து அவன் அங்கு செல்லுவதன் காரணம் இனியும் அறிய முடியாததல்லவே?

வாசல் 'காம்பவுண்டு'க் கதவைத்தாண்டி அவன் உள்ளே கால்வைக்கு முன்னரே சுருதியுடன் இழைந்த தீங்குரலின் கானம் அவனுக்கு நல்வரவளித்தது.

அந்த கானத்துக்குரியவள்......

அவன் பரபரப்புடன் வராந்தாவைக் கடந்து கூடத்தின் முன் நின்று பார்த்தான்.

அவன் அதிர்ஷ்டக்காரன்தான்.

கங்காதரத்துக்குமுன் அந்தப் பொற்பாவைதான் பாடிக்கொண்டிருந்தாள். நகங்களில் பட்டுப்போல் சிவப்புச் சாயம் ஒளியிட அவளுடைய தந்தக்கரம் தம்பூரை மீட்டிக் கொண்டிருந்தது.

மாணவியின் கானத்திலே மெய்ம்மறந்தவராகத் தாளம் போட்டுக்கொண்டு தலையை ஆட்டிக்கொண்டு இருந்தார் கங்காதரம். அழைத்து மரியாதை காட்டாத

இடத்திலே கால்வைக்கக்கூடக் கூசும் அவனுடைய கௌரவ உணர்ச்சி எங்கே போயிற்றோ ?

பாலு மெள்ளப்போய்க் கூடத்தின் சுவரோரமா போடப்பட்டிருந்த பெஞ்சியில் உட்கார்ந்தான். அதன் மேலிருந்த தினத்தாளைப் புரட்டிப் பார்ப்பதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருந்தான்.

உள்ளிருந்து கண்களைச் சுருக்கிக்கொண்டு ஜபமாலையும் கையுமாக வெளிப்பட்ட பாட்டியம்மாள் அவன் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தாள்.

" ஏன் மீனு ? பெஞ்சியிலே உட்கார்ந்திருப்பது யாரு ? வருகிறவர், போகிறவர்கள் எல்லோரையும் உள்வரைக்கும் எதற்கு வரச்சொல்லுகிறாய் ? வாசலுடன் நிறுத்தி வைக்கக்கூடாதோ ?" என்று அவள் கேட்டுக்கொண்டே சென்றது பாலுவின் செவிகளுக்கும் வந்து எட்டியது. எழுந்து சங்கோசத்துடன் அவன் வாசல்படியில் வந்து நின்றான். பாட்டி கேட்ட கேள்வியில் மீனு வெளியே வந்துபார்த்தாள்.

" பாலுவா ? ரவியைத்தேடி வந்தாயா ? என்ன விசேஷம் ?" என்று நேரடியாகக்கேட்ட அவள் பாட்டியின் பக்கம் திரும்பி, " அடி அம்மா ? இந்தப் பையன் யார் தெரியுமோ ? ..." என்று பாலக்காட்டுப் பேச்சுக்கே உரிய ராகத்தில் நீட்டினாள்.

" யாரு ? ..." என்று கிழவியும் நீட்டினாள்.

" தம்பி ! செல்லத்தின் பிள்ளை !" என்று மீனு பாட்டிக்கு அவனை அறிமுகம் செய்வித்தாள்.

கிழவி அசுவாரசியமாக 'உம்' கொட்டிவிட்டு ஜபமாலையை உருட்டிக்கொண்டு போனாள்.

" ஏண்டா ? உன் அக்காவுக்கு இங்கே வந்து எட்டிப் பார்க்கக்கூடாதா ? எனக்குத்தான் இத்தனை பெரிய வீட்டை விட்டு வர நேரம் கிடைக்கவில்லை. அவளுக்கென்ன ? காலமே சாப்பிட்டுவிட்டுப் புருஷன் ஆபீஸுக்குப் போனால் விளக்குவைத்து வருகிறான். நான் வந்தால்

தான் அவள் வரவேண்டுமா ?" எவரையேனும் குறை கூறிக்கொண்டிருக்காவிட்டால் அவளுக்குப் பொழுது தான் போகாதோ, அல்லது வேறு விதமாகப் பேசவே தெரியாதோ அவளுக்கு !

பாலு அவளுக்குப் பதில் எதுவும் கூறுமுன் பாட்டு முடிந்துவிட்டது. கங்காதரம் அவனைப்பார்த்துப் புன்னகை செய்தார்.

" இங்கே படிக்கிருயா ?" என்று அவர் கேட்டார்.

" ஆமாம், பி. ஏ.க்குச் சேர்ந்திருக்கிறேன்..."

" விமலா எங்கு இருக்கிருள் ?"

" பீளமேடு போகும் வழியில் இருக்கிறதே, விநாயகா காலனி என்று ?...அங்குதான்..."

" இல்லே, நீயும்கூட இருக்கிருயே, காலேஜுக்குப் போக வர சௌகரியமாக இருக்குமோ என்று கேட்கிறேன்..."

" என்ன செய்வது ? இருக்கும் சௌகரியம்தான்..."

அவன் சிரித்து மழுப்பினுன்.

" இல்லே, ரொம்பவும் அசௌகரியமாக இருந்தால் இங்கு வந்து இரு அப்பா. நான் வேண்டாம் என்று சொல்லவில்லே. என்ன ?"

அவர் சிரித்துக்கொண்டே அவனே நிமிர்ந்து பார்த்தார்.

"...ம், இப்போது ஒன்றும் தெரியவில்லே." என்ருன் பாலு.

குனிந்து கீழே விரலால் கோலமிட்டுக் கொண்டிருந்த சுதா சட்டென எழுந்தாள்.

" நான் போகட்டுமா ?" என்று கேட்டாள்.

"ம், இந்தா, மீனு? சுதா போகிறாளாம் பார்!" என்று மனைவிக்குத் தகவல் கொடுத்துவிட்டு அவர் மீண்டும் பாலுவின் பக்கம் திரும்பினார்.

சுதா தம்புராவை எடுத்துக் கூடத்தின் பக்கம் இருந்த அறைக்குள் வைத்துவிட்டு உள்ளே சென்றாள்.

பாலுவுக்கு வெளியே செல்ல மனம் பறந்தது.

"மூர்த்திக்கு ஆபீஸ் எங்கு இருக்கிறது?" என்று கங்காதரம் விசாரித்தார்.

"இங்குதான், சின்னத்தம்பி ரோடுக்கு வருகிறார்..."

"சந்தோஷம், எப்படியோ நீ படித்து முன்னுக்கு வந்து குடும்பத்துக்கு ஆதரவாக இருக்க வேண்டும். உனக்கு அசௌகரியமாக இருந்தால் இங்கு வா. வித்தியாசமாக நினைக்காதே...மீனு? பாலுவுக்குக் காபி கொண்டு வந்து கொடு!" என்று உத்தரவிட்டவர், "ரவியை எங்கே காணோம்?" என்று கேட்டார்.

"வேண்டாம் அத்தான்..." என்று பாலு 'மரியாதை'யாக மறுத்து எழுந்திருக்குமுன் கணவனின் கேள்விக்கு "எங்கே போனானோ? சொல்லிக்கொண்டா போகிறான்?" என்று பதில் கொடுத்துக்கொண்டே மீனு வந்தாள். கையிலிருந்த காபித் தம்ளரை பாலுவிடம் நீட்டி, "விமலாவை வரச் சொல்லடா!" என்றாள் அதிகாரமாக.

சூடான அந்தப் பானத்தை எப்படியோ விழுங்கிவிட்டு, "நான் வருகிறேன் அக்கா, வருகிறேன் மாமா!" என்று தலையை ஆட்டி விடைபெற்றுக் கொண்டு அவன் வெளியே வந்தான்.

சூடான பானத்தைப் பருகியதாலோ என்னவோ, வியர்வை அரும்பியது. கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு அவன் நடந்தான். அவன் பத்தடி கூடத் தாண்டியிருக்க மாட்டான், வாசற்கதவு மீண்டும் ஒருமுறை திறந்து சாத்தப்படுவதை அறிந்தான்.

அவள் யாரோ?...சே? அவனுக்கு ஏன் அசட்டுத் தனமாகப் புத்தி போகிறது? அன்று எதற்காக அங்கு வந்தான்?...

மோசம், மிகவும் மோசம்! அந்தப் பக்கம் வருவதற்கு அவனுக்கு முக்கிய காரணம் எதுவுமே இல்லை. அழகி, பணக்காரி, கலைமகளின் அருளைப் பெற்றவள், அவ ளெங்கே? அவனெங்கே?

ஊஹூம்! அந்த எண்ணத்தை முளையிலேயே கிள்ளி விட வேண்டும்! மன உறுதியைக் கால்களில் காட்டுவது போல் அவன் வேகமாக நடக்கையில் 'களுக்' கென்ற சிரிப்பொலி அவனைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. மாரன் அவ்வளவு லகுவில் தோற்றுவிடுவானா? இந்தமாதிரி எத்தனை அசட்டு வைராக்கியங்களைத் துகளாக அடித்து வெற்றி பெற்றிருக்கிறான்? "அதோ உங்கள் ஏழாம் நம்பர் பஸ் வருகிறதே? விருவிரென்று நீங்கள் 'ஸ்டாப்பை' க் கடந்து நடக்கவும் எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. மன் னித்துக் கொள்ளுங்கள்!" என்றாள் அந்தப் பின்னலழகி. அவனுடன் ஏதாவது பேசவேண்டும் என்றே அதைச் சொன்னாள் போலத் தோன்றியது அவனுக்கு.

முகம் சிவக்க, பாலு வந்த பஸ்ஸில் தொற்றி ஏறினான். பெண்கள் உட்கார்ந்திருந்த வரிசைகளுக்கிடையே அவன் நிற்க நேர்ந்தது. 'கண்டக்டர்' பஸ்ஸை நிறுத்தி ஏதோ கணக்குப் பார்த்தான்.

"இதோ நிற்கிறாள் பார், நைலான் தாவணியுடன்? இந்தப் பெண்தான் மரக்கடை கணபதியின் பெண், குமாரி சுதா. கங்காதர பாகவதர் சிட்சை. பட்ட மரம் பாலாய்ச் சொரியும்.. அப்பேர்ப்பட்ட குரல். இங்கே டவுன் ஹாலிலே அடுத்த மாசம் கச்சேரி செய்யப் போகிறாளாம்!..."

பஸ்ஸிலே இருந்த ஒரு வயதான மாது சுதாவுக்கு வியாக்கியானம் செய்து கொண்டிருந்தாள்.

யாரேனும் பாலுவை ஓங்கி அடித்தார்களா? அவன் முகம் ஒரு கணத்தில் ஏன் அப்படிப் பேயறைந்தாற் போல ஆகவேண்டும்?

பஸ் 'புர்' ரென்று கிளம்பியது.

சுதாவின் உருவம் இடுக்குவழியே அவனுக்குத் தெரிந்து ஓடியது.

மரக்கடை கணபதி! மரக்கடை கணபதி!

"பெரிய முறைப்பு முறைத்தீர்களே? இப்போது என்ன சொல்கிறாயடா பயலே?" என்று சுதாவின் கன்னம் குழிந்த புன்னகையிலே கணபதியின் கேலிச் சிரிப்பா மிளிர்ந்தது?

சுழலும் உள்ளத்துடன் வீட்டுக்கு வந்த அவனுக்கு இரு செய்திகளை வைத்துக்கொண்டு மூர்த்தியும் விமலாவும் துடித்துக் கொண்டிருந்தார்கள். ஒன்று ஊரிலிருந்து வந்திருந்த கடிதம். அது எதிர்பாராத செய்தியைத் தாங்கி வந்திருந்தது.

"ஜானகிக்குக் கல்யாணமாம், இதோபார் கடிதத்தை!" என்று விமலா மஞ்சள் தடவப்பெற்ற கடிதத்தை அவனிடம் நீட்டவும் அவனுக்குக் கனவா நினைவா என்று புரியவில்லை.

"கல்யாணமா? ஜானகிக்கா?" என்று திகைப்பும் வியப்புமாக அவன் கடிதத்தைப் பிரித்தான். மூர்த்தியின் பெயருக்குத்தான் கடிதம் எழுதப்பட்டிருந்தது.

"காலம் வந்தால் எதுவும் நிற்காது என்று பெரியவர்கள் சொல்லுவது பொய்ப்பதில்லை. ஜானகிக்குக் கங்கண ப்ராப்தம் வந்துவிட்டது போலிருக்கிறது. பையன் படித்தவன். தகப்பனார் போலீஸ் சூபரின்டென்டெண்டாக இருந்து ஓய்வு பெற்று இவ்வூரில் இருக்கிறார். பாலுவுக்குக் கூடத் தெரியும். ஜானகியின் அழகையும் குணத்தையும் கண்டு அவராகவே தம் மகனுக்கு இரு செலவும் போட்டுக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கேட்டார். மிக நல்ல மனிதர். நாம் யோசிக்க என்ன இருக்கிறது? எப்படியும் அவளுக்கு ஒருநாள் மணம் செய்விக்கத்தானே வேண்டும்? இதைவிட நல்ல இடமாக நான் எங்கிருந்து தேடப் போகிறேன்? ஏதோ கடவுள் சித்தம். தை பிறந்தும்

முதல் முகூர்த்தம் ஏற்பாடு செய்து இருக்கிறோம். வேறு மனிதர்கள் யாரும் இங்கு இருந்து நடத்துவதற்கு இல்லை என்பது உனக்குத் தெரியாததல்ல. எனவே விமலா, குழந்தைகளுடன் நீ முன்னதாகவே வந்துவிட வேண்டும். பரீட்சை சமீபித்துக் கொண்டிருப்பதால் பாலு மும்முரமாகப் படித்துக் கொண்டிருப்பான் என்று நம்பு கிறேன்...''

கடிதத்தை முழுதும் முடிக்கவும் பொறுமையின்றிக் கீழே விட்டெறிந்தான் பாலு.

“அப்பாவுக்கும் ஏனிப்படிப் புத்தி போகிறது? எனக்கு ஏதாவது பிடித்தால்தானே? குடுகுடுவென்று ஜானகிக்கு இப்போது யார் கல்யாணம் நிச்சயம் செய்யச் சொன்னார்கள்? அதிகமாக எனக்கு ஒரு பத்து ரூபாய் அனுப்பத் திணறுகிறார்கள்? என்ன செலவில்லை என்றா லும் கல்யாணம் லேசில் முடிந்துவிடுமா? ஒரே குளறுபடி! ஒரு காரியத்தையும் ஒழுங்காகச் செய்ய மாட்டார்கள்! எனக்குத் தெரியும், எல்லாம் இந்த அம்மாவால் வருவது தான்!...''

“இரு தம்பி, இந்த மாப்பிள்ளையைப் பற்றி உனக்குத் தெரியும் என்கிறாரே? யார் என்று சொல்லிவிட்டு இரை...''

“ஒரு கிழம், கந்தையா வென்று. வேட்டியைத் தூக் கிக் கட்டிக்கொண்டு எந்நேரமும் வாய்க்கால் கரையிலேயே நிற்கும். போலீஸ் உத்தியோகஸ்தராக இருந்தாராம்! தாடியும் மீசையுமாகப் பார்த்தாலே எனக்குப் பிடிக்காது அவரை. முகத்திலே சிடுசிடுவென்று எள் வெடிக்க எந் நேரமும் சிம்னிபோல் புகையைவிடும் ஒரு மகன் உண்டு அவருக்கு. எங்கோ மலையாளத்திலோ, மங்களூர்ப் பக்கமோ வேலையாக இருப்பதாகக் கேள்வி. அவன் வந்தால் ஒரு வினாடிக்கு ஒரு உடை உடுத்துக்கொண்டு ரயில்வே ஸ்டேஷனிலோ, பெண் பள்ளிக்கூட முனையிலோ நிற்பதைக் காணலாம். நானும் ராமுவும் அவனை மறைவில் கேலி கூடச் செய்வோம். அவனுக்கா ஜானகியைக்

கொடுப்பது?...அவரே கல்யாணம் செய்து கொள்ளுகிறு ராம், அவரே!...''

"அட, அவரே கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லை தம்பி, மகனுக்குத்தான் நடத்தி வைக்கப் போகிருர். உனக்கேன் இத்தனை கோபம்? சீர்திருத்த மன்சோடு செலவு வைக்காமல் சம்பந்தம் செய்துகொள்ள முன்வந் திருக்கும் அவரைப் பாராட்ட வேண்டாமா? நிதானம் வேண்டும் தம்பி உனக்கு..." என்ருன் மூர்த்தி.

ஆனுல் பாலுவுக்கு நிதானம் வரவில்லை. சரியான காரணம் புரியாமலேயே அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

"உம்......நம் விஷயத்தையும் சொல்லிவிடலாமா விமலா? உன் தம்பியின் உக்கிரத்தைப் பார்த்தால் பயமாக அல்லவோ இருக்கிறது?" என்று மூர்த்தி புதிர் போட்டான்.

"போங்கள் அத்தான், எனக்கு ஒன்றும் பிடிக்க வில்லை!" என்று அவன் கூறியதைச் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே வெறுப்புடன் உட்கார்ந்தான் பாலு.

"நமக்குப் பிடிக்கிறதே நடக்கிறதா? என்னப்பா செய் கிறது? எனக்கும் கூடத்தான் இப்போது இந்த ஊரை விட்டுப் பெயர இஷ்டமில்லை!" என்ருன் மூர்த்தி இன்னும் கூடமாகவே.

"உங்களுக்கு எல்லாம் விளையாட்டாக இருக்கிறது அத்தான். நான் இப்போது விளையாடவில்லை, 'ஸீரியஸ்' ஸாகச் சொல்லுகிறேன்" என்ற பாலுவுக்கு மூக்கின் நுனி சிவந்து பளபளத்தது.

"நான் மட்டும் என்ன விளையாடுகிறேனு? எனக்கு மதருஸுக்கு மாற்றல் உத்திரவு வந்திருக்கிறது, போகா மல் என்ன செய்ய?" என்று மூர்த்தி கூறியதும் பாலு அயர்ந்து போய்விட்டான்!

# 11

**க**ங்குல் தன் கரிய துகிலை ஒருபுறமாகச் சுருட்டிக் கொண்டு மறைய, கீழ்வானம் சிவந்தது. கிண்ணம் கவிழ்ந் ததுபோல் பொற்குழம்பு வான வீதியெங்கும் பரவியது. உதயகன்னியின் நெற்றிச் சுட்டியில் ஒளிரும் வைரமணி என ஆதவன் குபீரென உதயமானன்.

ஆற்றங்கரையோரம் அடர்ந்து வளர்ந்திருந்த மரம் செடிகளில் வாழும் புள்ளினங்கள் அவனுக்கு உதயகீதம் பாடின. கலகலப்பைப் பரப்பின. தனி வழி செல்லும் பயம் நீங்கிய கன்னி காவேரி, தன்னுடைய அகண்ட இரு தயம் மலர்ந்து விம்ம ஒளி நகை செய்தாள்.

பி, பி என்ற முகவுரையுடன் நாதசுரக்காரன் பூபாள ராகத்தை ஊதத் தொடங்கினன்.

...........வேளை வந்துவிட்டது!

வருமோ, வராதோ என்று தெரியாமலிருந்த அந்த நாள் வந்துவிட்டது!

பாலு படித்துத் தேருமல், எங்கும் தேடி அலையாமல், ஆயிரம் பொய் சொல்லாமல், கைக்காசுக்குச் செலவு வைக் காமல் வந்துவிட்டது!

டுடும், டுடும், டுடும் என்ற தவுலின் ஒலி வந்துவிட்டது, வந்துவிட்டது என்று அவளுடைய காதுகளில் முழங் கியது.

மருதோன்றியின் சாரம் பட்டுச் சிவந்திருந்த ஜானகி யின் பாதங்களை ஸ்பரிசித்து மணப்பெண்ணை அவளை உற்ற தோழியாகக் கேலி செய்து கொண்டிருந்தாள் காவேரி.

'ஏனம்மா, கதையில் தவிர வாழ்க்கையில் வராது என்று இருந்தாயே? அந்த நாளும் இதோ வந்துவிட் டதே? ஏன் இன்னும் முகவாட்டம்?' என்று அவள் சிரித்துக் கேட்பது போலிருந்தது.

'ஒற்றை வளையல் இருந்த இடத்திலே குலுங்கக் குலுங்கப் பொன்வளையல்கள் இளம்பரிதியின் ஒளியிலே பளிச்சிடுகின்றன. பழுப்பேறிய மில் சேலை இருந்த இடுப்பிலே வழவழவென்று பட்டுச் சரிகைச் சேலை இருவர்ணங்களில் ஜாலம் செய்கிறது. கழுத்திலே பொற்சரம், காதிலே வைரம், மூக்கிலே முத்து, தலையைத் திருப்ப முடியாத அளவுக்கு மலர்ச்சிங்காரம், இதோ வந்துவிட்டதே? இன்னும் என்ன வாட்டம்?' என்று கரையிலே வீசிய மென் காற்று அவளுடைய காதோடு கேட்டு நகைத்தது.

அவளுக்கு என்ன வாட்டம் இன்னும்?...

சிற்றலைகளுடன் சிரிக்கும் ஆறு சுழித்துச் சுழித்து ஏன் சோக ஒலியை எழுப்பவேண்டும்? நாதசுரத்தின் இன்னிசையை அந்தத் தவுலின் ஒலி வந்துவிட்டது, வந்துவிட்டது என்று ஏன் பயங்கரமாக முழக்கி அமுக்க வேண்டும்?

பூ கனக்குமா? மணம் உள்ளத்தை அழுத்துமா? கங்கணம் குலுங்கிச் சிரிக்காதா? கையை வருத்துமா?...

இந்தக் கேள்விகளுக் கெல்லாம் ஜானகியின் பேதை உள்ளத்துக்குப் பதில் கூறத் தெரியவில்லை. ஆனால் அவளுக்கு......வேளை வந்துவிட்டது!

செல்லம் ஆசைப்பட்டபடி மருமகன் வந்து குதித்து விட்டான். சோற்றுக்குத் துணிக்கு, நகை நாணயத்துக்குப் பஞ்சமில்லா இடம், பெரிய மனசைப் படைத்த மனிதர், பிக்குப் பிடுங்கல் இல்லாத குடும்பம், முதல்தாரம், இத்தனைக்கும் விலையுமில்லை.

என்றாலும் கல்யாணம் நிச்சயமான தினத்திலிருந்து செல்லத்தின் கொஞ்சநஞ்ச மன நிம்மதியும் சந்தோஷமும் எங்கே போயின? பயங்கொண்ட புறாவைப்போல அடி நெஞ்சம் துடிப்பானேன்?

நம் சமூகத்திலே பெண்களின் நல்வாழ்வு கடைச்சரக்கைப்போல இன்னும் வியாபாரப் பொருளாகத்தானே இருக்கிறது? இதன்காரணமாகப் பெண்களைப் பெற்ற

பிரபுக்கள் ஆண்டியாகிறார்கள். ஏற்கெனவே ஆண்டியாக இருக்கும் அப்பாவிகளுக்குப் பிறக்கும் பெண்களோ தம் வாழ்வுக்கு விலையாகத் தம் இன்பத்தையோ, அன்பையோ, ஏன் நல்வாழ்வையோகூடக் கொடுக்க வேண்டியதுதான் !

செல்லத்துக்கு இது தெரியாதா ? அவள் அறியாததா, அநுபவியாததா ?

கிழவர் உண்மையான பெருந்தன்மையுடன் தான் அவர்களுடன் சம்பந்தம் செய்ய முன்வந்திருக்கிறாரா ? கத்தரிக்காய்க் கூடைக்காரியிடம் கூடக் காலணாவுக்கும் கறார் பேசும் கந்தையா உண்மையிலேயே பரந்த நோக்குடன் தான் மகனுக்கு விலைகூறவில்லையா ?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அவளுடைய நெஞ்சின் ஆழத்தில் ஒரு பதில் இருந்தது. அது வெளியேயும் வராமல் உள்ளேயும் அமுங்காமல் முள்ளென உறுத்தி வேதனை செய்தது.

முதல் தாரம் தான். உயரமாக வளர்ந்திருக்கிறான். படித்துப் பட்டம்பெற்று இருக்கிறான்......ஆனால், சாந்தமோ, அறிவின் ஆழமோ இல்லாது அலையும் பார்வையும், வயதுக்குரிய ஒளியின்றி வறண்டிருக்கும் முகமும், முப்பதுக்கு மேற்பட்ட பிராயமும்......கிழவரின் பெருந்தன்மையும் ஒன்று கூடும்போது ?......

புத்தம் புது மலரை அர்ப்பணிக்கக்கூடிய தூய சந்நிதியாக இருக்குமா அவனுடைய உள்ளமும் உடலும் ?

உத்தியோகமாக ஊர் ஊராகப் போவதால் வறண்டு போயிருக்கலாம் முகம். உண்மையான சீர்திருத்த நோக்குடன் வரதட்சிணை வேண்டாம் என்று தான் சொல்லுவதிலிருந்து வெளியார் பையனுக்குஏதோ குற்றம் என்று கதை கட்டிவிடுவதாகவும், அதனாலேயே அவனுடைய கல்யாணம் இத்தனை நாட்கள் தடைப்பட்டுப் போயிற்றென்றும் மகனுடைய இத்தனை நாளைய 'பிரும்மசரி'யத்துக்குக் காரணமும் சொல்லுகிறார் கிழவர்.

இன்னும் மனசை ஏன் அலேபாய விடவேண்டும். அவள்?

ரங்கநாதத்துக்கு அளவற்ற திருப்தி, மகிழ்ச்சி. எதையும் துருவித்துருவி ஆராயும் வழக்கம் அவருடைய மனசுக்குக் கிடையாது. ஆனால் செல்லத்துக்கு அதுவே தானே வழக்கம்?

"எனக்கு இஷ்டமில்லே, கல்யாணத்தை நிறுத்தவும்" என்று பாலுவும் வேறு கோபத்துடன் கடிதம் எழுதியிருந்தான்.

ரங்கநாதம் அதை லட்சியமே செய்யவில்லே. "கிடக்கிறன், சிறுபையன், அவனுக்கென்ன தெரியும்? ஏதோ கோபத்தில் எழுதியிருக்கிறன்." என்று தள்ளிவிட்டு உற்சாகத்துடன் இருந்தார்.

கல்யாண நாள் நெருங்க நெருங்க செல்லத்தின் இனமறியாத திகில் அதிகமாகிக் கொண்டுவந்தது.

ஊரில் நடந்த திருமண வைபவங்களில் எல்லாம் மாப்பிள்ளே அப்படி இப்படி என்று குறைகூறிய ஜானகி தன் விஷயத்திலே மௌனம் சாதித்தாள்.

அவளேப்போன்ற பெண் குழந்தை, "மாப்பிள்ளே பிடித்திருக்கிறதா அம்மா?" என்று பெற்றோர் கேட்கையில் பின் வேறென்ன சொல்லுவாள்?

ஏன்? செல்லத்தையும் கூட அன்று ரங்கநாதத்துக்கு முன் விலே பேசப்படும் பொருளேப் போல நிறுத்தித்தான் வைத்தார்கள். கமலம்மாளே, 'என் தம்பியைப் பிடித்திருக்கிறதாடி செல்லம்?' என்று கேட்கவும் செய்தாள்.

இவர் கையைத்தாம் நாம் பிடித்தாக வேண்டும், வேறு வழியில்லே என்பது ஒருவிதமாகத் தீர்ந்துவிட்ட பிறகு இந்தக் கேள்விகளெல்லாம் வெறும் சம்பிரதாயமாகத் தானே அமைந்து விட்டன?

ஜானகிக்கும்......ஏறக்குறைய அபபடித்தானே நேர்ந்திருக்கிறது?......வேண்டாம், இந்தக் கல்யாணம் வேண்டாம், நிறுத்திவிடலாம்.

பையனைப்பற்றி நல்ல அபிப்பிராயம் கொடுக்கும் மனிதர் யாரையும் அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. அந்த வீட்டில் பெண் மக்கள் எவரும் இல்லை. மேலும் கிழவரும் கண்டிப்பானவர். அதனாலோ என்னவோ வம்பு வேண்டுமானால் கிளம்பியிருக்கலாம். சந்தேகத்துடன் சம்பந்தம் செய்வானேன்? பாலுவும்கூட ஒரு நல்லகாரியம் என்று ஆரம்பித்து எழுதியிருக்கையில் வேண்டாம் என்று தடுத்து எழுதியிருக்கிறான்......அவள் அடித்துப் பேசிய பின்னும் ரங்கநாதம் கேட்கமாட்டாரா?......

இந்தத் தீர்மானம் வேகத்துடன்தான் எழும்பி வந்தது. ஆனால் பொங்கும் திரவத்தில் கொழுப்புக் கலந்திருந்தால் உள்ளே அமுங்கி விடுகிறதன்றோ? அவளுக்கு இந்த எண்ணம் எழும்பியதே ஒழிய செயலாற்றும் துணிவு வரவில்லை.

ஆராயாமல் அரை நொடியில் நிறுத்திவிடலாம்; ஆனால் ஜானகிக்கு எப்படி எப்போது கல்யாணம் செய்ய முடியப்போகிறது? பாலு படித்தால், சம்பாதித்தால், மலைபோன்ற இந்தப் பொறுப்பையும் அவன் தலையில் ஏற்றி வைக்க முடியுமா? மேலும் அவனுக்கு இத்தனை பொறுப்புகளை வைத்தால் இளம் வயதில் அவன் சந்தோஷமாக இருப்பது எப்படி? அவனுடைய மலர்ச்சிதானே அவள் கனவு? மலரும் பருவத்தில் நெருக்கத்தை ஏற்படுத்திப் பாரத்தையும் ஏற்றிவைப்பதுபோல் பெண்ணைக் குன்றிமணி பொன்னுக்கும் வழியில்லாமல் நிறுத்திவைத்துக் கொண்டிருக்கலாமா? அவனுடைய எதிர்காலம் வளமையுடன் கொழிக்க வேண்டுமென்றால் இந்தத் திருமணம் நடப்பதில் இரட்டிப்பு நன்மையாயிற்றே? கொடிக்குத் தன்னுடைய காய் கனமாகுமா என்பார்கள். எனினும் தற்போதைய அவளுடைய நிலையில் கனமாகத்தானே இருக்கிறது? ஜானகி வேறு வீட்டுக்குப் போய் அவளைத் தாங்கும் அளவுக்குச் சக்திபெற்றால் பாலுவை இன்னும் சிரமமில்லாமல் படிக்கவைக்கலாமே?......

அவளுள் ஊறியிருந்த இந்த ஆசையே அவளுக்குக் கல்யாணத்தை நிறுத்தத் துணிவை உண்டாக்காமல்

தடுத்தது. மனசின் மறுகோடியில் தோன்றும் எதிர்க் கேள்விகளை எல்லாம் அது விழுங்கி ஜீரணம் செய்து விட்டது.

வீட்டை ஒழித்து சாமான்களைக்கட்டி விமலா சென்னைக்கு அனுப்பிவிட்டாள். மூர்த்தியின் தங்கை, தம்பி, தாய் மூவரும் அங்கு குடும்பமாக இருந்ததால் அவர்களுக்கு அவசரமாக இடம் தேடும் அவசியம் இருக்கவில்லை. குழந்தைகளுடன் விமலாவையும் கொண்டுவந்து ஊரில் விட்டு விட்டு அவன் சென்னைக்குப் போய்விட்டான். பாலுவுக்கு அவள் வரும் சமயம் பரீட்சை நடந்து கோண்டு இருந்தது. விமலாவைக் கண்டதுமே செல்லம், "ஏன் இப்படிக் கடிதம் எழுதினன் பாலு?" என்று விசாரித்தாள்.

"அவனுக்கென்னவோ கோபம். அவனுடைய படிப்பு பூர்த்தியாகவேண்டாமா அம்மா? இப்போது ஒன்றும் செலவில்லை என்ருலும் நம் கௌரவத்தை விட்டுக்கொடுத்துக் கொள்ளலாமா, நம் குடும்பங்களில் ஏழை வீட்டுப் பெண்ணைக் கொண்டு மனம் நோகச் செய்யாமல் யார் வைத்திருக்கிருர்கள் என்று கேட்கிருன். அவனுக்கு இவ்வளவு தூரம் அவரைப்பற்றித் தெரிய நியாயமில்லை இல்லையா? ஜானகி அதிர்ஷ்டக்காரியம்மா..." என்ருள் விமலா.

அவளுக்குத் தங்கையின் அதிர்ஷ்டத்தைப் பார்க்கப் பார்க்கப் பொருமையாகக்கூட இருந்தது.

விமலாவினுடைய இந்த அபிப்பிராயத்தில் செல்லம் இன்னும் சிறிது தெம்பு கொண்டாள். அவளே தெம்படைந்த பிறகு, அந்தக் கல்யாணம் ஏன் நடக்காமல் போகிறது?

ஜானகி ஸ்ரீதரனுக்கு மனைவியானுள். காவேரிக் கரையில் உள்ள சத்திரத்திலே திருமண வைபவம் ஆடம்பரமாகத்தான் நிறைவேறியது. ஆனல் பாலுமட்டும் வரவில்லை. ரயில் வண்டியின் கூவும் ஒலி கேட்கும் போதெல்லாம், வாசலில் வண்டிச்சத்தம் கேட்கும்போதெல்லாம், செல்லத்தின் மனம் மரத்திலே சிக்கிக்கொண்டு காற்றிலே படபடக்கும் பட்டத்தைப்போல் துடித்தது. பாலு வரவேயில்லை,

ஸ்ரீதரன் திரைப் படம் தயாரிக்கப்படும் ஒரு ஸ்தாப னத்தில் ஒளிப்பதிவு இலாகாவில் வேலை பெற்றிருந்தான். மனைவியை மணம் நிகழ்ந்த மறுதினமே தன்னுடன் திருவனந்தபுரம் அழைத்துச் செல்லுவதாக இருந்தான்.

செல்லம் இதை எதிர்பார்த்திருக்கவில்லை. ஓரிரண்டு மாதங்கள் அவள் இருப்பாள். பின் கொஞ்சம் பழக்கம் ஏற்பட்ட பிறகு பெரியவர் அழைத்துச்சென்று அங்கே குடும்பத்தை ஆரம்பித்துவைப்பார் என்று அவள் எண்ணி யிருந்தாள்.

இந்தச் செய்தியில் அவள் கலங்கினாள். இன்னும் ஒரே நாள்தானா?

பட்டுச் சேலையைக் களைந்து நூல் சிற்றுடையைச் சுற்றிக்கொண்டு ஜானகி தலையலங்காரத்தையும் அவிழ்த் துக் கொண்டிருந்தாள். இரைச்சல், அமளி ஓய்ந்து கண்ட கண்ட இடங்களில் யார் யாரோ படுத்துத் தூங்கினர்.

மகளைத் தனிமையில் தேடிவந்தாள் செல்லம். வாழைக் குருத்துப்போன்ற அவள் இரண்டு நாளைய அலைச்சலிலும் சோர்விலும் வாடிநிற்பதைக் கண்டதும் அவளுடைய தணதணப்பு உச்சநிலைக்கு வந்துவிட்டது.

"நாளைக்கே போகவேண்டுமென்கிறார்களேடி ஜானகி?..." என்று கேட்டாள். புடைவை மடிப்பதில் அதிகக் கவனம் காட்டிய ஜானகி, "முன்பே தெரிந்தது தானே அம்மா? நான் இங்கேயே இருப்பதற்காகவா கல்யாணம் செய்து கொடுத்தீர்கள்?" என்று பதில் கொடுத்தாள்.

"ஏண்டி கண்ணே, உன்னை வேண்டாம் என்று சொல்லுவோமா அப்படி? அசட்டுப் பிசட்டென்று பேசாதே. நாளைக்கே போவாயோ? உன்னுடன் பேசினாரா ஜானகி?..."

ஜானகி வெட்கப்பட்டாளா, கோபம் கொண்டாளா, அல் லது வெட்கத்தை மறைக்கப் பொய்க்கோபம் கொண்டாளா

என்பதைச் செல்லத்தினுல் தெளிவாக அறிந்துகொள்ள முடியவில்லை. அவளுடைய மனம் தெளிவாக இருந்தால் தானே எதுவும் நன்ருகப்புரியும் ?

புருவங்களைச் சுருக்கிக்கொண்டு, "இதெல்லாம் என்னம்மா கேள்விகள் ? நாளைக்கே போகாவிட்டாலும் பத்து நாட்கள் கழித்தேனும் போகத்தானே வேண்டும் ?" என்ருள் ஜானகி.

"உனக்குப் போகவேண்டுமே என்றில்லையாடி ஜாஞு ?......

"ஊஹூம் .....!"

நிமிர்ந்தே நோக்காமல் அவள் தலையை ஆட்டினுள்.

"தனியே போகப் பயமாக இல்லையாம்மா ?"

"சும்மாச்சும்மா இதெல்லாம் என்னம்மா கேள்வி ?"

சூரியோதயத்தைக் கண்டு கமலம் அஞ்சி மூடிக்கொள்ளுமா ? மணம் புரிந்துகொண்ட கணவனுடன் செல்ல விவரம் அறிந்த பெண் ஏன் பயப்படுகிருள் ?

அந்த இளம் உள்ளம் வாழ்வில் மலர்ந்திருக்கும் உதயத்திலே பொங்கிப் பூரிக்கவில்லை என்பது செல்லத்துக்கு எப்படியோ தெரிந்தது.

"போனவுடன் கடிதம் போடுவாயா ஜானகி ?..."

"உம்...ஏனம்மா, பாலு அண்ணு வரவேயில்லையே ?"

"தானே வருவான். அத்தானை விசாரிக்கச்சொல்லி அப்பா கடிதம் எழுதுவார். ஜானகி, மாப்பிள்ளை பிரியமாக இருக்கிருராம்மா, எனக்குக் கடிதாசி எழுதுவாயாடி கண்ணே ? மனசை என்னமோ செய்கிறதே ?"......தாய் மகளைக் கட்டிக்கொண்டு கண்ணீர் உகுத்தாள்.

மறுநாள் அந்த மகள் தான் அதுவரை வளர்ந்து உருவான வீட்டிலிருந்தும் பெற்ருேர்களிடமிருந்தும் விடை பெற்றுக்கொண்டு விட்டாள்.

அவள் வண்டியில் ஏறிக்கொள்ள, வண்டி புழுதியைக் கிளப்பிக்கொண்டு கண்ணுக்கெட்டாமல் மறைந்ததும் செல்லத்துக்குக் கண்ணீர் பெருகிவந்தது. உள்ளே எங்கே வந்தாலும் ஓசைப்படாமல் பூனைபோல அவள் பதுமை யென வந்து நிற்பது போலிருந்தது.

“ ஜானகி யாருடனும் பேசியிருக்கிருளா? எதற்காக இப்படி அழுகிறுயம்மா? இதற்குக் கல்யாணம் ஏன் பண்ணிக் கொடுத்தாயாம்?” என்று விமலாகூடக் கடிந்து கொண்டாள்.

“என்றுமே அவளுக்கு ஜானகி என்ருல் கொஞ்சம் பாசம் அதிகம் உண்டு. முதல்தடவையாகப் பிரிந்து போகிருளோ இல்லையோ?” என்ருர் அவள் மனசை அறியாத ரங்கநாதம்.

“ அந்தக் கிழவர்தான் கொஞ்ச நாட்கள் கூடப் போயிருக்கக்கூடாதோ? இந்த நாளையப் பையன்களும் அரவணைப்பதில்லை, பெரியவர்களும் கடமையுடன் ஒதுங்கி விடுகிருர்கள். மாப்பிள்ளை கொஞ்சம் கடுமையுள்ளவனுகத் தான் இருப்பான் போலிருக்கிறது. நேற்று அவள் உள்ளே ஏதோ செய்துகொண்டிருந்தாள். ‘ஏய், ஜானகி? கூப்பிடுகிறேனே, காதில் விழவில்லை’ என்று கேட்டுக் கொண்டேவந்தான், மிரண்டுவிட்டாள் பாவம். புதிசு, கல்யாணமாகி முழுக்க மூன்று நாட்கள்கூட ஆகவில்லை, இப்படி அதட்டுகிருப்போல் கூப்பிடுகிருனே என்று எண்ணிக்கொண்டேன்.” என்று உதவியாக வேலை செய்ய வந்திருந்த பார்வதி விவரித்தாள்.

“நன்ருகச் சொன்னுய்! அவளா பயந்தவள்? கிளம்பு என்ற உடன் கிளம்பிவிட்டாளே! இங்கே அம்மா வேண்டுமானுல் கண்ணைக் கசக்குகிருள். அவள் ஒரு பொட்டு நீர் கூட விடவில்லை. ஜம்மென்று வண்டியில் போய் உட்கார்ந்து விட்டாள்!” என்ருள் விமலா.

‘நன்ருகவே வைத்துக்கொள்ளுவான். அவளுக்கு ஒரு குறையும் வராது. கடவுள் அத்தனை சோதிக்கமாட்டார்!’ என்று செல்லம் மனசைத் தேற்றிக்கொண்டாள்

அவளைப்பற்றிய சஞ்சலங்களை ஒதுக்கியதும் பாலு வைப்பற்றிய கவலைகள் அவளுடைய மனதை ஆக்கிரமித் துக்கொண்டன.

ஒரே பிடிவாதமாக அல்லவோ, லீவுக்கு வந்தால்கூட கல்யாணத்துக்கும் தங்கிவிட வேண்டியிருக்கும் என்று நினைத்து விடுமுறைக்கும்கூட அவன் அங்கு வரவில்லை?

பார்த்து ஆறேழுமாதங்கள் ஆகிவிட்ட மகனைப் பார்க்கவேண்டும் என்ற தாபம் அவனை நினைத்த உட னேயே அவளை உந்தியது.

கங்காதரமும் மீனுவும் திருமண வைபவத்துக்கு வருவதையே அவள் விரும்பவில்லை. "நான் இல்லாதவள், ஏதோ ஒன்றுக்குமில்லாமல் பெண்ணைக் கொடுக்கிறேன். அவள் இங்கே வம்புக்கு வர நீங்கள் வரிந்து வரிந்து அழைக்கவேண்டாம்!" என்று ரங்கநாதத்தினிடம் கண்டிப்பாகக் கூறி இருந்தாள். அவரும் அதை ஆமோதித் தார்.

கல்யாணம், வேடிக்கையாகக் கூடிக் கொண்டாட வந் திருக்கிறோம் என்று அவள்தான் நினைப்பாளா, இவள் தான் விடுவாளா? பந்துக்கள் என்று இம்மாதிரி சந்தர்ப் பங்களில் கூடும்போதுதானே பெரும்பாலான பெண் மக்க ளுள் ஒருவரைப்பற்றி ஒருவர் குறைகள், மனஸ்தாபங்கள் எல்லாம் வெடிக்கின்றன? விமலா ஊரைவிட்டுக் கிளம்பு முன் கஜேந்திரபுரம் சென்றிருந்ததாகவும், மீனு தங்களைக் கலந்து கல்யாணம் நிச்சயம் செய்யாத குற்றத்தைப் பெரி தாக்கி ஏதேதோ கூறியதாகவும் செல்லத்தினிடம் தெரி வித்திருந்தாள். அவள் எண்ணியது வீண் போக வில்லை.

ஆனால் பாலு எங்கிருக்கிறான்? விநாயகா காலனி வீட்டுக்கு முப்பது ரூபாய் வாடகை கொடுத்துக்கொண்டு ஹோட்டலில் சாப்பிடப் பணம் ஏது அவனிடம்?

இந்தக் கேள்விகளிலும் அத்தனை உக்கிரம் தோன் றாதபடி செல்லத்துக்கு ஒரு அசட்டு ஆதாரம் இருந்தது.

பாலு கங்காதரத்தின் வீட்டுக்கு அடிக்கடி பேர்ய்வருவதாக விமலா சொல்லியிருந்தாள் அல்லவா? மீறு கண்டு கொள்ளாமல் அவர் ஏதேனும் பண உதவி செய்கிறுரோ என்னவோ? அவள் அத்தனை காய்ந்து விழுந்தும் ஊஞ்சல் பலகையில் பணத்தை வைத்திருந்தாரே?......

## 12

புதல்வனைப்பற்றிய கவலைகளிலும் தனக்குத்தானே செய்து கொள்ளும் சமாதானங்களிலும் செல்லம் ஊசலாடிக் கொண்டிருக்கையில் பாலு அவள் கனவிலும் நினைத்திராத இடத்திலே அநாதைபோல் படுத்திருந்தான். அவன் கோபித்துக்கொண்டு கடிதம் எழுதியது உண்மை தான். ஆனாலும் பரீட்சை முடிந்ததும் அங்கே போக வேண்டும், தாயிடமும் தந்தையிடமும் எல்லாவற்றையும் குறித்து விரிவாகப் பேசி நன்மையானதொரு முடிவுக்கு வரத் துடித்துக்கொண்டிருந்தானே ஒழிய, ஒரேயடியாகப் போகக்கூடாது என்று மூர்க்கப் பிடிவாதம் கொண்டிருக்கவில்லை.

"வீட்டை நான் இருக்கும்வரை வைத்துக்கொள்கிறேன், சாவியை என்னிடமே கொடு" என்று விமலாவிடமிருந்து வீட்டின் உரிமையைக் கொஞ்சகாலம் வாங்கிக் கொண்டிருந்தான். கடைசிநாள் பரீட்சையன்று அவனுக்குக் காலை எழுந்திருக்கையிலேயே தலை கனத்தது; உடம்பு வலித்தது. பரீட்சை எழுதிவிட்டு வரும்போதே ஜுரம் அவனைப் படுக்கையில் தள்ளும் அளவுக்கு ஏறிவிட்டது. அன்றிரவெல்லாம் அவனுக்குத் தன் நினைவுகூடச் சரியாக இல்லை.

பொழுது விடிந்தபோது, முகத்திலும், உடலிலும் தனக்கு அம்மை முத்துக்கள் கண்டிருப்பதை அவன் அறிந்தான். அன்றுபகல் முழுவதும் அவன் கவனிப்பார் எவருமின்றி, எழுந்திருக்கவும் வலுவின்றி நோவுடன் சொல்லொணு அவஸ்தையில் உழன்றுன். மாலையில் அண்டை வீட்டுக்காரர் அவன் வேண்டிக்கொண்டபடி

அவனை நகர எல்லையை விட்டுத்தள்ளி இருக்கும் தொத்து நோய்களுக்கான பிரத்தியேக வைத்தியசாலையில் சேர்த்து விட்டார். நோயின் வாதனை, அறியாமை நிரம்பிய ஏழை யோடு ஏழையாக நாதியற்றுப் படுத்துக்கிடக்கும் சிறுமை அங்குள்ள சிப்பந்திகளின் மரியாதையற்ற அலட்சியமான நடத்தை, எல்லாம் அந்த ஆறுவாரங்களிலும் மேலாகவே நினைத்துப் பெருமை கொள்ளும் இயல்புவாய்ந்த அந்த மென்மையான உள்ளத்தை மௌன வேதனையில் வாட்டி எடுத்தன.

அவன் வரவில்லை என்பதை ஊரிலுள்ளவர்கள் எப்படி நினைக்கிறார்களோ?

மீறு போகாத போனாலும் கங்காதரமாயினும் போயி ருக்க மாட்டாரா?

ஜானகிக்குப் பாவம், விருப்பம் இருக்கிறதோ இல் லையோ! அவன் இருந்து யாருக்கு என்ன பயன்? விமலா வும் மூர்த்தியும் அப்போது அங்கு இருந்தால் அவன் இத்தனை சிறுமைகளுக்கும் ஆளாவானா?

ஆனால் அவர்கள் ஊரைவிட்டுச் சென்றதும் ஒரு விதத்தில் நல்லதுதான். பற்றுக்குறையால் அவர்கள் தவித்தும் பரந்த மனசுடன் பொறுத்துக்கொண்டு இருந் தார்கள்.

...இத்தனை கஷ்டப்பட்டு என்ன படிப்பு வேண்டி யிருக்கிறது? உழைப்பு, கஷ்ட நஷ்டங்கள், பேச்சு வார்த் தைகள், மனஸ்தாபங்கள், இத்தனை துன்பங்களும் அவ னைப்போல் கல்வி கற்கும் எவரும் அநுபவிக்க மாட்டார் கள்! இந்தத் துன்பங்களுக் கெல்லாம் அந்தப் பட்டம் சேர்த்து அவனுக்குப் பலனைக் கொடுக்குமா? கஷ்டப் பட்டவர்களுக்குத் தக்க பலன் பின்னால் கட்டாயம் உண்டு என்பார்களே?... இனி எப்படி அவன் படிப்பைத் தொடரப் போகிறான்?

தனிமையிலே இந்தப் பிரச்சினை வேறு துன்பக் கேணியைத் தூருவெடுப்பது போல அவனை வருத்திக் குலைத்தது.

சில சமயங்களில் மனசை நோய்க்கிருமிகளென வந்து அப்பிக் கொள்ளும் இந்தச் சிந்தனைகளை விரட்டித் தள்ளுபவன் போல் தலையை ஆட்டி அவன் கண்களை மூடிக் கொள்வான். அப்போதெல்லாம் எங்கிருந்தோ ஒரு மலர் வந்து அவனுடைய உள்ளத்தின் உள்ளே புகுந்து ஒட்டிக் கொள்ளும். அதன் மென்மையான ஸ்பரிசம் அவனுடைய அழுன்ற இதயத்துக்கு இதமாக இருந்தது. அந்த இதத்துக்கு இன்னும் சுகம் தருவதுபோல் தொடர்ந்து கேட்கும் வளையல் ஒலி ; அந்த ஒலியைப் பின்னணியாகக் கொண்டு ஒரு இன்பநாதம்...

அந்த நாதம் அவனுடைய இதய நரம்புகளைச் சிலிர்க்கச் செய்தது. பாலு துன்பத்தின் நடுவே உண்டாகும் இந்தப் புது அநுபவத்தின் போதையில் மூழ்கிக் கிடப்பான்.

தான் அசைந்துவிட்டால், கண்களைத் திறந்துவிட்டால், அந்த மலர் குறுநகை செய்து தன்னைவிட்டுப் பறந்து போய்விடுமோ என்று பயந்து அவன் அசையாமலேயே இருப்பான். பொல்லாத கவலைகள் எப்படியோ புகுந்து அவன் சிந்தையை அந்த நிலையிலிருந்து உலுக்கிவிடும்.

சோர்விழந்து, வலுவிழந்து, அரையுடம்பாய் அவன் மறுபடி விநாயகா காலனி வீட்டில் காலெடுத்து வைக்கும் போது அவனுக்குக் கல்லூரி திறந்து இரண்டு நாட்களாகி விட்டன.

வீடு தூசி படிந்து களையிழந்து கிடந்தது. அவன் அன்று கொண்டுவந்து போட்டிருந்த புத்தகம் அவன் பெட்டிமீது அப்படியே இருந்தது. ஊரிலிருந்து தன்னைத் தேடி ஏதேனும் கடிதம் வந்திருக்கிறதா என்று ஆவலுடன் பார்த்த அவனுக்கு ஏமாற்றம்தான் கிடைத்தது. அவனுக்காக அங்கு ஒரு செய்தியும் வந்து காத்திருக்கவில்லை.

வெறுப்பு மண்டியது. எல்லோரும் தன்னைக் கைவிட்டு விட்டார்கள் என்று நினைத்தான்.

ஒருமாத வாடகை எண்ணவேண்டும், சாப்பாடு, காலேஜ் சம்பளம் இவைகளுக்கு அதிகப்படியாகப் பணம் வேண்டும்...ஒரு கடிதம்கூட அவர்கள் போட்டிருக்கவில்லை. அவன் என்ன ஆனான் என்றும் கவலைப்படவில்லை!

நோயில் ஏற்கெனவே தளர்ந்துவிட்ட மனம் இன்னும் நலிவு கண்டுவிட்டால்?

பச்சைக் குழந்தைபோல அவனுக்கு அழுகை வந்தது.

அந்தச் சமயம் அவள் வந்து அவன் அருகில் உட்கார்ந்தாற் போலவும், தன் மென் கரத்தை அவனுடைய பொட்டு உதிராத நெற்றியில் வைத்து 'அழாதீர்கள், நான் இல்லையா?' என்று கேட்பது போலவும் அவன் கற்பனை செய்து பார்த்தான்.

அவனுடைய உள்ளம் கரைந்தது; கண்ணீர் பெருகியது.

பாலு கண்களைத் துடைத்துக்கொண்டு வீட்டுவாசலை வெறிக்கப் பார்த்தான். அவள் எட்டி நின்றாள். 'பைத்தியக்காரா? நான் யார், நீ யார்? நான் கொம்புத்தேன், என்னைச் சுற்றிக் கொட்டும் வண்டுகளுண்டு. நீ கையும காலும் இல்லாத முடவன்!' என்று பரிகாசச் சிரிப்புச் சிரித்தாள். பித்துப் பிடித்தவன்போல் பாலு அப்படியே வெகுநேரம் உட்கார்ந்திருந்தான். அவன் சும்மாவே உட்கார்ந்திருந்தால் வயிறும் சும்மா இருக்குமா? ஏற்கெனவே சுண்டியிருப்பதாயிற்றே? அது 'சோற்றுக்கு வழி என்ன?' என்று அவனைக் கூவிக்கூவி அழைத்தது.

இருக்கும் சில்லறையைத் திரட்டிக்கொண்டு சட்டையை மாட்டிக் கொண்டான். வெளியே மெள்ள வருகையில், சுள்ளென்று அடிக்கும் வெயிலில் தலையில் அங்கவஸ்திரத்தைப் பிரித்துப் போட்டவண்ணம் அவன் இருப்பிடத்தை விசாரித்துக் கொண்டு கங்காதரம் வரக் கண்டான். வடுக்கள் விழுந்த முகத்துடன் வற்றிப்போய் நின்ற அவனைக் கண்டதும் அவர் ஒரு கணம் திகைத்து விட்டார்.

"ஏண்டா பாலு? உடம்பு சரியில்லையா உனக்கு? சொல்லக்கூடாதாடா?" என்று பதட்டமாகக் கேட்டார்.

"ஆமாம், பெரியம்மைதான், கடுமையில்லாமல் போய் விட்டது. ஆஸ்பத்திரியில் இருந்தேன் இத்தனை நாட்களும்...நீங்கள் கல்யாணத்துக்குப் போய் வந்துவிட்டீர்களா?" என்றான் பாலு.

"ஒரு வார்த்தை சொல்லி அனுப்பக்கூடாதாடா? அல்லது ஒரு கார்டானும் எழுதிப் போட்டிருக்கலாமே? பெரியம்மையா போட்டிருந்தது? 'ஐசொலேஷன்' ஆஸ்பத்திரியிலா இருந்தாய்?..."

பாலு மௌனமாகத் தலையை ஆட்டினான்.

"அட அசடே? விமலா அன்று சொல்லிவிட்டுப் போனாள், நீ புறப்பட்டுப் போயிருப்பாயாக்கும் என்றல்லவா நினைத்தேன்? மீனாகூட பாலு வந்து தலையைக் காட்டினானா பாருங்கள்? ஊருக்குப் போகிறானே? என்று சொல்லிக் கொண்டிருந்தாளே? இப்படியா சங்கதி?..."

"நீங்களும் கல்யாணத்துக்குப் போகவில்லையா?"

"ஊஹூம்! எங்கே? உன் அப்பாவிடமிருந்து திடுமென பத்திரிகை வந்தது. மீனாவுக்கு சௌகரியப்படவில்லை. ரவியையானும் புறப்பட்டுப் போகச் சொல்லலாம் என்று பார்த்தேன். 'டெஸ்ட் மாட்ச்' என்று பட்டணம் போனவன் இன்னும் ஆளையே காணோம். இன்றுதான் இதோ உன் அம்மா கைப்பட மீனாவுக்குக் காகிதம் எழுதியிருக்கிறாள். 'பாலு கோபப்பட்டுக்கொண்டு வரவுமில்லை, காகிதமும் போடவில்லை. அப்பாவும் கோபித்துக்கொண்டு எழுதமாட்டேன் என்கிறார். கொஞ்சம் போய் விசாரித்துப் பார்க்கச் சொல்லு, கவலையாக இருக்கிறது' என்று. ஜானகிக்கு இப்போது எதற்குக் கல்யாணம், நிறுத்தவும் என்று எழுதியிருந்தாயாமே? என்ன கோபம் உனக்கு?"

பாலுவுக்கு வாஸ்தவமாக இப்போது கோபம் வந்தது.

நடந்தது நடந்துவிட்டது. இதையெல்லாம் அவனுடைய அம்மா மீனுவுக்கு எழுதுவானேன்? உண்மையாக அவளுக்கு அவன்மீது ஆதங்கம் இருந்தால் அவனுடைய மௌனத்துக்குத் தந்தியடித்துக் கேட்டிருக்க மாட்டாளா? மகன் படிக்க வேண்டும், பணம் சம்பாதித்துக் கொடுக்க வேண்டும், தான் நகையும் புடைவையும் குலுங்க மீனுவுக்குச் சமமாக ஆகவேண்டும்! இதைத் தவிர அவளுக்கு என்ன குறிக்கோள் உண்டு வாழ்க்கையிலே?...

"ஏன் உனக்கு என்ன கோபம்? விமலாவும்தான் போய்விட்டாள், உனக்கு என்ன உத்தேசம்? விட்டுச் சொல்லேன்? எனக்கு ஒன்றும் புரியவில்லையப்பா!" என்றார் அவன் மௌனத்தைக் கண்டு கங்காதரம்.

"உத்தேசம் என்று எனக்குத் தனியாக என்ன இருக்கிறது? நினைப்பதை எல்லாம் உருவாக்கவும், செயலாக்கவும் என்னைப் போன்ற ஏழைக்கு ஏது சக்தி? படி என்றார்கள், வந்து சேர்ந்தேன். இங்கு இரு என்றால் இருப்பேன், இல்லை நீ படித்தது போதும், மூட்டையைக் கட்டிக்கொண்டு வாடா என்றால் போவேன்" என்றான். கசப்பு விரக்தியாக முறுகிவிட்டிருந்தது.

"சரிதான், நீயும் ஆரம்பித்துவிடாதே ஏழை, மோழை என்று. வா, போவோம். வீட்டுக்காரருக்குக் கணக்கை முடித்துத் தகவல் கொடுத்துவிடலாம், வண்டி கூப்பிட்டு வருகிறேன், உன் சாமான்களை எடுத்து வை!" என்று கங்காதரம் வெளியே சென்றார்.

முட்கள் நிறைந்ததானாலும் மலரின் மென்மையுடன் நாட்கள் கழிந்த அந்த இடத்தை நன்றியுடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே பாலு பணக்காரர்கள் வாழும் வசதியான வீட்டை நோக்கிச் சென்றான். மீனு அவன் எதிர்பார்த்தபடி குற்றம் எதுவும் படித்து வரவேற்கவில்லை. "பாதி உடம்பாகிவிட்டாயேடா?" என்று அவள் கேட்டது அவனுக்குப் புதுமையாகக்கூட இருந்தது.

அன்றொருநாள் அவன் பார்த்த மீனுவின் பாட்டி அவ னுக்குக் கலத்தில் இட்ட உணவு ருசித்தது.

சாப்பிட்டுவிட்டு வாசல்புறம் இருந்த அறையிலே பெஞ்சியின்மீது படுக்கையை விரித்துப் போட்டுக் கொண்டு படுத்தான். நல்ல உறக்கத்தின் சுகத்துக்கு ஈடு ஏது?

வளையல்களின் ஓசை செவிகளில் ஒலித்தது. மெல் லிய அடிகளின் நடமாட்டம் அவனுடைய உள்ளத்தை மெதுவாக அசக்கியது.

பாலு சட்டென்று ஏதோ நினைவு வந்துவிட்டது போல் துள்ளிக்கொண்டு எழுந்தான். சுற்றுமுற்றும் கண்களைத் துடைத்துக்கொண்டு பரபரப்புடன் பார்த்தான்.

அவனுக்கு நேர் எதிரே கூடத்தில் சுவற்றிலே சாய்ந்து ஏதோ புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த அவள் அவன் உட்கார்ந்திருந்ததைக் கண்டு அவனை நோக்கி வந்தாள்.

மாலை வெயில் அவனிருந்த அறையின் ஜன்னல் வழி யாக அவளைக் குளிப்பாட்டி அவளுடைய மஞ்சள் தாவணி யிலும் போய் ஒன்றியது. அந்த நீலப் பாவாடையும் மஞ்சள் மேலாடையும் பஞ்சவர்ணக் கிளியை நினைப்பூட்டின அவனுக்கு.

அவள் அவனை நோக்கி ஏன் வருகிறாள்? வீட்டிலே யாருமே இல்லையா என்ன? எல்லாவற்றுக்கும் மேல் அவ னுடைய இருதயம் துள்ளிக் குதித்தது.

அவள் அவனுக்கெதிரே நிலைப்படியில் வந்து நின்றாள்.

அவளைக் காணுமலிருக்கும் போது என்னென்னவோ கற்பனை செய்கிறதே பாழும் மனம்? அவளிடம் பேசு வதற்கு யுக யுகாந்தரங்களுக்கு விஷயங்கள் இருப்பது போல் தோன்றுமே? எதிரே நிற்கையில் சமயத்துக்கு வார்த்தைகளே அஸ்தமித்து விட்டது போலன்றோ நா ஒட்டிக்கொள்கிறது?

ஏதேனும் பேசவேண்டும் என்ற ஆர்வத்தில், "மாமா...இல்லை?" என்று கேட்டான்.

"காணேமே யாரையுமே? வெயிலில் படுத்துக்கொண்டிருந்தீர்கள். ஜன்னல் கதவை சாத்தலாம் என்றால் அயர்ந்து தூங்கினீர்கள்...உங்களுக்கு அம்மை வார்த்திருந்ததா? முகத்தில்..."

பலநாள் பழகியவள் போல் அவள் கேட்டாள். வழக்கமாகப் புன்னகை தவழும் அந்த முகம் பனித்துளிபட்ட மலர் போலிருந்தது.

வறியனுக்கு நிதி கிடைத்தால் எப்படி இருக்கும்? கொதிக்கும் மணலும் தகிக்கும் வானமும் வாட்ட நா வறள வழி நடக்கும் பிரயாணிக்கு, குளுகுளுவென்ற குடிசை நிழலும் ருசியான மோரும் கிடைத்தால் எப்படி இருக்கும்?

இப்படி எத்தனையோ அடுக்கிக் கொண்டு போகலாம். ஆனால் பாலு அவளுடைய கேள்வியில் உணர்ந்த இதத்துக்கு அவை எதுவும் ஈடாகமுடியாது. நோயின் கொடுமையில் வாடித் தளர்ந்திருக்கும் போது இனியவரின் இத மொழிகளுக்கும் அருகாமைக்கும் மனம் தாபப்படுவது இயல்பு. ஆனால், அவனுடைய அன்னை அப்போது பரிவுடன் வந்து விசாரித்திருந்தாலும் அவனுக்கு இத்தனை இதம் ஏற்பட்டிருக்குமா?...இருக்காது. அவள் எதிர்ப்பட்டால் அவன் அதுநாள் பட்ட கஷ்டங்களும் அநுபவித்த சிறுமைகளும் கவிந்து வரும். புதிதாக வருத்தம் ஊறும். இவளுடைய பேச்சிலே அமுதம் தோய்ந்து இருந்தது. அது அவனுடைய காய்ந்த நெஞ்சைக் குளிரத் தொட்டது.

"ஆமாம்,......வைசூரி கண்டிருந்தது. இப்போது தேவலை" என்றான் அவன்.

"வைசூரியா...இத்தனை நாளாக எங்கு இருந்தீர்கள்? உங்களுடைய அக்கா மாற்றிப் போய்விடவில்லை? அன்றொருநாள் வந்திருந்தாளே?..."

"ஆமாம், ஆஸ்பத்திரியிலே இருந்தேன்..."

"ஆஸ்பத்திரியிலா?"

குரல் கம்மியது. தடுக்க இயலவில்லை. அவளுக்குக் கண்களின் ஓரம் பசைத்துவிட்டது.

இரக்கம் தோய்ந்த பரிவும், ஆறுதலுக்குத் தவிக்கும் உள்ளமும் மந்திரப் பூட்டும் சாவியும் போலும்! கபடற்ற இரு உள்ளங்களை ஒன்று சேர்க்கும் அன்புப் பொக்கிஷப் பேழையைத் திறந்து பெருக்க இவை ஆதாரமாக இருக்கின்றனவே?

எனக்குத் தெரிந்தால் வந்திருப்பேனே...எத்தனை நாட்கள் ஆகின்றன? வைசூரி...நினைத்தாலே எனக்கு..." வார்த்தைகளை முடிக்குமுன் துயரம் பெருகி நிறைந்தது அவளுடைய நயனங்களில்.

உனக்கு ஏன் இத்தனை பயம், சுதா? எனக்குத் தேவலையாகிவிட்டதே?" என்றான் பாலு.

"ஏன் பயமா? என் அப்பாவும் அம்மாவும் பர்மாவிலிருந்து வரும் வழியில் பெரியம்மை கண்டுதான் போனார்கள். அவர்கள் இருந்தால்..." பொலபொலவென்று கண்ணீர் முத்துக்கள் உதிர்ந்தன.

ஒரு கணம் பாலுவின் உடலில் துடிப்பு நின்றது. தொடர்ந்து கட்டிப்பிடிக்க இயலாத வேகத்துடன் துடிக்கலாயிற்று.

"அப்படியானால்...நீ, நீ 'டிம்பர் வொர்க்ஸ்' கணபதி...யின் மகள் இல்லை?"

"அவர் என் சித்தப்பாதான். ஏன்? உங்களுக்குத் தெரியுமா?"

"சித்தப்பாவா......இல்லை, கேட்டேன். அவருக்கு சொந்த மகள் வேறு இருக்கிறாள் அல்லவா?"

அவள் அவனை வியப்புடன் பார்த்தாள்,

"இருக்கிறாள். ஒரே ஒரு மகள் உண்டு. ஏன் கேட்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை, என் சிநேகிதன் ஒருவனுக்கு அவர் மகளைக் கொடுப்பதாகப் பேச்சு நடந்தது, நீதானுக்கும் என்று நினைத்தேன்..."

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு சுதா ஒரு மாதிரியாகப் புன்னகை செய்தாள்.

"உங்கள் சிநேகிதர் என்ன சொன்னார்?"

"அவனுக்கு அப்பாவிடம் கோபம், மறுத்துவிட்டான்..."

"நல்லவேளை..." என்று அவள் நிறுத்தியபோது பாலுவுக்குத் துணுக்கென்றது.

"ஏன்?" என்று திருப்பிக் கேட்டான்.

"ஏன? உங்களுக்கு அவசியம் தெரிய வேண்டுமா? அப்படியானால் சொல்லுகிறேன்! ஒருவரிடமும் சொல்லாதீர்கள். அவளுக்கு திடீர் திடீர் என்று வலிப்பு வரும் கெட்ட வியாதி ஒன்று உண்டு. அதை மறைத்து அவளை ஒரு ஏமாந்தவன் காலில் கட்டப் பார்க்கிறார்கள்" என்று படபடப்பாக அவளாகவே உண்மையைத் தெரிவித்தபோது பாலுவுக்குக் கண்களைக் கொட்டக்கூடத் தோன்றவில்லை. எத்தனை பெரிய ஆபத்தில் மாட்டிக் கொள்ளாமல் தப்பினான்!

"செருப்பு வைத்திருக்கிறதே? சுதா வந்திருக்கிறாளா என்ன? அவர் இல்லையே? எங்கோ காரியமாகப் போகிறேன், அவளுக்கு 'போன்' பண்ணுகிறேன் என்றாரே? சுதா?..." என்று வாசலில் நுழையும்போதே அண்டை வீட்டிலிருந்து வரும் மீனு குரல் கொடுத்துக்கொண்டே வந்தாள்.

"நானும் இப்போதுதான் வந்து நுழைந்தேன். 'போன்' பண்ணினாரா? இல்லையே? நானே இன்று நேரம்

கழித்துக் கிளம்பினேன். பஸ்ஸுக்காக வேறு வெகு நேரம் காத்திருந்தேன். வீட்டுக்குள்ளே யாரையும் காணோமே என்று பார்த்தேன்; வந்து விட்டீர்கள். பாட்டி எங்கே?..." என்று விசாரித்துக் கொண்டு அவள் மீனாவைத் தொடர்ந்து சென்றாள்.

அவளுடைய 'கற்பனைசக்தி' அவனை எங்கோ ஒரு இன்ப உலகுக்கு இழுத்துச் சென்றது. மீனா அக்காவின் வீட்டிலே இருக்கிறோம் என்ற உணர்வே அவனுக்கு இருக்கவில்லை!

## 13

திருடனுக்கும் கொலைகாரனுக்கும் கூட மன அமைதி கிட்டினாலும் கிட்டும். மனச்சாட்சி ஒப்பாமல் பொய்யுரைத்து ஒருவரை ஏமாற்றியவனுக்கு அந்தப் பொய் கூறும் எண்ணம் தோன்றும்போதே நிம்மதி தொலைந்து விடுகிறது எனலாம். அதுவும் அவன் கூறிய பொய் எதிர்பார்த்தபடி யில்லாமல் நேர்மாறான பலனைக் கொடுத்துத் தோல்வி யடைந்துவிட்டாலோ, மனச்சாட்சி அவனை உயிருடன் வதைக்கத் தொடங்கிவிடுகிறது.

கந்தையா மென்மையான உத்தியோகத்தில் ஈடுபட்டு அமைதியுடன் வாழ்ந்திருக்கவில்லை. திருட்டும், கொலையும், வஞ்சகமும் அவருடனேயே உத்தியோக வாழ்க்கையில் பிணைக்கப்பட்டிருந்தன. என்றாலும் அவர் மனக்குரலுக்கு விரோதமாக ஒருபோதும் சென்றதில்லை. அப்படி உத்தியோகத்தின் கடமை அவரை நெருக்கிய சமயம் அதிகாரத்தையும் பதவியையும் அவர் ஒரு நொடியில் உதறித்தள்ளத் தயங்கவில்லை. அத்தகையவர் எப்படி அந்தப் பொய்யைச் சொன்னார்? அதுவும் அவரால் ஏமாற்றப்பட்டவர்கள் யார்?

வெளுத்ததெல்லாம் பாலென்று நம்பும் அப்பாவி ரங்கநாதம். கௌரவத்துக்கும் ஏழைமைக்கும் இடையில் ஊசலாடிக்கொண்டு ஆசைக் கயிற்றில் ஏறப் பார்க்கும் அபலை செல்லம். அவர்கள் மட்டும்தானா? வெறும்

ஏமாற்றம் தானு? பொய் சாதாரணமாக விதைக்கப்பட்ட தல்லவே?

கந்தையாவும் பொய்தான் விதைத்திருந்தார். பொய் வென்றால் அவருக்கும் வெற்றி, எல்லோருக்கும் நல்லது.

ஆனால் அவர் திட்டமிட்டபடி எல்லாம் நடக்க வேண்டுமே?

அது நடக்கவில்லை. பொய்யும் தோற்றுவிட்டது. ஆனால் அதன் பலன்...கொச்சியிலிருந்து திருச்சிக்கு வரும் எக்ஸ்பிரஸ் வண்டி தடக் தடக்கென்று தண்ட வாளத்தில் ஒலியிட்டுக்கொண்டு மைல்களைக் கடந்து கொண்டு இருந்தது. உயர் வகுப்புப் பெட்டியிலே அமர்ந்து பிரயாணம் செய்த கந்தையா வெளியே தெரிந்த இருளை வெறித்துப் பார்த்தவண்ணம் தம் மனச்சாட்சியுடன் போராடிக் கொண்டிருந்தார்.

ரங்கநாதத்துக்கும் செல்லத்துக்கும் அவருடைய எண் ணம் வெளிப்படாமல் போகுமா?

அவர் என்ன செய்வார்? ஒரு மகன், இளமையி லேயே தாயை இழந்தவன் என்று அவனுக்குக் கண்களை மூடிக்கொண்டு சலுகைகளையும் உரிமைகளையும் கொடுத்து செல்லப் பிள்ளையாக வளர்த்தவர், அவன் எந்தப் பாதை யில் செல்லுகிறான் என்பதைக் கவனியாமல் அல்லவோ இருந்துவிட்டார்?

அவர் கவனிக்கவில்லை. ஆனால் அவர் அளித்திருந்த அதீதமான சலுகைகளை, செல்வத்தை, இளமையை, எழிலை, ஆற்றலை எல்லாவற்றையும் மாயையான சுக போகங்களிலே செலவிடச் சொல்லிக் கொடுத்து, அவனை யும் கவனித்துத் தம்மையும் கவனித்துக்கொள்ளும் தயவர் கூட்டம் இல்லையா? நாசப் பாதையில் வெறி கொண்டு செல்லும் அவனை அவர் நல்ல பாதையில் திருப்பச் செய்த முயற்சிகளெல்லாம் விழலுக்கிறைத்த நீராயின. அவன் வழியிலேதான் அவன் சென்றான். அவர் திகைத்தார்; கலங்கினார்; செய்வதின்னதென்றறியாமல் விழித்தார்,

உடன் பழகிவிட்டதன் காரணமாக உயிரற்ற ஜடப் பொருள்களின் மீதே பாசத்தை வைத்துவிட்டு இழக்க மனமில்லாமல் துடிக்கும் மனிதப் பிறவிக்கு ஒரே மகனை, செல்வத்தை, குலக்கொழுந்தை, எப்படிப் போனலென்ன என்று விட்டுத் தொலைக்கும் அளவுக்குப் பாசம் எப்படித் தேயும்? அவர் விரக்தியை வளர்க்கப் பிரயத்தனங்கள் செய்தார். ஆசையை வெட்டி வெட்டிச் சாய்த்தார். ஆனாலும் அது அடியோடு அகலவில்லை. வெறுமே வெட்டி வீழ்த்தும்போதே கிளைத்து வளரும் அந்த ஆசைக்கு ஒரு தூண்டுதலும் எதிர்ப்பட்டுவிட்டால்?

ஆடம்பரமான அணி பணிகள் இல்லாமலேயே மிளிர்ந்த ஜானகியின் அழகு, அடக்கம், பொறுமை, பொறுப்பறியும் தன்மை, இவை எல்லாவற்றுக்கும் மேல் ஏழ்மையில் உழலும் பெற்றோர் எல்லாம் அவருடைய ஆசைக்கு எழுச்சி கொடுத்தன. வளர்ச்சிபெற்று விரிந்தாடச் செய்தன. முதலில் தயங்கினர், தவித்தார்.

கடைசியில் அவருடைய மகன் திருந்தவேண்டும் என்ற ஆசையே வென்றுவிட்டது. அக்கினிப் பரீட்சை செய்யத் துணிந்தார். வெறிகொண்டலையும் அவனுடைய மனதை அடக்கிச் சாந்தமான வழிக்குத் திருப்பிவிட அவர் அவளைச் சோதனைப் பொருளாக ஆக்கிவிட்டார். இந்த ஆசையையும் அவன் குறையையும் மறைத்துக்கொள்ளவேதான் அவர் பெருந்தன்மை என்னும் உயர்ந்த போர்வைக்குள் ஒளிந்து கொண்டார்.

ஆனல் அவனுக்கு அவருடைய மெய்யன்பையோ, அவனுக்காக அவர் கூறியிருக்கும் பொய்யைப்பற்றியோ உணர்ந்து கொள்ள ஏது சக்தி? ஜானகியை மணந்து கொள்ள அவனுக்கு மிகமிக இனிப்பாகத்தான் இருந்தது. வேட்டைக்காரன் கையில் புறுவைத்தேடி, யாரேனும் கொடுத்தால் வேண்டாமென்று சொல்லுவான?

ஆனல் வேட்டைக்காரன் புறுவின் மணிமிடற்றையும் பளிச்சிடும் கண்களையும், சிவந்த கால்களையும் அது தலையைச் சாய்த்து ஒய்யார நடை நடக்கும் அழகையும் பார்த்து

ரசிக்கமாட்டான். அந்த அழகில் ரசித்துக் கொலைத் தொழிலையே அவன் விட்டுவிடுவான் என்று கருதுவது முக்காலும் நடக்காது. அப்படி நினைப்பதே முட்டாள் தனம். ஸ்ரீதரனின் வசம் ஒப்படைக்கப்பட்டிருந்த ஜானகி இந்த நிலையில் தான் இருந்தாள்.

திருமணம் கழிந்து அவளைக் கையுடன் அவன் அழைத்துச் சென்றபிறகு, கந்தையா ஒரு வாரத்துக்கு முன்பு தான் மகன் எர்ணுகுளத்தில் குடும்பம் நடத்துவதைப் பார்க்கச் சென்றார். பார்த்துவிட்டுத் திரும்பி வருகிறார். நம்பிக்கையை மனசில் ஏந்திக்கொண்டு சென்றவர் உள்ளக் குரலின் ஓலத்தை நிராசையுடன் சுமந்து வருகிறார்.

அவரைக் கண்டதும் அவள் அழுது, 'இப்படி மாட்டிவிட்டீர்களே?" என்று கத்தி இருந்தாலும் அவருக்கு இத்தனை குத்தல் ஏற்பட்டிருக்காது. அவரைவிட வயதி லும் கல்வி கேள்விகளிலும் உலக அநுபவங்களிலும் பன் மடங்கு சிறிய அந்தப்பெண் அவரைத் தன் போலிப் புன் கையால், பணிவால், உபசரிப்பால், மௌனமாகவே சல்ல டைக் கண்களாகத் துளைத்துவிட்டாள். வன்மையைவிட இனிமைக்கு வலிமை அதிகம் என்பதை நிரூபித்து விட்டாள்.

சந்தேகக் கண்களுக்குப் பித்தளைக்கும் தங்கத்துக்கும் வித்தியாசம் தெரியாமல் போகுமா?

ஜானகி சிரித்துப் பேச முயன்றாள். ஆனால் அவளு டைய முறுவலில் கள்ளமற்ற குழந்தைத்தனம் பிரதி பலிக்கவில்லை. பருவத்தின் பளபளப்பு அந்த மூன்று மாதங்களுக்குள்ளேயே எங்கோ ஓடி ஒளிந்துவிட்டது. நீலநிறத் தடாகங்களென அமைதியுடன் ஒளிர்ந்த அந்த விழிகள் கண்ணீர் பெருக்கிப் பெருக்கியோ என்னவோ, இருண்ட வானத்தின் கீழ் களையிழந்து காணப்படுவன போல் சோகத்தின் சாயையில் மங்கி இருந்தன.

அவர் அங்கு கால்வைத்த சமயம் அவன் வீட்டில் இருந்ததாகத் தோன்றவில்லை.

"ஸ்ரீதர் இல்லையாம்மா?" என்று விசாரிக்கையில் அவருடைய குற்றமுள்ள குரல் நடுங்கியது.

இருக்கிறார், தூங்குகிறார் மாமா, இரவு வெகுநேரம் கழித்து வந்தார்" என்று தரையைப் பார்த்துக்கொண்டு பகர்ந்த அவள் குரலில் உயிரே இருக்கவில்லை. சட்டென்று அவள் பேச்சை மாற்றினாள். ஊரைப்பற்றி, வீட்டைப்பற்றி, பாலுவைப்பற்றி, அவள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அவர் தனக்குத் தெரிந்தவரை எப்படியோ பதிலளித்தார்.

உச்சிப் பொழுதில் துயில் நீத்து எழுந்த அவனுக்கு காலை ஆகாரத்தைக் கையிலேந்தித் திரையை நீக்கி மெல்ல உள்ளே சென்ற ஜானகியை அவர் பார்த்தார்.

"அப்பா வந்திருக்கிறார்..." என்று அவள் தெரிவித்த செய்திக்கு அன்பும் பொறுப்பும் வாய்ந்த குடும்பத் தலைவனாகவும், கணவனாகவும் இருந்தால் அப்படியா பதிலளிப்பான்?

அதுதான் தெரிகிறதே? உள்ளே ஒருவன் தூங்குகிறானே என்ற கூச்சம்கூட இல்லாமல் நீதான் இத்தனை நேரம் பேசு பேசு என்று பேசினாயே? யார் அழைத்தார்களாம் இப்போது அவரை?..."

இதுதான் அருமந்த மகனிடம் அவருக்குக் கிடைத்த வரவேற்பு! பெயருக்கேனும் அவருக்கு மரியாதை காட்டுவதுபோல் நடிக்கவாயினும் கூடாதா?

அங்கு தங்கியிருந்த அந்த ஒருவாரமும் அவர் அந்த அபலைப்பெண்ணுக்குத் தாம் இழைத்திருக்கும் கொடுமை மையின் விளைவுகளை நன்கு பார்த்தார். அவருடைய உள்ளம் சிறியது. மகன் என்ற பாசத்தின் கொடி அந்தச் சீறலில் கருகி வீழ்ந்தது. அவர் அவனை வாயில் வந்தபடி பேசினார்.

ஜானகியை மீட்கும் எண்ணத்துடன் தம்முடன் அழைத்தார்: அவள் வருவதற்கு ஒப்பவில்லை. அது மட்டுமில்லை. "அம்மா அப்பாவிடம் ஒன்றும் தெரிவித்து

விட்டாதீர்கள்; நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்" என்று முறையிட்டுக்கொண்டாள்.

அவளுடைய கண்களில் நீர் துளிர்த்ததை அப்போதுதான் அவர் முதன்முதலாகக் கண்டார். வாழ்வின் இன்பப் படியில் காலை எடுத்து வைத்ததுமே மீளமுடியாத சேற்றில் அழுந்தி இருக்கிறோம் என்று அறிந்தும் அவளுடைய உறுதியை என்னவென்று சொல்வது?

'அவளை அழைத்துப்போகிறேன் நான்; நீ இங்கு அவளை வைத்திருக்கும் லட்சணத்துக்கு!' என்று மகனிடம் கடுமையாக அவர் கூறியபோது 'அவள் என் மனைவி. உங்களுக்கு இந்த விஷயத்தில் தலையிட உரிமையில்லை! போகலாம்' என்று அவன் உரிமையல்லவோ கொண்டாடினான்? அன்பு செய்யத்தவறும் அவன் கசக்கி எறிய உரிமை கொண்டாடும் விந்தையை, மதியீனத்தை நினைக்கும்போது, தந்தையாவுக்குச் சிரிக்கத் தோன்றவில்லை; துயரம் வெடித்து வந்தது.

மகள் எப்படி இருக்கிறாள் என்று விசாரிக்கும் அந்தப் பெற்றோருக்கு அவர் என்ன பதில் கூறப்போகிறார்?

ஓடும் அந்த ரயில்வண்டி தடம்புரண்டு அவருக்கு முடிவை அளித்துவிடக்கூடாதா? அவளுடைய மனசை அறுக்கும் குற்றத்துக்குத் தண்டனை தானாக வரக் கூடாதா?

"ஏன்? உன்னுடைய சுயநலத்துக்காக எத்தனையோ நிரபராதிகள் உயிரை இழக்கவேண்டுமா? நீ செய்த குற்றத்துக்கு அந்த வகையில் சட்டென்று எப்படியப்பா தண்டனை நேரும்? கொஞ்ச கொஞ்சமாகத்தான் அநுபவிக்க வேண்டும்!' என்று மனசின் எதிர்க்குரல் கேலிச்சிரிப்புச் சிரித்தது.

வண்டி பாதையைவிட்டு விலகாமல், அவருக்கு ஒரு துளிசேதத்தையும் ஏற்படுத்தாமல் மறுநாள் காலையில் அவரை ஊரில் கொண்டுவந்து சேர்த்துவிட்டது.

முதுமையை அடைந்திருந்த போதிலும் இன்னும் தளர்ச்சி காணுமலேயே இருந்த அவருக்கு அன்று சக்தியே போய்விட்டது போலிருந்தது. ஒரு மாட்டுவண்டியைப் பிடித்துக்கொண்டு அவர் அதில் ஏறி உட்கார்ந்தார்.

வாசலில் வண்டிவந்து நிற்பதைக் கண்ணுற்ற செல்லத்துக்கு, கையிலிருந்த சாமான் நழுவியது.

ஜானகியையும் அழைத்து வருகிறார் போலிருக்கிறது, இல்லாவிட்டால் வண்டி ஏன் வைக்கிருர்?...குழந்தை எப்படி இருக்கிருளோ ...

தாவிக் குதித்த மனசுக்குப் போட்டியாக அவள் வாசலுக்குத் தாவிவந்தாள்.

ஆனல்—

செல்வக்கணவன் வீட்டிலிருந்து புதிதாகத் தாய்மனை வரும் மங்கை, அன்பும் ஆசையும் குலுங்க அவசரத்துடன் இறங்கி ஓடி வரவில்லை. சோகத்தின் எல்லைக்குள் மூழ்கிய இருண்ட முகத்துடன் கிழவர் இறங்கினுர். வெற்றுவண்டி வட்டமிட்டுக்கொண்டு சென்றது.

நிலைத்து நின்ற செல்லத்துக்குச் சுய உணர்வு வருவதற்குச் சில விநாடிகள் சென்றன.

"குழந்தை வரவில்லையா?..." என்று கேட்டாள்.

"இ...ல்...லை...!"

கணீரென்று ஒலிக்கும் இயல்பு வாய்ந்த அந்தக் குரலில் சொல் ஏன் இப்படித் தேய்ந்து மாய்ந்து போக வேண்டும்?

கிழவர் ஊஞ்சலில் வந்து உட்கார்ந்தார். ரங்கநாதம் அப்போது கொல்லைப்புறம் குளித்துக்கொண்டிருந்தார். 'ட்யூஷனு'க்கு வந்திருந்த பிள்ளைகள் வாசலில் கலகல வென்று சத்தமிட்டுக் கொண்டிருந்தனர். செல்லத்துக்கு வேலையே ஓடவில்லை. காபியைக் கலந்து கொண்டுவந்து கிழவரின் முன் வைத்தாள்.

சரத்துண்டுடன் ரங்கநாதம் கூடத்தில் நுழைந்தார். "இப்போதுதான் வருகிறீர்களா? வண்டி 'லேட்டோ'?" என்று மலர்ந்த முகத்துடன் விசாரித்தார். ஜானகி சுகமாக வாழ்க்கை நடத்துவாள் என்று வெள்ளை உள்ளத்துடன் நம்பியிருந்த அவருக்கு அவளைப்பற்றிய கேள்விகூட முதலில் எழவில்லை!

"இல்லையே?" என்று அவருக்கு பதிலளித்த கந்தையா செல்லத்தை நோக்கி, "இப்போது காபி வேண்டாமம்மா, நான் இன்னும் பல்லே துலக்கவில்லை" என்றார்.

முகவாட்டத்தையும் கம்மிய குரலையும் கவனித்த ரங்கநாதம், "இரவு நல்லதூக்கமில்லை போலிருக்கிறது. வண்டியில் கூட்டம் அதிகமோ?" என்று கேட்டார்.

காலிப் பாத்திரத்தை எடுத்துப்போன செல்லம் வாசல்படிக்கு அப்பால் நின்று அளவற்ற துடிப்புடன் கிழவரைப் பார்த்தாள்.

சுருங்கிய அந்த விழிகளில் நீர் தளும்புவானேன்?

"நான் பெரிய பாவத்தைச் செய்தவன் ரங்கநாதம்!..."

செல்லத்துக்குக் கூரை பெயர்ந்து தலைமேல் விழுந்துவிட்டது போலிருந்தது. ரங்கநாதம் துணுக்குற்று அவரைப் பார்த்தார்.

"அவன் எனக்கு மகனல்ல!" என்றது அந்தத் தழதழத்தகுரல்.

'ஏன் இப்படிச் சொல்லுகிறார்? பாவம், இந்தக்காலத்துப் பையன்களே அப்பாவிடமிருந்து பணம் கறக்கும் வரையில்தானே மதிக்கிறார்கள்? என்ன அவமரியாதை செய்து அனுப்பினானோ? ஜானகியும் அவனுடன் சேர்ந்து கொண்டு மமதையால்...'—அப்பாவி ரங்கநாதத்தின் மனம் கந்தையாவின் பேச்சுக்கு இப்படி வியாக்கியானம் செய்தது!

"ஏன் வருத்தப்படுகிறீர்கள்? என்ன செய்வது? இந்தக்காலத்தில் பையன்கள் இப்படித்தான் நடந்துகொள்கிறார்கள். ஜானகியும் கூடவா உங்களை..."

"உங்கள் குழந்தை தெய்வம். நான் பாவத்தைச் செய்தவன்" என்றார் அவர் மீண்டும் மீண்டும். உண்மை புரிந்து அவர் கேட்கிறாரா, இல்லையா என்பதை எல்லாம் அந்த நிலையில் தெளிந்து கொண்டவராகக் கந்தையா பேசவில்லை. தள்ளாத காலத்தில் பையன் ஏதோ மனஸ்தாபமாகப் பேசி மனமுடைய அனுப்பி இருக்கிறான் என்று தான் ரங்கநாதம் அவருக்காகப் பச்சாதாபப்பட்டார்.

'எப்படியோ, ஜானகி அவனுக்கு ஒத்துவிட்டாளே? அவருக்கு அதுதானே வேண்டியது?' என்று எண்ணிய ரங்கநாதம், "அப்படியெல்லாம் சொல்லாதீர்கள், விட்டுத் தள்ளுங்கள்! உங்களுக்கென்ன, அங்கே அவர்களா தாங்க வேண்டும்?" என்று தேற்றினார்.

பின்னர் கந்தையா விடைபெற்றுக்கொண்டு தம் வேலையைக் கவனிக்கப் போய்விட்டார்.

அவர் இதற்குப்பிறகு அந்த ஊரில் இருந்ததெல்லாம் சில நாட்கள்தான். சொத்துக்கு ஒரு வழி செய்து விட்டு அவர் ஒருநாள் மன அமைதியை நாடிக் கிளம்பி விட்டார்.

ரங்கநாதம் எல்லாவற்றையுமே சாதாரணமாக நினைக்கையில் அந்தத் தாயுள்ளம் மட்டும் அனலில் விழுந்த புழுவைப்போல் துடித்தது. கணவனுக்குத் தெரியாத வேதனையில் வெதும்பியது.

# 14

'அவர்கள் கண்ணெதிரே அதே ஊரில் அவர்களுடைய உதவியின்றியே என் மகனைப் படிக்கவைப்பேன்' என்று வீம்புடன் கூறிக்கொண்டாளே செல்லம், அதற்கு வீழ்ச்சி வந்தது. அதற்குரிய உரமில்லாமல் வெறும் வீம்புகொண்டு பாராட்டப்படும் உறுதிக்கு நிலையேது?

செல்லும் ஆற்ருத மனவெழுச்சிக்கு இடம் தந்து தந்து தானும் உழன்று பிறரையும் துன்புறுத்தும் பஞ்சை தானே? தன்னைத்தானே நொந்துகொள்ளும் வேதனையில் இன்று அவளுடைய பொருமை உணர்ச்சி பொசுங்கிவிட்டது. எப்படியோ அவனும் படித்துக் குறையையும் பூர்த்தி செய்யட்டும் என்ற ஆசை மட்டுமே அவளுடைய வேதனை களில் மங்காமல் நின்றது.

பாலுவுக்குப் புது இடத்தில் வந்து ஐந்தாறு நாட்கள் வரை எந்த அசௌகரியமும் தெரியவில்லை. உடலில் சோர்வு நீங்கிப் புதுத் தெம்பும் ஒளியும் பெற்ருன். கங்காதரம் அவனுடைய பெற்ருேருக்கு என்ன எழுதியிருந் தாரோ? அவர்கள் அவன் அங்கே தங்குவதைக் குறித்து அவனுக்கு ஆட்சேபித்தோ, விரும்பியோ ஒரு கடிதமும் எழுதவில்லை.

பாலுவும் முதலில் அவ்வளவாகப் பாராட்டவில்லை.

ஆனுல் நாட்கள் செல்லச்செல்ல......?

மூர்த்தியுடன் அவன் இருந்த நாட்களிலே அவனுக்குக் கைச்செலவுக்கு வேண்டிய பணம் ஊரிலிருந்து நேராக அவனுக்கே வருவது வழக்கம். இங்கே கங்காதரத்தின் பெயருக்கு அனுப்பப்பட்டுவந்தது. அவர் என்றுமே வீட்டின் செலவு, நிர்வாகம் இவைகளுக்குப் பொறுப்பாயிருப்பவர் அல்ல. பொக்கிஷம், நிர்வாகம் இரண்டும் மீனுவின் அதிகாரத்தில்தான் நடைபெற்றுவந்தன. மேலும் அவன் அங்குவந்த உடனேயே கங்காதரம் முன்னதாக அவனுடைய கலாசாலைச் சம்பளத்தைக் கட்டியிருந்தார். எனவே அவர் தபால்காரன் கையிலிருந்து பணத்தை வாங்கி அருகிலேயே நின்று பார்த்த மீனுவிடம் "பாலு கேட்டால் கொடு!" என்று அலட்சியமாகக் கொடுத்துவிட்டார். அலட்சியமோ, வேண்டுமென்று செய்யப்பட்ட சூழ்ச்சி தானே?

ஏற்கனவே கொட்டும் குணம் உண்டு. அத்துடன் அதிகாரமும் வழங்கிவிட்டால் கேட்பானேன்? அவனுடைய

அன்றாடச் சிறு செலவுகளுக்கும்கூட அவனுக்கு மீனா வினால் படியளக்கப்பட்டுவந்தது!

ஊரில் இருக்கையில் அன்னையிடம் அதிகாரமாகச் செலவுக்குப் பணம் வாங்கினான். மூர்த்தியின் வீட்டிலோ, தானே வைத்துக்கொண்டு போதும் போதாமல் செலவழிக்கும் பொறுப்பை ஏற்றுக் கஷ்டப்பட்டான். இங்கோ கையேந்தும் நிலைமைக்கு வந்துவிட்டான்! கையேந்துதல் என்றாலும் சாதாரணமாகவா? சுயமரியாதையையும், கௌரவத்தையும் கால்தூசிக்குச் சமமாகத் தட்டிவிட்டு அல்லவோ சமையலறை வாசல்படியில் நிற்கவேண்டியிருந்தது? மீனாவின் பாட்டிக்கு எதிரே இருக்கும் பொருள் இன்னதென்று தெளிவாகக் கண் தெரியாது. ஆனால் பாலு மடிப்புக் கலையாத சட்டை போடுவதுமட்டும் எப்படியோ தெரிந்துவிடும்! "ஏழைக் குடித்தனம், எப்படியோ படித்து முன்னுக்கு வரவேண்டும் என்று இருப்புக்குத் தகுந்தாற்போல் க்ரமோமே? மைனர்போல அலங்காரத்தைப் பாரேன்?" என்று அவன் காது கேட்க மீனாவிடம் அவள் சொல்லுவாள்.

பாலுவிடம் உடைகள் போதுமான அளவுக்குத்தான் உண்டு. அவ்வப்போது சலவைச்சாலையில் கொடுத்து அவன் வெளுத்துக் கொள்ளுவது வழக்கம். இங்கு மாதம் ஒருமுறையே சலவை கொண்டுவரும் வண்ணான் ஒருவன் வாடிக்கையாக இருந்தான். கங்காதரமோ, ரவியோ அவனைப்போல் நான்கு சட்டைகளை வைத்துக் கொண்டு காலம் தள்ளுபவர்கள் அல்லவே? வண்ணான் மடிப்புக்கு இருக்கும் மதிப்பைப்போல் தற்காலம் வேறு எதற்கு அதிக மதிப்பு இருக்கிறது? மதிப்பு வேண்டாம் என்று உதறித் தள்ளிவிடும் அளவுக்கு பாலு இன்னும் பக்குவம் அடையவில்லையே? எனவே அவன் ரகசியமாகத் தன் துணிகளை சலவைச்சாலையில் கொடுத்து அவசரமாக வாங்கவேண்டி இருந்தது. இதற்கென்று அவன் தனியாகப் பணம் கேட்கமுடியுமா?

இன்னும் இதைப்போல எத்தனை எத்தனையோ கஷ்டங்கள், ரவிக்கும் அவனுக்கும் இடையே பாராட்டப்படும்

எத்தனை எத்தனையோ வித்தியாசங்கள் எல்லாம் அந்த இளம் ரத்தத்தைக் கொதிக்கச் செய்தன. அத்தனை நாட்களாக அவன் அவர்களுடைய குணத்தை அறியாமல் இருக்கவில்லை. எப்போதோ வந்து போயிருந்த அளவி லேயே வேண்டிய மட்டும் உணர்ந்திருந்தான். என்றாலும் அகப்பட்டுக்கொண்டுவிட்டானே?

இவற்றையெல்லாம் அவன் யாரிடம் சொல்லி அழு வான்? கங்காதரம் பெரிய மனிதர், நான்கு பேரின் புகழுக் குப் பாத்திரமானவர், அவன் வீட்டில் இருக்கிறான், கலா சாலைக்குப் போய் வருகிறான், என்பதைத்தான் கவனிக்க முடியுமே தவிர, இந்த அற்பவிஷயங்களை எல்லாம் அவ ரால் கவனிக்க இயலுமா? இல்லை, அவன்தான் அவருடைய காதிலே போடலாமா?

ஒருதரம் ஒருவழக்கம் என்று ஏற்பட்டபிறகு தாய்க்கும் தந்தைக்கும் ரகசியமாகக் கடிதம் எழுதிப் பணத்தைத் தன் பெயருக்கு அனுப்பச் சொல்லுவது நன்றாக இருக் குமா? மீனா சும்மா இருப்பாளா? ரங்கநாதம் அந்த ஏழை மருமகனுக்கு வைக்காத மதிப்பை இந்தப் பணக்கார மரு மகனுக்கு வைத்திருக்கிறாரே?

அன்று மாலை அவன் கலாசாலை முடிந்து வீடு திரும் பினான். வீட்டு வாசல் கதவு பூட்டப்பெற்று அவனை வரவேற்றது.

'எங்கே சென்றார்கள்?...' என்று அயர்ந்தவனாக அவன் நிற்கையிலேயே வாசல் 'காம்பவுண்டுக்' கதவைத் தள்ளிக்கொண்டு சுதாவும் வந்தாள்.

"சரிதான் போ, நான் நிற்பது போதாதா? நீயும் வந் தாயா?" என்று பாலு அவளை வரவேற்றான்.

"ஏன், அவர்கள் எல்லோரும் எங்கு சென்றார்கள்?"

"எனக்குத் தெரிந்தால் இங்கு நிற்பேனா, பூட்டைப் பார்த்துக்கொண்டு?"

"உங்களிடம் சொல்லவேயில்லையா?"

"உனக்குச் சொல்லி அனுப்புவார்களே?"

"சொல்லி அனுப்பி இருப்பதால்தான் உங்களைப் பார்க்க இங்குவந்து நிற்கிறேனுக்கும்!"

அவளுடைய விழிகளில் குறும்பு தெறித்தது; இதழ்களில் முறுவல் வெடித்தது. அவர்கள் போய்விட்டார்களே என்று சற்றுமுன் சங்கடப்பட்ட பாலு, இப்போது சந்தோஷப்பட்டான்.

"வெறுமே நின்றால்?" என்று கேட்டாள் அவள்.

"பின் என்ன செய்வது? பூட்டை உடைக்கலாமா?" என்று திருப்பிக் கேட்டான் பாலு.

"ஆனால் நின்றுகொண்டிருங்கள்!" என்று கூறிவிட்டு அவள் குழந்தைபோல் துள்ளிக்குதித்துக் கதவைத் தள்ளிக் கொண்டு வெளியே ஓடினாள்.

ஒரு நொடியில் அடுத்த வீட்டுக்குள் நுழைந்து திரும்பிய அவளுடைய கையில் ஆடிய சாவி வளையம் அவனைப் பரிகசித்தது.

"எனக்கு இந்த யோசனை எட்டவில்லை. நீ கெட்டிக்காரிதான், சுதா" என்றான் பாலு.

"முகஸ்துதி ஒன்றும் வேண்டாம், சாவி, பூட்டு, வீடு எல்லாம் பத்திரம், நான் போகிறேன்" என்று வெடுக்கெனக் கூறிய அவள் திரும்பினாள்.

கதவைத் திறந்துகொண்டே அவன், "இந்தா? அவர்கள் எல்லோரும் எங்கேயாம்? அதைக் கேட்கவில்லையா?" என்று கேட்டான்.

"ஓ, சொல்லமறந்தேனே, மாதவபுரத்திலே தாத்தாவுக்கு உடம்பு சரியில்லையாம். சட்புட்டென்று மூட்டை கட்டி அனுப்புவதற்காக எல்லோரும் போயிருக்கிறார்களாம்!"

"அப்படியானால்?......"

"அப்படியானால் நான் போகிறேன்!"

ஒரு சிரிப்பை உதிர்த்துவிட்டு அவள் திரும்பினாள்.

பாலுவுக்கு எங்கிருந்தோ துணிச்சல் வந்துவிட்டது.

"சுதா" என்று அழைத்தான்; படபடப்புடன் உள்ளே சென்றான்.

அவனுடைய அறைக்கதவைத் தவிர மீதி எல்லா இடங்களும் பூட்டப்பட்டிருந்தன. பின்புறம் குழாயடி, ஸ்நான அறை என்று செல்லவேண்டுமானால்கூட வாசல் வழியாக வீட்டைச்சுற்றித்தான் போகவேண்டும்.

அவர்கள் எப்போது வருவார்களோ? அதுவரை யில்......

மேசை, அலமாரி எங்கேயானும் கடிதம், பணம் ஏதா னும் வைக்கப்பட்டிருக்கிறதா என்று குடைந்து பார்த் தான்; ஒன்றும் இல்லை.

அவசரத்தில் அவர்களுக்கு அவனுடைய நினைவே எழவில்லைபோலும்? அவனுக்கு ஒருகணம் தலை சுழன்றது; அயர்ந்துபோய் உட்கார்ந்திருப்பான். ஆனால் வாசல் படியில் அவள் ஒய்யாரமாகச் சாய்ந்து நின்றாளே?

வெளிச்சம் குபீரென்று பாய்கையில் இருள் இருந்த இடம் தெரியாமல் எப்படி ஓடிவிடுகிறது?

அவளுடைய முகவிலாசத்தில் அவனை வாட்ட இருந்த எல்லாப் பிரச்சினைகளும் பறந்தன. அந்தச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திய மாதவபுரம் தாத்தாவையும் மற்ற எல்லோ ரையும் அவனுடைய உள்ளம் வாழ்த்தியது.

"கூப்பிட்டீர்கள். உள்ளே வந்து அது இது எல்லா வற்றையும் குடைகிறீர்களே? பர்ஸைக் காணோமா? வைத்துவிட்டுப் போனோமா என்று பார்க்கிறீர்களா?" என்று அவள் கேட்டாள்,

"ஏதானும் இருந்தால்தானே பர்ஸ் பறிபோக? அவர்களாக ஏதானும் வைத்துப் போயிருக்கிறார்களாக்கும் என்று பார்த்தேன். நான் வெறும் வறளி என்பது அவர்களுக்கு நினைவுக்குவரும் சமயமா அது?..." என்று அசட்டுப் புன்னகை செய்தான் பாலு.

அவளுடைய முகம் ஒருகணத்தில் இருண்டது. "அப்புறம்?" என்றாள்.

' அப்புறம் என்ன? எனக்கு இப்போது பசி, தாகம், க்வலை எல்லாம் மறந்துவிட்டது. சிரிக்கிறேன்..."

உள்ளத்தில் இன்பம் பொங்கி வருவதை அவனால் அணையிட முடியவில்லை, அவனுடைய பேச்சின் உட்பொருள் அவளுக்குப் புரியாமலா இருக்கும்?

முகத்திலே செவ்வொளி ஜிவ்வெனப் படர்ந்தது. வாயடைத்துவிட்டது.

கண்கள் மட்டும் ஒளி வெள்ளத்தை அவன்மீது வீசி அவனைத் திணற அடித்தது. சிரிப்பு ஓய்ந்தது. உணர்ச்சி நெஞ்சை முட்டியது.

"சுதா...!"

அந்தக் கள்ளிக்கு இப்போது அவனை நேருக்கு நேர் பார்க்க எங்கிருந்துதான் சங்கோசம் வந்ததோ?

"நான் பணக்காரனில்லை சுதா, உன்......"

சொல்லவந்ததை அவனால் முடிக்க இயலவில்லை. தான் சக்தியற்றவன் என்ற துன்ப நினைவுடன் மோதி மீதி வார்த்தைகள் உருவாகுமுன்னே கலைந்து போயின. பிறரிடம் தன்னுடைய இயலாமையைக் காட்டிக்கொள்ளக் கூசும்படியான சுயகௌரவம் வாய்ந்த அவன் எப்படித்தான் அந்தப் பெண்ணிடம் தன் வறுமை நிலையைக் கூறினானோ? தன் இன்பத்திலும் துன்பத்திலும் வறுமையினும் வாழ்க்கையிலும் பங்குகொள்ளும் அளவுக்கு அவள்

அன்பு கொண்டுவிட்டாள் என்று தெளிந்துதான் அவ் விதம் துணிந்து கூறினன் போலும்!

"நீங்கள் பணக்காரராக இல்லாவிட்டால் நான் மட்டும் என்னவாம்?" என்று அவள் திருப்பி அவனைக் கேட்டாள்.

"நீயா? கலைமகளும் அலைமகளும் தம் அருள் மழையைப் பொழியப்பெற்ற ஒரு அழகி..." கேலியாகக் கூறிவிட்டு பாலு நகைத்தான்.

"ஓகோ? இப்படி வெள்ளத்தில் திணறும் மங்கையைக் கண்டால் பழங்காலத்துத் தமிழ் மகனாக இருந்தால் என்ன செய்வானும் தெரியுமா?"

முகம் சிவக்க அவனை நிமிர்ந்து பாராமலே அவளும் கேலியாகக் கேட்டாள்.

"எனக்குத் தெரியாதே, சுதா?"

"...வெள்ளத்தில் மூழ்கி அவளைக் காப்பாற்றுவானும்"

அவனுக்கு வாஸ்தவமாகவே அவள் எதை மனசில் வைத்துக்கொண்டு பேசினள் என்பது புரியவில்லை.

"தண்ணீர் வெள்ளமாக இருந்தால் நானும் ஒரு கை பார்ப்பேன். அருள் வெள்ளத்திலே நான் எப்படிக் குதிப்பது?"

"அருள் வெள்ளமில்லை. புகழ் வெள்ளம் என்னை அடித்துக் கொண்டு போகாமல்தான் பார்த்துக் கொள்ளச் சொன்னேன். என் சித்தப்பா என்னைக் கொண்டு செல்லும் திசை எனக்குப் பிடிக்கவில்லை..."

"இஷ்டமில்லை என்று சொல்லேன்?"

"எவ்வளவு சுலபமாகக் கையாலாகாத யோசனை சொல்லித்தருகிறீர்கள்?...சித்தப்பா என்மூலமாகப் பொருளும் புகழும் சேர்க்க ஆசைப்படுகிறார். அவருடைய ஆசைக்காகவே நான் சங்கீதத்தை விருத்திசெய்து, சட்ட

திட்டங்களுக்குள் அதைப் புகுத்திப் பணம் சம்பாதிக்க வேண்டும்...நீங்கள் மனம் வைப்பீர்கள், என்னைப்பற்றி விசாரிப்பீர்கள் என்று நானும் கூச்சத்தைவிட்டு உங்கள் கண்முன் நடமாடிப் பார்க்கிறேன். பணமில்லாதவர் என் கிறீர்களே? பணம் இல்லாதவரிடம்தான் மனிதத்தன்மை இருப்பதாக எனக்குப்படுகிறது. நான் பார்க்கும் பணக் காரர்களிடம் மனிதத்தன்மையே இல்லையே?...” கேலியில் ஆரம்பமான அந்த உளம் கனிந்த சொற்கள் கண்ணீரில் வந்து நின்றன.

சாதாரணமாகவே பெண்ணின் கண்ணீருக்கு இள காத ஆணே கிடையாது. சுதா அழகி; அவனுடைய உள்ளம் கொள்ளை கொண்டவள். கண்ணீரோ உண்மை யான உள்ள உருக்கத்தினின்றும் வெளிப்படுவது. கடவுள் அவரவர்க்கு ஏற்றவகையில் துன்பத்தை எப்படிப் பார்த் துக் கொடுக்கிறார்?

“சுதா, எனக்கு இப்போது புரிந்துவிட்டது. இன் னும் கொஞ்ச காலம், எப்படியோ பொறுத்துக்கொள். அப்புறம் உன்னுடைய இஷ்டம்போல் வானம்பாடியாகப் பாடிக் கொண்டிருக்கலாம். உன் கலையை நீ நிச்சயமாக விற்கவேண்டாம். ஏனென்றால் கொடுப்பதற்கு என்னிடம் காசு கிடையாது!”—அவளும் கண்ணீருக்கிடையே அவ னுடன் சேர்ந்து நகைத்தாள். அன்று முழுதும் பாலு பரம்பொருளைக் கண்டுவிட்ட முனியின் நிலையில் இருந்தான் என்றால் மிகையாகாது. பசி, தாகம், பரீட்சை, கவலை, தூக்கம் என்று ஒன்றுமே நினைவு இருக்கவில்லை. நினை வெல்லாம் கனவாகி, கனவெல்லாம் நினைவாகி விட்டது போல் இருந்தது.

தூய உள்ளங்களின் கலப்பிலே முகிழ்ந்த காதல் வெடித்துப் பரப்பிய இன்ப மணத்தின் மயக்கம் அது.

## 15

**பி**றக்கும்போதே நல்லவராகவும் பொல்லாதவராகவும் தைரியமுள்ளவராகவும் கோழையாகவும் எவரும் உருப்

பெற்று விடுவதில்லை. உரத்துக்கும் விளை நிலத்துக்கும் கவனிப்புக்கும் தக்கபடியே விதை பலன் தருகிறதே ஒழிய முற்றிலும் இயல்பாக எதுவும் அமைந்துவிடுவதில்லை.

பாலு சுபாவத்தில் மென்மையானவன், தன்மதிப்புள்ளவன்தான். ஆனால் பொல்லாத சந்தர்ப்பம் அவனைத் தன் குணங்களிலிருந்து நழுவச் செய்தது. மாதவபுரம் சென்றவர்கள் அவனுக்கு ஒரு தகவல் கொடுக்கக்கூடாதா? அல்லது எட்டித்தான் பார்க்கக்கூடாதா? அவன் என்ன செய்வான்? காதல் அவனுக்குப் பசியா வரத்தைக் கொடுக்கவில்லையே?

ஒரு நாள், இரண்டு நாள் என்று எப்படியோ சொற்பத்தைக் கொண்டு தள்ளினான். கொஞ்சம் பழக்கமாயிருந்த மாணவர் விடுதி மாணவன் ஒருவனிடம் கடன் பெற்று மூன்றாவது தினத்தையும் கழித்தான். அன்று பரீட்சை முடிந்து மாலை வீடுதிரும்பி வாசல் கதவு திறந்திருக்காதா என்று ஏங்கியவண்ணம் வருகையில் ஏமாற்றம்தான் மிஞ்சியது. வெறும் பசி வந்தாலே பத்தும் பறந்து போகுமே? அத்துடன் மென்மையான உள்ளமும் நோக நேர்ந்துவிட்டால் என்னென்ன எண்ணங்கள் கிளைக்காது?

கூடத்து அலமாரியிலும், சமையற் கட்டிலும் மீனா பணம் வைத்திருப்பதுண்டு. பூட்டை உடைத்துப் பார்த்தால் என்ன என்று அவனுக்குத் தோன்றியது. இனியும் நாளைத் தள்ள முடியாது என்ற நிலை வரவே, அவனுக்குப் பூட்டை உடைத்துக் கதவைத் திறப்பதைத் தவிர வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. எனவே அந்தச் செயலுக்குத் துணிவு கொண்டான்.

முன் கூடத்தில் சாதாரணமானதொரு பூட்டே போடப்பட்டிருந்தது. அதை அதிக சிரமமின்றியே உடைத்துவிட்டான். அலமாரியின் கதவிலும் சிறிய பூட்டொன்று தொங்கியது. ஆனால் சுவற்றில் உள்ள 'ஸ்டாண்டில்' புத்தர் சிலைக்குப் பின்னால் அந்த அலமாரிப் பூட்டுக்கு சாவி கிடைத்தது. எனவே அவன் அலமாரியைத் திறந்து அன்ன உருக்கொண்ட மீனாவின் வெள்ளிச்

சிமிழையும் எடுத்துவிட்டான். பரபரப்புடன் அதன் வயிற்றில் இருந்த மூடியைத்திருகினான். அது கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தது. யாரும் காணுமல் பிறர் பொருளை எடுப்பது முதல் தடவை அல்லவா? அடிமனசில் அச்சம் படபடத்தது. ஆனால் அவன் எத்தனைக் கெத்தனை அவசரப்பட்டானே, அத்தனைக்கத்தனை அந்தப் பாழாய்ப் போன சிமிழின் மூடி வெகு அழுத்தமாகப் பதிந்து இருந்தது. கீழே வைத்து கெம்பி அவன் அதைத் திறக்க முயலுகையிலேயே வாசலிலே கதவு திறந்து சாத்தப்படும் ஓசை கேட்டுவிட்டது.

பாலுவுக்குக் குப்பென்று வியர்த்தது.

"ஹால் கதவு திறந்திருக்கிறதே?..."—மீனுவின் குரல்தான்!

அவன் என்ன, பழக்கப்பட்டவனு? நெஞ்சம் தடுமாற, கைகள் நடுங்க, செயலற்று நின்றான். வாசல் படியில் நின்ற மீனு அவனை எப்படி விழித்துப் பார்த்தாள் என்பதை விவரிக்கத் தேவையில்லை.

பொல்லாத சந்தர்ப்பம்தான் அவனைத் திருடனுக்கியதே? கிழவரோ சாகவும் இல்லை, பிழைப்பதாகவும் தோற்றவில்லை, ஊருக்குப் போய் ஒரு நடை பார்த்து வரலாம் என்று கிளம்பி வந்த மீனுவும் அவள் பாட்டியும் அதே சமயத்தில்தானு வந்து நுழையவேண்டும்? இல்லை, வந்தது கங்காதரமாகவோ, ரவியாகவோ இருந்திருக்கக் கூடாதா?

"ஏண்டா பாலு? என்ன காரியமடா இது?"

ஏழு உலகங்களும் கிடுகிடுத்து விட்டாற்போல இருந்தது.

"இல்லை அக்கா, நாலு நாளாக நீங்களும் போய்விட்டீர்கள், நான் எப்படி ஒன்றுமில்லாமல் இருப்பேன்?..."

சமயத்தில் தைரியம் அவனைக் கைவிடவில்லை என்றுலும் அவனுக்கு உயிர் போய்த் திரும்பி வந்தது.

"அதற்காக? இதுதானு காரியம்? நாங்கள் எங்கே தீவாந்திரத்துக்கு ஓடிவிட்டோமா? இந்த வழக்கம் நன்ருக இருக்கிறதே? அடுத்த வீட்டு சரஸ்வதியிடம் கூடச் சொல்லிவிட்டுப் போயிருந்தேனே? நான் இந்த வீட்டிலே இனிமேல் யாரை நம்பி யாரை நம்பாமல் இருக்க? சமயத்தில் வந்தேன் தெரிந்தது. என்னென்ன போயிருக்கிறதோ? யார் கண்டார்கள்? வெளியில் சொன்ஞல் வெட்கக்கேடு!"

முகவுரையைத் துவங்கித் தந்தபின் நீட்டிக்கொண்டு போவதற்கு அவளைத் தொடர்ந்து வந்த பாட்டிக்குச் சொல்லியா கொடுக்க வேண்டும்? வீட்டில் எப்போதோ காணுமல் போன பொருள்களுக்கும், அவனுடைய ஆடம்பரமான நடை உடை இவற்றுக்கும் முடிபோட்டுக் கற்பனை மெருகிட்டு அவள் நீட்டிக்கொண்டே போஞள்!

பாலு சிறுத்துச் சுருங்கிக் கடுகிலும் கடுகாகிவிட்டான். ஆஞலும் துடித்த ரத்தம் இளமை வேகத்துடன் கொந்தளித்தது.

"இதோ பாருங்கள் அக்கா? கண்டபடி பேசாதீர்கள், ஆமாம்! நான் ஏழையாஞலும் திருடனல்ல. மானமுள்ளவன். போய் ஐந்து நாட்களாயிற்றே, நான் என்ன செய்வேன் என்று நினைத்தீர்கள்? உங்கள் காலடியில் வந்து தினம் இரண்டணுக் கொடு என்று கேட்டு வாங்கிப் போகிறவன்தானே நான்? என்ன செய்வேன் என்று நினைத்தீர்கள்? உங்கள் தூசி ஒன்றுகூட எனக்கு வேண்டாம்!" என்று உதறிவிட்டு அவன் கடுகடுப்புடன் வெளியே வந்துவிட்டான்.

கலாசாலை மூட இன்னும் நான்கு நாட்களே இருந்தன. இத்தனை நாட்களாக அவன் மானத்தையும் கௌரவத்தையும் எண்ணிக் கூசியிருந்தான். இப்போது எல்லாம் பறந்துவிட்டது. ஏளனமோ கேலியோ எதையும் பொருட்படுத்தாமல் முன்பு கடன் வாங்கியிருந்த ஹாஸ்டல் மாணவனிடமே நிலைமையை விவரமாகக் கூறி இன்னும் கொஞ்சம் உதவியையும் யாசித்தான். செல்லத்துக்கு,

"உடனே தந்திமூலம் பணம் அனுப்புக" என்ற கடிதம் ஆத்திரத்தையும் சுமந்துகொண்டு பறந்தது. ஒரு வருஷத்துப் படிப்பை முடித்துக் கொண்டவனாகப் பாலு பெற்றோரிடம் வந்து சேர்ந்தான். அவனிடமிருந்து விலாசம் மாறி அவசரமாகப் பணம் கேட்டுக் கடிதம் வந்தபோதே செல்லம் நிலைமையை ஒருவாறு ஊகித்துவிட்டாள். அவன் மனம் நோக அவர்கள் நடந்திருப்பார்கள் என்பது அவளுக்கு அறிய முடியாததல்லவே? ஆனால் ரங்கநாதம் தம் மகன் மீதுதான் விவரமறியாமல் குற்றத்தைச் சுமத்தினார்.

"நான் சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே செல்லம், பாலுவுக்குப் பொறுமையே போதாது. ஏதானும் ஏறத்தாழ இருந்தால் உடனே புஸ்ஸென்று பொங்கிவிடுவான்!" என்றார்.

உர்ரென்ற முகத்துடன் பெட்டியும் கையுமாக உள்ளே நுழைந்த மகனை, செல்லம், "வந்தாயா பாலு? உடம்பு ஒரேயடியாய் இப்படி எப்படியடா இளைத்தது?" என்று உருகியவண்ணம் வரவேற்றாள்.

"உடம்புக்கென்ன உடம்புக்கு!" என்று கடுகடுப்புடன் பெட்டியை 'டொக்' கென்று கீழே வைத்தான் குமாரன்.

"காலேஜ் நேற்றுத்தானே மூடினார்கள்?" என்று ரங்கநாதம் விசாரித்தார். "ஆமாம். காலேஜாம், காலேஜ்! கையிலே காசில்லாதவனுக்கு என்ன படிப்பு வேண்டியிருக்கிறது? நான் படிக்கப் போனதே தப்பு, முழு முட்டாள் தனம்!" தாயையும் தந்தையையும் கண்டவுடன் அவனுக்குத் தன்னுடைய ஏமாற்றங்களுக்கும் வருத்தங்களுக்கும் இவர்கள்தானே காரணகர்த்தர்கள் என்ற மாதிரியில் அவனுடைய கசப்பு கோபமாகக் கனிந்து ஜ்வலித்தது. ரங்கநாதம் அவனுடைய உள்ளக் கொதிப்பை உணரவில்லை. தான் நினைத்ததை அநுபவமாகக் கண்டபின் கூறுகிறான் என்று நினைத்தவராக, "நான் அப்போதே அதுதான் அபிப்பிராயப்பட்டேன். எனக்கு நிச்சயமாக இஷ்டமில்லை. நமக்கு இவ்வளவுதான் செய்யச் சக்தி உண்டு என்பது

எனக்குத் தெரியாதா? சக்தியைத் தெரிந்து கொள்ளாமல் வெறும் ஆசையின் தூண்டுதலால் ஒரு காரியத்தில் இறங்குவது எப்போதும் முட்டாள்தனம்தான். நான் அப்போதே சொன்னேன். உன் அம்மாவும் கேட்கவில்லை. நீயும் காதில் போட்டுக் கொள்ளவில்லை...” என்றார் சம்பந்தமே இல்லாதவர்போல்.

ஏற்கனவே மனம் வெறுத்துப் பேசும் பையனுக்கு நம்பிக்கையை ஊட்டாமல் அவர் விலகியவர் போல் விமர்சனம் செய்ததைக் கேட்ட செல்லத்துக்குக் கோபம் வந்தது. கணவன் மகனைவிட மதிப்புக்குரியவன் என்பதை மறந்தாள்.

“போதும், வந்த குழந்தையிடம் நீங்கள் பேசும் லட்சணம்! என்ன முட்டாள்தனமாம் இப்போது? குடி முழுகிவிட்டதா? அவர் கிடக்கிறார், நீ வாடா, பாலு” என்று அவள் பரிவுடன் அழைத்தபோது சீறிய சர்ப்பம் அவள் பக்கம் பாய்ந்தது.

“அப்பா ஒன்றும் தெரியாதவர், யார் திருப்பினாலும் திருப்பிக்கொடுக்கும் மெழுகு பொம்மை போன்றவர், அவரைத் தன் இஷ்டப்படி ஆட்டிவைப்பது இவள்தான், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும்தான் தலையைவிட்டு எல்லாக் காரியங்களையும் குழப்புபவள்' என்றெல்லாம் அந்த முற்றாத மனசில் அன்று படிந்திருந்த எண்ணங்கள் தளதளத்து உஷ்ணத்துடன் கிளம்பின. “உன்னை யாரம்மா குறுக்கே விழச் சொல்லுகிறார்கள்? உன்னிடம் வந்து நான் கேட்கவில்லையே? உன்னால்தான் இத்தனை தூரமும் வந்தது. அப்பா எது பேசினாலும் வெட்டி வெட்டி உருப்படாமல் அடித்தாய்!”

ஆ......!

“ஏண்டா பாலு? நீயாடா இப்படிச் சொல்லுகிறாய்? நானா உருப்படாமல் அடித்தேன்?”

“ஆமாம், உன்னாலேயேதான். போன வருஷம் மாதவபுரத்தில் நீ எத்தனை சாகசம் செய்தாய்? அழுது, ஆர்ப்

பாட்டம் செய்து, அவள் பேச்சுக்குப் பேச்சு தூற்றுகிருள். உன்ளுல் எங்களுக்கு மானம் போகிறது! அடக்கமாக நீ என்றைக்கு இருந்தாய்? என்னிடம் ஒன்று சொல்லுவது; அப்பர்விடம் ஒன்று சொல்லுவது, மூன்ருமவரிடம் வேறு விதமாகப் பேசுவது. விமலா வீட்டுக்கு என்னை அனுப் பிளுயே, நிசமாகச் சொல், அவள் என்னைப் படிக்கவைத் துக் கொள்கிறேன் என்ரு சொன்ளுள்? மேலுக்கு என்ன ஜம்பம் வேண்டியிருக்கிறது?"

தாயின் உள்ளம் அதிர்ந்தது. கண்ணீர் மாலை மாலை யாக வடிந்தது. மகன் வருவான், வருவான் என்று ஆசை யுடன் காத்திருந்ததற்குக் கிடைத்த அன்புச் சொற்களா இவை? அவன் அப்படி இருப்பான், இப்படி இருப்பான் என்ற கற்பனைகளை எழுப்பி அவனுடைய நலனுக்காகவே தன் ஒவ்வொரு அணுவையும் தியாகம் செய்யக் காத்திருக் கும் தாய்க்குக் கிடைக்கும் பிரதி பலளு இந்த வார்த் தைகள்?

"அழுது அழுதுதானே குடும்பத்தை அதோகதி யாகச் செய்தாய்? இன்னும் என்ன அழுகை? பெண் ணுக்கு வேறு கல்யாணம் செய்திருக்கிருயே, அதில் வேறு என்னென்ன குழப்பிக் குட்டிச் சுவராக ஆக்கியிருக்கி ருயோ? பணம்தானே உனக்குப் பிரதானம்?..."

சண்டமாருதம் வீசியது. ரங்கநாதம் கற்சிலையாக அமர்ந்திருந்தார்.

"விமலா அப்படிச் சொன்ளுள் என்று அவரை நம்பும் படி குழையடித்து, என்னை அங்குகொண்டு ஒட்டவைத்து, பாவம், அவர் சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியா மல் அங்கு தவித்தார்! வேண்டுமென்றே அவர் மாற்ற லுக்கு முயன்ருரோ என்று கூடத் தோன்றுகிறது. சொல்லுவதெல்லாம் பொய்?..."

"நான் ஒன்றும் அப்படியெல்லாம் பொய் கூறவில்லை. அப்படி இருந்தாலும் உனக்காகத்தானேடா நான் சொன் னேன்?" என்று விம்மிளுள் தாய்.

"ஓகோ? இப்படித் திருப்பிக்கொள்கிருயாக்கும்! பொய் சொன்னேனென்று ஒப்புக்கொள்கிருயா? உனக்கு மானம் போகவில்லே? உபசாரமாக அவர் மேலே படிக்க வையுங்கள் என்று சொன்ஞர். அவ்வளவுதானே? நீ இந்த ஜாலவேலேயெல்லாம் ஏன் செய்தாய்? இப்போது இன்னும் ஒரு வருஷத்துக்கு என்னசெய்யப் போகிருயாம்? கொஞ்சக் கஷ்டமா? ஏளனங்களா?..."

அழுகையை மீறிக் கொண்டு ஆவேசத்துடன் செல்லம் பதில் கொடுத்தாள், "நடுவில் நிறுத்துவேனு? வீட்டை விற்ருனும் உன்னே முழுப்படிப்பும் படிக்கவைப்பேன்!"

"கிழித்தாய்!" என்ருன் ஏளனமாக பாலு.

தலேக்குமேல் வளர்ந்த மகன் வெறுப்புடனும் ஆத்திரத்துடனும் தன்னே மீறி எகிறிப் பேசுவதை வேடிக்கை போல் ரங்கநாதம் இப்போதும் வாய்மூடி மௌனியாகவே பார்த்துக்கொண்டிருந்தார்.

நாட்கள் மலர்ந்தன; பெருமூச்சு விட்டுக்கொண்டு தேய்ந்தன; உற்சாகமின்றி உதிர்ந்தன. செல்லத்துக்கு மைந்தன் நீறு பூத்த நெருப்பு ஆகிவிட்டான். அண்டிக் கிளறிஞல் பொறிகள் பறக்குமோ என்ற பயம் அவளே ஒதுங்கச் செய்தது. ஆனுல் தாபம் அவளே அவனிடம் பேச இழுத்தது. அவனேத் திருப்தி செய்ய மனம் துடித்தது. வீட்டைக் கிரயம் பேச ரங்கநாதத்தினிடம் தனிமையில் வற்புறுத்தலானுள்.

ரங்கநாதம் இம்முறை செல்லத்தின் வற்புறுத்தல்களுக்கு அசையவில்லே.

ஆம், பாலுவின் மீறிய போக்கை அவர் வெறுத்தார். அதற்கு ஏற்றமாதிரியில் அவருக்கு அன்று மீனுவின் அந்தக் கடிதம் கிடைத்தது.

மாதவபுரத்தில் கிழவரின் சாவுச் சடங்குகள் எல்லாம் முடிந்தபின் சாவகாசமாக பாலுவைப்பற்றிய உண்மைகளே எல்லாம் அவள் நினேத்து எழுதியிருந்தாள். ஒழுங்கற்ற முறையில் அவன் கங்காதரத்தினிடம் சங்கீதம் பயில

வரும் சிறு பெண்ணைச் சுற்றிப் பேச முயன்றதிலிருந்து, கையும் களவுமாக அவன் பிடிபட்டதுவரை ஒன்றுமில்லாமல் அவருக்குத் தெரிவித்து, குலத்துக்கே ஒரு மாசாக அவன் வளர்ந்திருப்பதையும், அவனை இன்னமும் அடக்கி வழிக்குக் கொண்டுவராவிட்டால் அவருக்கே அவமானம் என்றும் அவள் மனவருத்தத்துடன் தந்தைக்கு எச்சரித்திருந்தாள்.

கடிதம் வந்த சமயத்தில் பாலு வீட்டில் இல்லை. கடிதத்தின் விவரங்களைக்கண்ட மாத்திரத்தில் அது எந்த இடத்திலிருந்து, யாரிடமிருந்து வந்திருக்கிறதென்பதைத் தெளியும் அளவுக்குக்கூட ரங்கநாதத்தின் பொறுமை மிஞ்சியிருக்கவில்லை. ஏற்கனவே அவன் போக்கில் வெறுப்புக் கொண்டிருந்த அவர் பிரளயகால ருத்திரனாகிவிட்டார். கோபம் கொள்ளாதவர்கள் கொண்டால் கணப்பொழுதாக இருந்தாலும் உக்கிரம் அதிகமல்லவா?

வீட்டு வாசல்படியேறி அவன் உள்ளே வந்ததுமே அவனை நிறுத்திவைத்து அவர் ஆற்றாமை தாளாமல் இரைந்தார்.

"வேண்டாம், வேண்டாம்" என்று செல்லம் கண்ணீருடன் தடுத்து ஓலமிட்டதை அவர் பொருட்படுத்தவில்லை.

ஏற்கனவே எரியும் கொள்ளியாக இருந்தது அவன் உள்ளம். இந்த அநியாயப் பழிகளையும் கேட்கையில் இன்னும் பற்றிக்கொள்ளக் கேட்பானேன்?

அக்கா தன்னை வைத்துக்கொண்டிருந்த 'அருமை'யைப்பற்றி ஆத்திரத்துடன் அவன் கொட்டுகையிலே, தந்தை என்ற மரியாதையை மீறும் வகையில் பேசிவிட்டான்.

இருபுறமும் உக்கிரம் ஏறத் தெருக் கூடி விடும்போல இருந்தது.

ரங்கநாதம், "சீ! வெளியே இறங்கு, உனக்கும் எனக்கும் விட்டது!" என்று முடிவு கட்டினார்.

கரடுமுரடான பாதையில் வந்து பாறைகளில் இடைப் படும்போது சிற்றுறு வேகத்துடன் மோதுகிறது. திசை மாற முயலுகிறது. ஒரு நிலை இல்லாமல் தத்தளிக்கிறது. இந்தக் குழப்பத்திலே பெரும் தடங்கலும் எதிர்ப்பட்டு விட்டால் அது ஒரேயடியாகத் தன்போக்கை வாட்டமான வேறு வழியில் திருப்பிவிடுகிறது.

தந்தையின் கோபத்தீயால் வெருட்டப்பட்ட பாலு வுக்கு ஒரு நோக்கோ, சிந்தனையோ, யோசனையோ ஒன்றும இருக்கவில்லை; விடுவிடென்று வெளியே நடந்தான்.

கொதிக்கும் உள்ளத்துடன் பாலு நோக்கில்லாமல் நடந்தான். ரயில்வண்டி நிலையத்தின் பக்கம் வந்ததும் அவனுடைய நடை தளர்ந்தது. பழைய நாட்களின் நினைவுகள் உள்ளத்தில் பளிச்சிட்டன.

சட்டென்று சுவற்றில் ஒட்டப்பட்டிருந்த ஒரு கொட்டை எழுத்து விளம்பரத்தாள் அவன் கவனத்தை இழுத்தது.

'ஸ்ரீராம'நவமி உற்சவ வைபவம். இன்னிசைக் கச்சேரி குமாரி சுநந்தா. புத்தூர் மைதானத்தில் அமைக்கப்பட்டி ருக்கும் பந்தலில்...'

இந்த விஷயங்கள் அவன் கருத்திலே வந்து ஒட்டிக் கொண்டன. கச்சேரி, அன்றுதான மாலை ஏழுமணிக்கு ஆரம்பமாகப்போகிறது! காறுறு பெருகிவரும் வேகத்தில் கடுந்தீயானலும் அவிந்துதானே போகிறது? பாலு அன்றுமாலை ஆறரைமணிக்கு ஸ்ரீராம நவமி உற்சவம நடக்கும் கச்சேரிப பந்தலை அணுகிக் கொண்டிருந்தான்.

அப்போது பந்தலில் ஸ்ரீராமனுடைய குணதிசயங் களை விவரித்து யாரோ ஒருவர் உபந்நியாசம் செய்து கொண்டிருந்தார். பந்தலின் நான்கு புறங்களிலும் பொருத் தப்பட்டிருந்த ஒலிபெருக்கி அந்தக் கிழக்குரலை இடிக் குரலாக மாற்றிப் பரப்பிக் கொண்டிருந்தது. பந்தல் வாசலி லிருந்து வழியில் அரை பர்லாங் தூரத்துக்கு ஸைகிள் களுடன் இளவட்டங்களின் கூட்டம் வரிசையாகக் குழுமி

யிருந்தது. தூக்கிய காலர்கள், ஸெண்ட், பௌடர் இத்யாதி வைபவங்களுக்குப் பஞ்சமே இருக்கவில்லை. குண்டு மல்லிகையும் கதம்பமும் எந்தப்பக்கம் திரும்பினாலும் மணத்தை அள்ளிச் சொரிய, விதம் விதமான சேலைகளுக்கும் 'சோளி'களுக்கும், நகைகளுக்கும் விளம்பர தாரர்களாகப் பெண்கள் பந்தலின் ஒரு பகுதி முழுவதும் அடைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் உபந்நியாசத்தை ரஸித்தார்களா, அல்லது கோஷ்டி கோஷ்டியாகச் சேர்ந்து ஆனந்தமாகப் பொழுதைக் கழிக்க வந்திருந்தார்களா என்பதை நிர்ணயித்துச் சொல்ல முடியாது. பாலுவுக்கு சுதா தன்னைக் கவனிக்க வேண்டும் என்று ஆவல். ஆதலால் 'ஸெண்ட்' வாடை மூக்கைத் துளைக்க ஸில்க் ஜிப்பாவும் சரிகை அங்கவஸ்திரமுமாகக் கையில் வைர மோதிரம் தெரியத் தாளம்போடும் 'சங்கீத ரஸிகர்'களின் அருவருப்பையும் சிள்ளென்ற சொற்களையும் பாராட்டாமல் அவன் முன் வரிசைக்கு வந்தான்.

"யாரடா அவன்? முந்திரிக் கொட்டைபோல முந்தி முந்திப் போகிறானே?"

"அதுதானே கேட்கிறேன்? என்னவோ குமாரி சுநந்தா தன்னைத்தான் பார்க்கப் போகிறாள் என்ற மாதிரியில் அல்லவோ போகிறான்?..."—ஒரு பெருஞ் சிரிப்பு இதைத் தொடர்ந்து வந்து பாலுவின் செவிகளில் மோதியது. அவன் பல்லைக் கடித்துக் கொண்டான்.

கிழட்டு பாகவதரின் உபந்நியாசத்தைக் கேட்கவா அந்தக் கூட்டம் காத்திருந்தது? அவர் அறிந்துதான் போலும், கூட்டத்தின் பெருக்கத்தையும் ஆரவாரத்தையும் கண்டதும் கடையைக் கட்டிக்கொண்டு போனார்.

பாலுவின் கண்கள் மேடையின்மீதே லயித்தன.

கறுவலான மிருதங்கக்காரர் கழுத்தில் தங்கச் சங்கிலியும் காதில் வைரக் கடுக்கனும் ஒளியிட முதலில் மேடைக்கு வந்தார். ஒட்டி வெட்டப்பட்ட கிராப்புத் தலையுடன் குண்டு போலிருந்த பிடில்காரர், தம்பூரைத் தூக்கிக்கொண்டு ஒரு

பையன், இப்படி எல்லோரும் மேடையில் வந்து அமர்ந்து விட்டனர்.

விளக்குகள் எல்லாம் அமைக்கப்பட்டதும் மின்சார விசை வந்து அவைகள் ஜ்வலிக்கப்போவதை எதிர்பார்ப்பது போல மக்கள் பொறுமையைக் கையில் பிடித்து ஒரு முகமாக மேடையையே நோக்கினார்கள்.

பளீரென்று ஜோதி உதயமாகி மேடையில் இடம் கொண்டது. சடபுடவென்று கைகள் கொட்டின.

பாலுவுக்குச் சங்கீத நுணுக்கம் ஒன்றும் அவ்வளவாகத் தெரியாது.

ஆனால் சுதாவின் கண்டத்திலிருந்து எழும்பிய இனிய நாதம் அவனுடைய நினைவைக் கட்டி ஒரு இன்பமயமான உலகுக்கு இழுத்துச் சென்றது. செயற்கை நிலவைப் பொழியும் பாதரசக் குழாய் விளக்குகள், எப்பக்கம் திரும்பினாலும் நானாவித வாசனைகளுடன் நானாவித நிறங்களிலே மின்னும் பெண்கள்—ஆண்கள், எல்லாமே அவனுடைய பூவுலக நினைவிலிருந்து பெயர்ந்துவிட்டன.

ஒருசமயம் அந்த நாதம் அலையலையாகச் சுருண்டு பொங்கி ஆர்ப்பரித்து அவனுடைய தாப இதயத்தைக் குளிரவைப்பது போலிருந்தது. இன்னொரு சமயம் அவனை ஜிவ்வென்று எழுப்பி வானவீதியிலே தாரகைகளுக்கு நடுவே கொண்டுவிட்டது போலிருந்தது. மற்றோர் போழ்தில் மலர்க் குவியலிலே தாலாட்டியது போலிருந்தது. நேரம் சென்றது அவனுக்கு நினைவில்லை. எதிரே சுதா மட்டும் இருந்தாள். அவன் அந்தத் தனி உலகில் மிதந்தான்.

பாட்டு நின்றது. அதன் நாடியான தம்பூரின் சுருதியும் நின்றது.

பாலு கண்களை அகலவிழித்து சுதாவை மது உண்டவன்போல் நோக்கினான். அவனுடைய இதழ்களில் முறுவல் மலர்ந்தது.

பின்னிருந்து, 'இதற்கு ஆசைப்படாதே!' என்பது போல அவனுடைய முதுகிலே ஒரு குத்து விழுந்தது.

முதுகைத் தடவிக்கொண்டு பாலு பின்னே திரும்பினான்.

"என்னய்யா, முன்னாடித்தான் போய் உட்கார்ந்தீர், கல்லுப் பிள்ளையார்போல் கூப்பிடக் கூப்பிட அசைய மாட்டேங்கிறீரே? இந்தச் சீட்டை மேடையிலே தள்ளுங்க" என்றார் அந்த 'ரசிக' ஆசாமி.

மேடையின்மீது பிரமுகர் ஒருவர் ஒவ்வொரு வார்த்தைக்கும் தலையைத் தட்டித் தட்டிப் பேசிக் கொண்டிருந்தார். பாலு சீட்டைத் திருப்பிப் பார்த்தான். 'ஆசை கொண்டேன் கிளியே' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. பாலுவுக்கு உடல் துடித்தது. உதடுகள் துடித்தன. மேடைமீதிருந்த சுதா அவன் நிலைத்த விழிகளுடன் பார்ப்பதை யறிந்து தன் கொவ்வைச் செவ்விதழ்களை அகற்றி மென் நகை செய்தாள். பிரமுகர் இன்னும் சிரமப்பட்டுப் பேச முயன்று கொண்டிருந்தார்.

"குமாரி ஐம்முனு தான் இருக்கிருள். அடிக்கடி இந்தப் பக்கம் பார்த்து சிரிக்கிருள், இல்லே பிரதர்?..."

"பாட்டு மட்டும்தான் பிரமாதம்னு நினைச்சேன், ஆளும் பிரமாதம் தான்!"

கொல்லென்ற சிரிப்பு.

"இவன் கண்ருவிப் பிரசங்கத்தை யார் கேட்டாங்க? ஆமாம், இந்தக் குமாரி வந்து..."

"அதோ க்ருணைக் கிழங்குபோல உட்கார்ந்திருக்கிருரே வலப்பக்கம் மேடையிலே? அவர் மகள்தானும்..."

"அட? அவன் மகளா? அமாவாசையும் பௌர்ணிமையும் போல இருக்கிருங்களே?..."

"வளர்ப்பு மகள் பிரதர், வளர்ப்பு மகள்!"

"ஏய்யா, அதோ அவர்கிட்டக் கொடுத்தேன், சீட்டை முன்னுக்குக் கொடுக்கச் சொல்லுங்க!"

பாலுவின் முதுகில் இன்னொருதரம் விரல்கள் சுண்டின.

'ஆசை கொண்டேன் கிளியே...!'

அது என்ன பாட்டின் தலைப்பா? அப்படி ஒரு பாட்டு இருக்கிறதா? அல்லது மிட்டாய் உருவம் கொண்டு தோற்றும் நஞ்சைப்போல் கலைப் போர்வையைப் போர்த்துக் கொண்டு வரும் கயவர்களின் கூற்று? பாட்டின் உருவத்தில் நேர்மையற்ற நெஞ்சின் தன்மையை எடுத்துச் சொல்கிறார்களா?

பாலு கையிலிருந்த துண்டுக் காகிதத்தைக் கசக்கினான்.

இந்த ரசிகர் குழாத்தை மகிழ்விக்கவா அவள் அங்கு பாடுகிறாள்? உண்மையில் அங்கு சங்கீதத்தை அறிந்து ரசிக்கும் மகாஜனங்கள் மட்டுமா வந்திருக்கின்றனர்?

சுதாவை, தனக்குமட்டும் சொந்தமாக அவன் நினைக்கும் சுதாவை அந்தக் கழுகுகளிடமிருந்து மீட்டு அவர்களுடைய கண்பார்வைக் கெட்டாமல் எங்கோ தூக்கிக் கொண்டு போய்விட வேண்டும்போல் அவனுடைய நெஞ்சம் துடித்தது.

பாலு எழுந்து வேகமாக வெளியே சென்றான்.

## 16

"பிள்ளையாவது பிள்ளை, அணில் பிள்ளை, தென்னம் பிள்ளை! இவர்களுக் கெல்லாம் சோறு போடுவதைவிட தெரு நாய்க்கு ஒருபிடி சோறு போட்டாலும் நன்றி காட்டும். பாலு, பாலு என்று உருகினாள். தேகத்தைச் செருப்பாக உழைத்து அந்தப் பிள்ளையைப் படிக்க வைத்தாள். கடைசியில் என்ன ஆச்சு? எங்கேயோ வேலை

செய்கிறுளும், சம்பாதிக்கிறுளும்! நிசமோ, பொய்யோ, யாருக்குத் தெரியும்? அழுது அழுது அரை உடம்பாக உருகிவிட்டாள். அளவுக்குமேல் பாசம் விஷமாக்கிவிடு கிறது அவர்களையே!" இப்படிப் பேசிய முத்தம்மாளுக்குக் குழந்தை குட்டிகள் கிடையாது. ஊர்ப் பள்ளிக்கூடத்தில் அவளுடைய புருஷன் குமாஸ்தாவாக வேலை செய்கிறுர். அவள் நாலெழுத்துப் படித்திராத போதுலும் எந்த விஷயத்தையும் அக்குவேறு ஆணிவேருக அலசிப் பேசி விடுவாள். யாருமே அவளுக்கு லட்சியமில்லை. உலகி லேயே தன் அபிப்பிராயம்தான் மிகவும் சிலாக்கியமானது என்பது அவளுடைய எண்ணமோ என்று அவளுடைய பேச்சைக் கேட்பவர்களுக்கு நினைக்கத் தோன்றும்.

"என்ன இருந்தாலும் பாலு கெட்டிக்காரன்; செல்லம் அதிர்ஷ்டக் கட்டை; மகன் உதவவில்லை" என்ருள் முத்தம்மாளின் சிநேகிதி உமா.

"கெட்டிக்காரன் தான். பொன் ஊசியாலல் கண்ணைக் குத்திக் கொள்ளலாமா? தாயாரை என்னென்ன பேச்சுக் கள் பேசினுன்? அவளாகக் கண்டு பொறுத்தாள். நாளு லல் நாயே, வெளியே நட, இது என் வீடு என்று முன்ன மேயே சொல்லியிருப்பேன். ஆயிரத்தில் பிறந்து இருந் தாலும் அடக்கம் வேண்டாமா? வருஷம் சித்திரைக்கு இரண்டு ஓடிவிட்டது. ஒரு உபயோகமில்லை, பாவம்..."

"பெண்ணைத்தான் கட்டிக் கொடுத்தாளே, அந்த மருமகனும் நல்ல குணவானுக வாய்க்கக்கூடாதா? ஒரே முசுடு. இந்த மூன்று வருஷ காலத்தில் மூன்று நாட்கள்கூடச் சேர்ந்தாப்போல அந்தப் பெண்ணை இங்கே அனுப்பிவைக்க மாட்டேன் என்கிறுன். ஒருநாள் இரண்டு நாள் வந்துவிட்டு ஓடிப் போய்விடுகிறது. இந்தக் காலத் துப் பையன்களே மொத்தத்தில் குணக் கட்டை ..."

"ஜானகி மட்டும் என்னவாம்? அடே......யப்பா! என்ன ராங்கியும் கர்வமும் வந்துவிட்டது அந்தப் பெண் ணுக்கு? கண்டால் கூடப் பேசுவதில்லை. ம்...அற்பப் பணம்! அந்தக் கிழவரைக்கூடப் போன மறுநாளே

அண்டவிடாமல் அடித்து விட்டாளேயம்மா! அவர் வெறுத்துத்தான் காசியோ இமாசலமோ போய்விட்டாராம்!''

முத்தம்மாள் காரமாகப் பேசிவிட்டுப் புடைவையைப் பட்பட்டென்று கல்லில் அறைந்தாள்.

சுயமாக ஒரு விஷயத்தைக் குறித்து அநுபவம் இல்லாத போனால் அதைப்பற்றி வெகு தாராளமாகத் துணிவுடன் பேசலாம். செல்லமா அவளைத் திருப்பிக் கேட்கப் போகிறாள்? அவள் உண்மையாகவே துயரத்தை அநுபவிப்பவள். முத்தம்மாளோ அநுபவிப்பவர்களைப் பார்த்து விமர்சனம் செய்பவள். விஷத்தால் துடிப்பவர்களுக்கும் வேடிக்கை பார்ப்பவர்களுக்கும் வித்தியாசம் இல்லையா?

கரை உயரே அரச மரத்தடியில் சேலையைப் பிழிந்து உடுத்திக்கொண்டு இருந்த செல்லத்துக்கு இந்தப் பேச்சுக்கள் காதில் விழாமல் இல்லை. முத்தம்மாளின் பேச்சுக்கு அவள் மதிப்பு வைக்கவில்லை. ஆனால் நெஞ்சம் குமுறியது. அதன் சூழ்ச்சியில்தானே பாலு இன்று அவளை மறந்து எங்கோ போய்விட்டான்? சுபாவமாகவே அவன் கல்நெஞ்சுக்காரனாக இருப்பான் என்பதை அவள் நம்பவில்லை. அவளிடம் செல்வமாகிய சக்தி இருந்திருந்தால் குடும்பத்தில் பூசல்களும் குழப்பங்களும் கிளம்பியே இருக்காது. எவரையும் அவள் உதவிகேட்கப் போயிருந்திருக்கப் போவதில்லை. அவனும் ஆசையின் வேகம் தாளாமல் இவ்வளவு அல்லல்களுக்கு ஆளாகியிருக்க மாட்டான். அவளுடைய ஆசைகள், மனக்கோட்டைகள் எல்லாம் அந்த அஸ்திவார மில்லாமலேயே தவிடுபொடி யாகிவிட்டன. பாசமும் ஆசையும் பணத்தினின்று வேறுபட்டு அப்பால் நிற்பவை என்றுதான் சொல்லுகிறார்கள். என்றாலும் இளம் உள்ளம் ஒருநிலையில் நிற்காதது. அது அவளுக்குத் தெரிந்திருந்தது. அதனால் பணமாகிய பசையிருந்தால் பாலு ஒட்டாமல் போகும் சந்தர்ப்பமே வாய்த்திருக்காது என்று செல்லம் வறுமையின் மீதுதான் குற்றத்தைச் சுமத்தினாள்,

அவன் ஆயிரம் குற்றங்கள் செய்திருந்தாலும், அவளை எத்தனை உதாசீனங்கள் செய்த போதிலும் அவள் மன்னிக்கத் தயாராக இருந்தாள். ஆனால் அவளுடைய உள்ளம் ஒரே ஒரு திருப்திக்குத்தான் ஏங்கியது. அவன் எங்கு இருந்தாலும் அவளுடைய அன்பின் தன்மையைப் புரிந்துகொண்டால் போதும். நம் அம்மா நமக்காக எத்தனையோ துன்பப்பட்டவள், அவள் ஒருபோதும் நமக்குக் கெடுதல் செய்யமாட்டாள் என்பதை அவன் உணர்ந்தால் போதும்.

அவன் உணருவானா? அந்தக் காலம் வருமா?...

ஆற்றங்கரைக் காற்று ஈரப் புடைவையைப் பிரிக்கையிலேயே படபடத்தது. அவள் ஒருபுறம் பிடித்துக் கொண்டு உதறியதும் டர்ரென்று கிழிந்தது. வலுவில்லாத பழம் புடைவை!

அவளுடைய குடும்பமும் இன்று அப்படித்தான் ஆகிவிட்டது.

ஏற்கனவே வலுவில்லாமல் நைந்திருந்ததை வெவ்வேறு விதமான சிக்கல்களில் வறுமை வேறு புகுந்து ஆட்டி அலைத்துக் கிழித்துவிட்டது.

அந்த இரண்டாண்டுகளில் அவள் மட்டுமா அரை உடம்பாகி நைந்துவிட்டாள்? ரங்கநாதத்துக்கு முன்போல் தொழிலே இப்போது நன்றாக நடக்கவில்லை. ஊரில் அவருக்குப் போட்டியாக இரண்டு ஓய்வு பெற்ற ஆசிரியர்கள் சேர்ந்து 'ட்யூடோரியல்' பள்ளி திறந்துவிட்டார்கள். அநுபவம் பெற்ற ஆசிரியர்கள் குறைந்த சம்பளத்துக்குச் சொல்லிக் கொடுக்கவே ரங்கநாதத்தின் வீட்டுத் திண்ணையில் கூட்டம் குறைந்துவிட்டது. சுந்துவுக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டுவதே பெரிதாக இருந்தது.

வீட்டு வாசற்படியில் அவள் ஏறுமுன்னரே தட்டி மறைவில் யாரோ பேசும் குரல் கேட்டது.

விடுமுறைக்கு வந்திருந்த பாலுவின் முன் நாளைய நண்பன் ராமுதான் தூணில் சாய்ந்து நின்று கொண்டிருந்தான்.

"அவனேதான் என்று நிச்சயமா உனக்கு?" என்று கேட்டார் ரங்கநாதம். செல்லம் நின்று கவனித்தாள்.

"நிச்சயமா? என்ன மாமா? பாலுவைத் தெரியாதா எனக்கு? ஒரு நிமிஷம் முன்பு பார்த்திருந்தால் அவனைப் பிடித்திருப்பேனே? ஹோட்டல் வாசலில் அந்த வண்டி நின்றது. நான் மாடியிலிருந்து பார்த்தேன், அவன் மாதிரி இருந்தது. கிடுகிடென்று இறங்கி வருவதற்குள் வண்டி போய்விட்டது. 'நந்தா சாரிட்டீஸ்' வண்டிதான் அது. நான் நிச்சயம் இங்கு வருவான் என்றே நினைத்தேன்..."

"பாலுவையா பார்த்தாய்? .." செல்லத்தின் துடித்த கேள்வி இது.

"ஆமாம், இந்தப் பதினைந்தாம் மைலில் வந்திருக்கிறான். அழகான மகன்! உம்...கடன்!"

செல்லத்தால் இதைக் கேட்டுக்கொண்டு நிற்க முடியவில்லை. உள்ளே சென்று குடத்தைக் கீழே வைத்தாள். ஈரத் துணியை மாற்றவில்லை. மேலே வேலைகள் இருக்கின்றன என்பதே அவளுக்கு மறந்துவிட்டது.

அவன் அத்தனை கல்நெஞ்சனகை எப்படி ஆனான்? பதினைந்து மைல் தூரம் வந்தவனுக்கு இங்கே வரத் தெரியவில்லையா? அவள் பெற்ற மகனைப் பார்த்து ஆனந்திக்கக் கூடக் கொடுத்து வைக்காத பாவியா? துரதிர்ஷ்டம் அவளை ஏன் துரத்தித் துரத்தி ஓடிவர வேண்டும்? ஊராரும் மற்றவரும் கைகொட்டிச் சிரிக்கவா? பாசம் விஷமா? அன்பு விஷமா?

எல்லாத் தாயையும் போலவா அவள் இருந்தாள்? தன் உடல் பொருள் எல்லாவற்றையும் அவனுடைய நலனுக்கே அன்றே அர்ப்பணித்திருந்தாள்?...அங்கிருந்து சென்றபின் எத்தனை கஷ்டப்பட்டானே? எந்த நிழலில் அண்டினானே? அவர் அத்தனை வெருட்டியும், போனவன் திரும்பி மறுநாள் வந்து நின்றானே? படிப்பிலேதான் எத்தனை ஆசை? எப்படியானும் இன்னும் ஒரு வருஷம் முடிக்க வேண்டாமா என்று மீண்டும் வந்து கேட்டானே?

அந்த மீனு எழுதிய கடிதத்தை வைத்துக் கொண்டு தானே அவரும் அப்படித் துரத்தியடித்தார்?

அவனுடைய கஷ்டங்களுக்கெல்லாம் காரணகர்த்தா... அவர்கள் தானே? அவளும் தான் அன்று ஏன் அப்படிப் பேசாமலிருந்தாள்? அவரிடம் எப்படியோ சண்டையிட்டு ஆர்ப்பாட்டம் செய்து வீட்டையானும் விற்று அவன் படிப்பைப் பூர்த்தி செய்ய அவரைச் சம்மதிக்க வைத்திருக்கக் கூடாதா?...அவன் இப்படி ஒரேயடியாகப் போய்விடுவான் என்று அந்தப் பஞ்சையுள்ளம் நினைத்திருக்கவில்லையே?

செல்லத்தைப் போன்ற அபலையான தாய்க்கு, கண்ணீரே உற்ற துணையாயிற்று. அவளுக்கு வேறு ஆறுதல் தான் ஏது?

'தபால்' என்ற குரல் அவளை உலுக்கியது. தபால் என்ற குரலைக் கேட்டாலேயே அவளுக்கு உடல் சிலிர்க்கும்; உள்ளம் துடிக்கும். ஆனால் சில கணங்களுக்குத்தான்.

'நான் சௌக்கியமாக இருக்கிறேன்' என்று அவளுக்குக் 'கண் துடைக்க' ஜானகி போடும் கடிதங்களையும் விமலாவின் பஞ்சப்பாட்டைத் தாங்கிவரும் கடிதங்களையும் தவிர வேறு அவளுடைய இதய தாபத்தைத் தணிக்க இளநீர் போன்ற மதுரமான மொழியில் 'அம்மா' என்று குளிர விளிக்கும் அவனுடைய கடிதம் வரப்போகிறதா?

தன் கன்று இல்லை, இது வைக்கோல் பொம்மை என்று பசுவுக்குத் தெரியும். அதன் கண்களில் நீர் பெருகுகிறது. ஆனாலும் பாலைச் சுரந்து கொடுக்க அது மறுக்கிறதா? இல்லையே? அது தாயுள்ளத்தின் இயல்பு. வராது என்று எங்கோ மூலையில் ஒரு குரல் கூறினாலும் மனம் துடிக்கத்தான் துடித்தது.

"காகிதம் எங்கேயிருந்து வந்திருக்கிறது?........" செல்லம் அலைபாய்ந்த நெஞ்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு ரங்கநாதத்தைக் கேட்டாள். முகத்திலே ஒரு ஆவல். 'பாலுவிடமிருந்து' என்ற இனிய சொல்

அவருடைய வாயிலிருந்து வராதா? 'அம்மா, நான் நடந்து கொண்ட விதமெல்லாம் தவறு, உங்கள் கிருபையால் நான் சுகமாக இருக்கிறேன்' என்ற அவனுடைய மணி எழுத்துக்கள் அதனுள் அடங்கி இருக்காதா? ஆனால், ரங்கநாதம் படித்துவிட்டு ஏன் அந்தக் கடிதத்தைத் தூக்கி எறிகிறார்? "இந்த அழகான மகனுக்கு வீட்டை விற்றுக் கொடுத்துவிட்டுச் சந்தியில் நிற்க வேண்டும் என்றாயே? ......" என்ற அவருடைய வார்த்தைகள் சுள்ளென்று உறைத்தன. அவள் கடிதத்தைப் பரபரப்புடன் எடுத்தாள். குண்டு குண்டான பாலுவின் கையெழுத்தில்லை அதில்; கோணல் மாணலான புரியாத விமலாவின் எழுத்துக்கள் தான் கடிதத்தை நிரப்பி இருந்தன.

"அன்புள்ள அம்மாவுக்கு,

அநேக கோடி வணக்கங்கள். இங்கு குழந்தைகளுடன் நாங்கள் சுகமாக இருக்கிறோம். அப்பா, நீ, சுந்து எல்லோரும் சுகம் என்று நம்புகிறேன்.

பாலு இங்கே இரண்டு தினங்கள் முன்பு வந்திருந்தான். அவன் இருக்குமிடமோ, வரப்போகிறான் என்பதோ எனக்குத்தான் இத்தனை நாட்களாகத் தெரியாதே? சாயங்காலம் ஐந்து மணி இருக்கும்; வந்தான். இரவு முழுதும் இருந்துவிட்டுக் காலையில் கிளம்பிவிட்டான். நீங்கள் அவனைப் பற்றித் தெரிந்துகொள்ள மிகவும் ஆவலாக இருப்பீர்கள் என்பதனால்தான் அவன் தெரிவிக்க வேண்டாம் என்று கூறியிருப்பதையும் மீறி நான் எழுதுகிறேன். உங்கள் விஷயத்தில் அவன் மனம் கல்லாகி விட்டது. ஏதோ போதாத காலம், இனியும் உனக்கு அப்பா அம்மாவிடம் என்னடா கோபம்? என்று நான் எத்தனையோ சமாதானம் சொல்லிப் பார்த்தேன். கோபம் என்ன, என் கடமை, அடுத்த மாதத்திலிருந்து பணம் கூட அனுப்பலாம் என்றிருக்கிறேன். ஆனால் அதைத் தவிர அவர்கள் மேல் எனக்குப் பிடிப்பு அற்றுவிட்டது என்று வெறுத்துப் பேசுகிறான்.

அவன் இப்போது 'நந்தா சாரிட்டீஸ்' என்ற தர்ம ஸ்தாபனத்தின் சோப்பு தொழிற் சாலையில் வேலையாக

இருக்கிறான். இந்த மாதத்தில் இருந்துதான் 'விற்பனை ஏஜண்டாக' நியமிக்கப்பட்டிருக்கிறானும். நந்தா என்ற அதன் ஸ்தாபகர்தான் அவனுக்குக் கருணை வள்ளலாக இருந்திருக்கிறார். அவருடைய குடும்பம் முழுவதுமே, மகன், மருமகள் எல்லோரும் அந்தத் தர்மப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்களாம். ஆஸ்பத்திரி, அநாதை விடுதி, ஏழை மாணவர்களுக்குப் படிக்க உதவி என்று இப்படி எத்தனையோ பணிகளை அவர்களுடைய ஸ்தாபனம் ஆற்றி வருகிறதாம். கொச்சியிலிருந்து ஆலப்புழை போகும் வழியாமே? அங்கேதான் அவர்களுடைய 'மக்கள் இல்லம்', கயிறு, பாய் முடையும் தொழிற்சாலை இவைகள் எல்லாம் இருக்கின்றனவாம். அவர்களுடைய தொழிற்சாலையின் மூலம் வரும் அத்தனை லாபமும் இந்த ஸ்தாபனத்துக்குத்தான் போகிறதாம்.

நீங்கள் ஆதரவு கொடுக்கமாட்டீர்கள் என்று தீர்ந்த பின்னும் அவனுக்குப் படிப்பை நிறுத்த இஷ்டமில்லையாம். எப்படியானும் முடித்துவிட வேண்டும் என்ற ஆசையில் ஜானகியின் வீட்டுக்குக்கூடப் போனானும். அவன் போயிருந்த சமயம் புருஷன்கூட இல்லையாம். முழுதும் முடியாவிட்டால் தற்கால சாந்திக்காகவேனும் அவளால் உதவியிருக்க முடியாதா? இல்லை, புருஷனிடம் சொல்லி ஏதானும் வேலைக்கேனும் சிபாரிசு செய்திருக்கக் கூடாதா? ஒன்றுமே வேண்டாம், நான் என்னடா செய்வேன் பாலு என்றிருக்கக் கூடாதா? அவள் லட்சியமே செய்யவில்லையாம். அவன் வீடு தேடி வந்திருக்கும் சமயம் முகம் கொடுத்துக்கூடப் பேசாமல் எங்கேயோ போனாளாம், வந்தாளாம். கடைசியில், இப்படி எல்லாம் நீ என்னை வந்து கேட்பது எனக்கு அவமானமாக இருக்கிறது. அவருக்குத் தெரிந்தால் என்ன நினைத்துக் கொள்ளுவார்? நீ இங்கு வந்ததே தெரிய வேண்டாம். குறையும் முடிக்க சக்தி இல்லாமல் ஏன் காலேஜில் சேர்த்தார்களாம்? என்று முகத்தில் அடித்தாற்போல் பேசி அவனைத் திருப்பி விட்டாளாம். பணம் வந்தால் உடன் பிறந்த பாசம்கூடப் போய் விடுமா? எனக்கும்தான் கேட்கவே அதிசயமாக இருக்கிறது. இந்தப் பட்டணத்துக்கு அவள் புருஷன்

ஆயிரம் நடை வருகிறான். நானே ஒரு தடவை 'பார்க்' ஸ்டேஷன் அருகில் பார்த்தேன். பார்த்தும்கூடப் பாரா தவனாகப் போய் விட்டான். 'ஜானகி சௌக்கியமா' என்று அருகில் போய்க் கேட்டு மானத்தை இழக்க எனக்குத் துணிவு இல்லை. நானாக அவனுக்கு நாலு கடிதம் எழுதினேன். ஒரு பதில் மரியாதைக்குக்கூடக் கிடையாது. நான் ஏழை; ஒட்டினால் அவனுக்கு அந்தஸ்து குறைந்து போகும் இல்லையா?

எப்படியோ அவனாக முன்னுக்கு வந்துவிட்டான். எப்போதுமே இந்த அத்தானிடம் அவன் கலகலப்பாகப் பேசிப் பழகுவான் இல்லையா? இப்போதும் அப்படியே தான் இருக்கிறான். பேச்சு வாக்கில் அவர் அவன் கல்யாண சம்பந்தமாகக்கூட விஷயத்தை விசாரித்து விட்டார். எங்கள் சீதாவை அவனுக்குக் கொடுக்கலாம் என்பது வெகு நாட்களாகவே எங்களுக்கு இருக்கும் எண்ணம். அதிர்ந்து பேசமாட்டாள். சகலவிதங்களிலும் குடும்பத்துக்கு ஏற்ற பெண். ஆனால் அவன், பேச்சு எடுத்ததுமே, 'அந்த விஷயத்தில் உங்களுடைய இஷ்டத் துக்கு ஒத்துவர இயலாமல் இருப்பதற்கு மன்னித்து விடுங்கள், அத்தான்' என்று கூறிவிட்டான். அவனுடைய உறுதியைப் பார்த்தால் ஏற்கனவே ஏதோ முடிவு செய்து வைத்திருக்கிறான் போல் தோன்றுகிறது. அவனாக முன் னுக்கு வந்திருக்கிறான், தனக்குப் பிடித்த பெண்ணாக, வாழ்க்கைக்கு ஏற்றவளாக அவனாகவே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் இல்லையா? இந்த நாட்களில் அநேகமாக இப்படித்தானே நடக்கிறது? உங்களுக்குத் தெரிவிக்க வேண்டாம் என்று அவன் சொல்லியும் மனம் கேட்கவில்லை எல்லாம் எழுதிவிட்டேன்.

இப்படிக்கு,
**விமலா.**"

செல்லத்துக்குக் கைகள் நடுங்கின. அவளுடைய நெஞ்சின் அடித்தளத்திலிருந்து ஒரு ஊற்று குபீரெனக் கிளம்பியது. அந்தப் பெருக்கிலே சொற்கள் திணறின. ஆதவனைக் கண்டதும் பனிப் போர்வை உருகித் துன்பம்

கரைய இன்பத்தை வரவேற்கும் நிலையிலுள்ள இயற்கை யன்னையைப்போல இருந்தாள் அந்த அன்னை.

" இதற்கா உங்களுக்குக் கோபம் வந்தது ?......"

" பின் சந்தோஷம் பொங்குமோ ? தானுக முன்னுக்கு வந்தானுமே, தானுக ? வாழ்க்கைக்குப் பிடித்தவளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவானும் ! அவன் சொல்லி இராத போனுல் விமலா எழுதியிருப்பாளா ? அந்தப் பெண் ஒரு போக்கு, இந்தப் பையன் ஒரு உதவாக்கரை. விட்டுத் தொலைக்க வேண்டியதுதான் !......"

" ஐயோ, அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். குழந்தை எத்தனை கஷ்டங்களோ பட்டிருக்கிறுன். அவன் எந்தப் பெண்ணைப் பிடித்துக் கல்யாணம் செய்து கொண்டாலும் நாம் சந்தோஷமாக ஒப்பவேண்டும். நானே போய் அவனைக் கேட்பேன்..." என்ற அவளை ரங்கநாதம் திகைப்புடன் நோக்கினுர்.

" செல்லம், உனக்கு என்ன, பித்துப் பிடித்து விட்டதா ?........"

" ஆமாம், பெற்ற மனம் தானே ?" என்றுள் கண்ணீர் பெருக அன்னை.

## 17

நிலமங்கை கருநீல ஆடையும் பசும் பொன்னணிகளும் பூண்டு நகைபுரியும் மேற்குக் கடற்கரைப் பக்கத்திலேதான் நந்தாவின் ' மக்கள் இல்லம் ' இருந்தது. அப்போது வைகாசி மாதம். மழை ஆரம்பித்து இன்னும் பலமாக வில்லை. ஒருநாள் தூற்றல் விழுவதும் இரண்டு நாட்கள் காய்வதுமாக இருந்தது. கடும் கோபக் கிரணங்களை விடுத்துப் பொன்னிறம் கொண்டு, தாபமுற்ற நிலமங்கை யின் மேனியைத் தழுவி ஆதவன் ஜாலம் செய்யும் வேளை.

அவனுடைய பொன்னிறத்திலே கருநீல உப்பங்கழி இரு வண்ணம் பெற்று ஒளிர்ந்தது. கரையிலே இல்லத்துச்

சிறுவர் சிறுமியர் ஆடிக்களித்தனர். அவர்களுக்குள் சாதி சமூக்குக் கிடையாது. ஏழை பணக்காரர் என்ற வேற்றுமையில்லை. இவைகளை அந்த இளம் உள்ளங் களில் கற்பிப்பவரும் எவரும் கிடையாது.

அவர்கள் கபடமற்றுச் சிரித்து விளையாடினார்கள்; சிறு படகுகள் தள்ளிக் களித்தார்கள்; மணல் வீடுகள் கட்டி மகிழ்ந்தார்கள். அவர்களுடைய கள்ளமற்ற ஆர வாரத்தின் ஒலி முடிவில்லாததுபோல் கரையோரத்தில் நீண்டு விரிந்து இருந்த தென்னைமரச் சூழலில் இனிமை யாக ஒலித்தது. கரையோரம் குறுக்காக விழுந்திருந்த தென்னைமரம் ஒன்றில் பாலு உட்கார்ந்திருந்தான். கண் ணுக்கு இனிய காட்சி. மனசிலே குழப்பமில்லாத நிலை. கையிலே மணிக்கவிதைத் தொகுதி ஒன்று. அவன் ஏதோ தளையிலிருந்து விடுபட்டவன் போல் கையிலிருந்த புத்தகத்தில் மூழ்கி இருந்தான். பரீட்சைக்கு என்று தேநீரைக் குடித்துக்கொண்டு விளக்கை எரித்துக்கொண்டு விழுந்து விழுந்து படித்த போதெல்லாம் காணாத இன் பத்தை இப்போது அவன் கண்டான். அப்போதெல்லாம் மனசிலே பதியாத பொருள் இப்போது தெளிவாகத் துலங்கியது.

பரீட்சை, படித்துத் தேறவேண்டும், ஆண்டுகளை விழுங்கிப் பட்டத்தை வாங்க வேண்டும் என்ற பரபரப்பில், நிர்ப்பந்தத்தில் ஏதோ அவசர வேலையை முடிப்பது போல் புத்தகங்களை உருப்போடுவதில் இன்பமோ, பயனோ ஏது? குறுகிய வாயுள்ள ஜாடிக்குள் சாமானை அள்ளிப் போடும் போது கீழே விழுந்த அளவு விழும், உள்ளே சென்ற அளவு செல்லும், அவ்வளவுதான். அவன் பட்டம் பெறு வதற்காகப் படித்த பல விஷயங்களில் இப்போது அவனுக்கு நினைவில் தங்கி இருப்பவை மிகச் சில. கலை யிலே, கவிதையிலே, இலக்கியத்திலே அவன் உண்மை யான ஆர்வம் கொண்டு அந்த வேகத்தில் கலாசாலையைத் தேடிப் போயிருக்கவில்லை. அந்த ஆர்வம் இந்தச் சுதந்திர நிலையில்தான் அவனுக்கு எழும்பியது. மனம எவ்விதத் தளையுமின்றி இருக்கும்போதே கவிதையின் இன்பத்தை,

பேரறிஞர்களின் மணி மொழிகளில் பதிந்து கிடக்கும் பொருட் செறிவை உணர்ந்து அநுபவிக்கக் கூடியதாக இருக்கிறது.

"பேப்பர் இந்தாங்க ஸார்!..."

பாலு நிமிர்ந்தான். ஒரு குட்டிப்படகிலே, சின்னஞ் சிறு பாலகன் ஒருவன் அன்றைய செய்தித் தாளுடன் அவனை நோக்கிச் சிரித்துக்கொண்டு விசுக் விசுக்கென்று துடுப்பைப் போட்டு விரைந்து வந்துகொண்டிருந்தான். கொஞ்ச தூரத்திலே 'சிச்சிச்' சென்ற சத்தத்துடன் நீரைக் கிழித்துக்கொண்டு ஒரு நீராவிப் படகு போய்க்கொண்டிருந்தது. அந்தப் படகிலேதான் செய்தித்தாள் வரும். பாலுவுக்குடையதை, அவன் அங்கிருந்தே அந்தப் பாலகனிடம் கொடுத்து அனுப்பி இருக்கிறான்.

புன்னகையுடன் பாலு செய்தித்தாளைக் கையில் வாங்கும்போது கரையோரத்தில் கணகணவென்ற மணிச்சத்தம் ஒலித்தது. அந்தி மங்கும் வேளையாயிற்றே? பிரார்த்தனை நேரமல்லவா? கூட்டம் கூட்டமாகக் கூடுதிரும்பும் பறவைகளைப்போல் குழந்தைகள் விளையாட்டிலிருந்து பிரிந்து ஓடினார்கள். சிறு படகுகள் எல்லாம் உப்பங்கழியிலிருந்து பிரிந்து உள்ளே செல்லும் கால்வாயில் கொண்டு நிறுத்தப் பட்டன.

வெளிச்சம் மங்கிவிட்டது என்றாலும் செய்தித்தாளைப் பிரித்து பாலு தலைப்புகளை மட்டும் பார்த்தான். ஓரிடத்தில் காணப்பட்ட தலைப்பு அவனுடைய விழிகளை அப்படியே தடுத்து நிறுத்தியது.

"வேலையற்ற பட்டதாரியின் தற்கொலை. முருகூருக்கருகில் தண்டவாளத்தில் விழுந்து மாண்டான்.

"குமரேசன் என்ற இளைஞன் நேற்று காலை 3-45 மணிக்கு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வருகையில் முருகூருக்கருகில் தண்டவாளத்தில் விழுந்து உயிர் நீத்தான். குமரேசன் பி. ஏ. பட்டம் பெற்று இரண்டாண்டுகளாக வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருந்ததாகவும்,

குடும்பத்தைக் காப்பாற்ற இயலாத வறுமை நிலையில் மன மொடிந்து உயிரை விட்டதாகவும் அவனுடைய சட்டைப் பையில் இருந்த கடிதமூலம் தெரியவருகிறது......"

இந்தவிதமாக அந்தச் செய்தி ஓடியது.

பாலுவின் மலர்ந்த முகம் வேதனையை எடுத்துக் காட்டியது.

பி. ஏ. பட்டம் கலை பயின்ற பட்டதாரி!

இந்தப் பட்டத்துக்காக அவனைப்போல் அந்த துரதிர்ஷ்ட வாலிபனும் எத்தனை கஷ்டப்பட்டானோ?

இரண்டு வருஷங்களுக்குமுன் பாலுவும் அந்தக் குமரேசனின் நிலையில்தான் இருந்தான். ஒரு நோக்கு இல்லாமல் வெறுப்பும் நிராசையும் உந்த அவன் நீராவிப்படகு ஒன்றில் ஏறி உட்கார்ந்து பிரயாணம் செய்கையில், அதே கால்வாயில் குதித்து உயிரை விட்டுவிடலாம் என்ற எண்ணம்தான் அவன் மனசில் நிரம்பி இருந்தது. கருணை வள்ளலான நந்தா அப்போது அவனருகில் படகில் பிரயாணம் செய்யவந்து உட்காராத போனல், அவனும் குமரேசனைப்போல் தன் உயிரை முடித்துக்கொண்டிருப்பான். அவர் அவனுடைய வாடி மெலிந்த தோற்றத்தைக்கண்டு இளகிப் பேச்சுக் கொடுத்தார். தெய்வமே மனித உருவில் வந்ததுபோல் அவனைத் தடுத்தாட் கொண்டார்.

ஆனல் அப்போதும் அவனுக்கு அந்தப் பட்டத்தில் மோகம் குறைந்திருக்கவில்லை. அவருடைய உதவி கொண்டு அதை முடித்தபின்தான் அதன்மூலம் தான் எவ்வாறு பயனடைகிறோம் என்பதை உணரமுடிந்தது. உண்மையில் இப்போது அவன் செய்யும் உத்தியோகத்துக்கு அந்தப் பட்டம் வேண்டிய அவசியமே இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை! கல்வி அறிவின் வளர்ச்சிக்குத் தேவை. அந்த அறிவு வாழ்க்கையை மேம்பட்டு வளமுறச் செய்வதற்கு இணைந்ததாக இருக்கவேண்டும் என்பதை அவன் அப்போது உணர்ந்து படித்தானா? நந்தாவின் உதவி இல்லாமல் அவன் பி. ஏ. பட்டத்தை வாங்கி

இருந்தாலும் அவன் இன்னும் வாழத்தெரியாத கோழை யாகத்தான் அலைந்து கொண்டிருப்பான்!

ஆனால் எல்லாம் நன்மைக்கே என்று சொல்லுவது போல, அந்தப் பட்ட மோகம் இல்லாதபோனால் அவன் அத்தனை கஷ்டங்களையும் சிறுமைகளையும் அடைந்திருக்க மாட்டான். அவற்றின் அநுபவமில்லாமல் உலகை இத் தனை அளவு அவனால் தெரிந்து கொண்டிருக்க முடியாது!

தாய், தந்தை, சுற்றம், நட்பு எல்லாம் பணம் என்ற விசையிலேதான் அன்பாக மலருகிறது. பெற்றோரின் அன்பு, சகோதர வாஞ்சை எல்லாவற்றையும் புத்தகத்தில் படிப்பதுபோல் வாழ்க்கையில் காணமுடிவதில்லை! அவ னுக்கு ஆதரவாக அவனுடைய பெற்றோர் என்ன வழி காட்டினார்கள்? உலக அரங்கிலே வழி தெரியாமல் அலையும் துரும்பு போன்றவன்தானே அவன் அப்போது? தங்கள் கடமையை மறந்து கசப்பை அல்லவோ காட்டினார்கள்? சகோதரி...! அவள் ஒரேயடியாக அப்படி எப்படி மாறி னாள் என்பதுதான் பாலுவுக்கு இன்னமும் வியப்பாக இருந்தது.

மக்களிடையே இலக்கியங்களில் காணப்படும் உண்மை அன்பு மலர்வது எப்போது? பணச்செருக்கு, போலி கௌர வம், வெளிப்பகட்டு, உதட்டுப்பேச்சு எல்லாம் ஒழிந்து மனிதத்தன்மை மாறாதவர்களாக ஆவது எப்போது? சற்றுமுன் அங்கு விளையாடிய குழந்தைகளைப்போல் எல் லோரும் மாறுவது எப்போது?......அப்படி ஒருநாள் வருமா? அதிலும் பெண், வித்தியாசங்களை அதிகமாகப் பிஞ்சு உள்ளங்களில் விதைத்து நோகச் செய்கிறாளே, அவள் திருந்தும் நாள் வருமா? மீனாவைப் போன்ற, ஜான கியைப்போன்ற, வீண் செருக்குற்ற பெண்கள் உண்மை யிலே குடும்பங்களின் அணிகலன்களாகத் திகழும் நாள் வருமா?

பாலு கையிலே விரித்த செய்தித்தாளுடன் நீரைப் பார்த்துக்கொண்டே இருந்தான். தங்கநிறக் கதிரவன், செஞ்ஜோதியாகி எதிரே தெரிந்த தென்னைமரங்களுக் கப்பால் ஆழ்கடலில் அமிழ்ந்துபோனான்.

" தனியே உட்கார்ந்திருக்கிருய் போலிருக்கிறது ?... பாலு ?" என்று கேட்டுக்கொண்டு இளம் நந்தா வந்தான்.

மங்களூர்ப் பக்கத்து மக்களுக்கே உரித்தான நிறம். ஒளி நிறைந்த கண்களிலே தவழும் அமைதியான பார்வை. உதட்டிலே எப்போதும் மங்காத அன்பைக் காட்டும் நகை. வேறுபாடில்லா அன்புலகைச் சமைக்கும் இளைஞர் பிரதிநிதிகளில் ஒருவனுக பாலுவுக்கு அவன் தோன்றிஞன்.

எழுந்து நின்ற பாலு மெல்ல நகைத்து, " இந்த நாட்களில் நான் தனியே இருப்பது போலவே உணருவதில்லை" என்ருன்.

" ஓகோ ?" என்று நந்தாவைப் பின்தொடர்ந்துவந்த ஹேமா கேட்டுக் கேலியாக நகைத்தாள்.

" நான் நினைத்தேன், அப்படியானுல் இங்கே அவள் எப்போது வரப்போகிருள் ?..."

" அவ்ளா ? யார் ஹேமா ?" என்று புரியாமல் கேட்டான் நந்தா.

" யார் என்ருல், அவள்தான் ! அவரைக் கேளுங்கள் !" என்று ஹேமா பின்னும் நகைத்தாள்.

பாலுவின் உடலில் புது ரத்தம் பாய்ந்து ஓடுவதுபோல் இருந்தது.

அவள்...!

" அட ? என்னிடம் சொல்லவே யில்லையே ? உனக்கு எப்படித் தெரிந்தது, ஹேமா ?"

" அவரேதான் இந்நாட்களில் தனியே இருப்பதாக உணருவதில்லை என்ருரே ? இதைக்கூட அறிவது கஷ்டமா ?..."

அவர்களுடைய சிரிப்பின் ஒலி சுதாவின் கானத்தை நினைப்பூட்டியது அவனுக்கு.

"ஹேமா சொல்வது நிசம்தானா, பாலு?..."

பாலுவும் முறுவலித்தான். "இல்லை, நான் இங்கு வருவதற்குமுன் இருந்த உலகம் வேறு. அந்த உலகில் மனிதர்கள் என்னை நிறையச் சூழ்ந்திருந்தார்கள். ஆனாலும் எப்போதும் அநாதரவாக இருப்பது போல் தனிமையை உணர்ந்தேன். இங்கு தனிமையிலும் அவ்விதம் தோன்றவில்லை. மனித இனத்தில் தேய்ந்துவரும் அன்பைப் பாதுகாக்க முடியும் என்று நம்பிக்கையுடன் முயலும் நீங்கள் இருக்கையில்......நான் வேறு என்ன சொல்லுவேன்?..."

அவன் குரல் நெகிழ்ந்தது.

"இவர் என்ன சொல்லுகிறார்?" என்று கேட்டாள் அந்தப் பாவை.

"அதுதான் எனக்கும் புரியவில்லை, ஹேமா!" என்று அவளுடன் சேர்ந்து அவள் கணவனும் நகைத்தான்.

"உங்களுக்குப் புரியாவிட்டால் வேண்டாம், பிறருக்குப் புரிய வைக்கிறீர்கள்!" என்றான் பாலு.

வானிலே எண்ணற்ற விண்மீன்கள் சுடரிட்டன. அவைகளின் நடுவே வெள்ளி ஓடம் கம்பீரமாக மிதந்தது பாலு அந்த அன்புத் தம்பதிகளுடன் பேசிவிட்டுத் தன் விடுதியை நோக்கி நடந்தான். அவனுடைய மனசிலே அன்று நிறைவு இருந்தது. சுதாவின் அழகிய முகம் அங்கே தோன்றித் தோன்றி மறைந்தது. அவள் அவனுடையவளாக, என்றென்றும் அவனுக்குச் சொந்தமானவளாக ஆவாளா? இந்த நந்தா தம்பதிகளைப் போல அவர்களும் அன்புக்காக வாழ்ந்து வேற்றுமையில்லாத புது உலகைச் சிருஷ்டி செய்யும் பணியில் ஈடுபட முடியுமா? இன்றையக் குழந்தைகளே நாளைய உலகை உருவாக்கும் சிற்பிகள். அந்தப் பளிங்கு உள்ளங்களிலே இன்று பதியும் எண்ணங்களே நாளை அவர்களை உருவாக்குகின்றன. எனவே அந்தப் பிஞ்சுப் பாலர்களிடையே அன்பை விதைத்து நன்மையைப் பரப்பும் பணிக்கு அவளும் தன் நாட்களை அவனுடன் அர்ப்பணிப்பாளா?

அன்று அவன் கண்ட நிலையில் இன்று அவள் இல்லை. திரைச் சங்கீதம் அவளைப் புகழேணியின் உச்சிக்கு வழி காட்டிவிட்டது. திரண்ட பொருளையும் அவள் தேடியிருப்பாள். என்றாலும் அவளுடைய உள்ளம் அன்றுபோலவே இருக்கும் என்று அவன் நம்பினான்.

தன்னிடம் உள்ள தெய்வீகக் கலையைக் காசுக்குள் கட்டுப்படுத்த அவள் விரும்பவில்லை; அது அவனுக்கு நன்றாகத் தெரியும். அவள் கூண்டுப் பறவை. சுதந்திரத்துக்காக ஏங்கித் தவிக்கும் நிலையில் இரும்புக் கம்பிகளுக்குள்ளிருந்து பேசும் கிளியைப்போல் அவள் கானம் செய்கிறாள். அந்தக் கிளியைப் பார்த்து நிற்கும் கழுகுக் கண்கள் பல உள்ளன என்ற உண்மை அவன் மனசிலே தீவிரமாகப் பதிந்திருந்தது. அவளை விடுவிக்கும் நிலையைத் தான் எப்படியேனும் அடையவேண்டும் என்ற ஆர்வமே அவனை ஓய்ந்து விடாதபடி கைகொடுத்தது என்றுகூடச் சொல்லலாம். இன்று அவன் சுயமாகத் தேடித் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்பவன் மட்டுமல்ல. தன் நிழலில் அவளுக்கு ஆதரவு தர அவனுக்குச் சக்தி உண்டு.

அவளுடைய உள்ளம் அன்றுபோலவே இன்றும் இருக்கும் என்று அவன் நம்புவதற்கு இன்னும் ஒரு காரணம் உண்டு. மண்ணுக்குள்ளே மறைந்து கிடக்கும் புதைபொருளைப்போல அது அவனுடைய உள்ளத்தின் ஆழத்திலே இருந்தது.

ஹேமா அதை வெளியிடும் பாவத்தில்தான் 'அவளா' என்று கேட்டாளோ என்று கூட அவன் நினைத்தான். ஆண்களைவிடப் பெண்கள் ரகசியங்களை மூடிவைக்கும் திறமை குறைந்தவர்கள் என்பதே பாலுவின் எண்ணம். மனிதர்கள் வாழ்க்கைக்கென்று காசை மதியாமல் காசுக்காக வாழ்க்கையை மதிக்கும் இந்நாளில், சிறகில்லாத பட்சியின் நிலையில் தவித்த அவன்மேல் அவர் அத்தனை கருணை கொள்ளக் காரணம் என்ன? அவருடைய இயல்பான அன்பு உணர்ச்சி மட்டும்தானா?

முதலில் பாலு அப்படித்தான் நம்பினான். ஆனால் அவர் காட்டிய அன்பு அவனைத் திகைக்கச் செய்தது.

அவன் பிழைக்க வழியறியாமல் தவிக்கும் எத்தனையோ படித்த இளைஞர்களில் ஒருவன்தான். அவனிடம் வேறு எந்த விசேஷமும் இருக்கவில்லை. அவர் தம்முடைய அன்பினால், அவனுக்குத் தம் ஸ்தாபனங்களில் ஒன்றில் ஏதேனும் வேலை கொடுத்துக் காப்பாற்றியிருக்கலாம். அத்துடன் நின்றிருந்தால் பாலுவுக்குச் சந்தேகம் தோன்றாது. ஆனால் அவர் அவன் எதிர்பார்த்ததற்குமேல் விசேஷ சிரத்தை காட்டினார். அவன் அரைகுறையாக விட்டிருந்த படிப்பைப் பூர்த்தி செய்ய விரும்புவதை அறிந்தார். அவன் படிக்க உதவினார். வேலையும் தந்தார். இத்தனைக்கும் காரணம் இயல்பாகவே அவரிடமிருந்த இரக்கமும் அன்பும் மட்டும்தானா ?

'இல்லை' என்று அவனுடைய உள்மனம் கூறியது. தன் மனம்விட்டுப் பெரிய நந்தாவிடம் அவன் எத்தனையோ முறைகள் நன்றியைத் தெரிவித்திருக்கிறான். அவர் பதிலுக்குச் சிரித்துவிட்டுப் போய்விடுவார். அந்தச் சிரிப்பில் ஏதோ ஒளிந்திருப்பதுபோல் அவனுக்குத் தோன்றும். ஒரு எண்ணம் மனசிலே எப்படியோ விழுந்து ஊறிவிட்டால் அதற்கேற்ப ஒரு சிறு வாய்ப்புக் கிடைத்தாலும் முளைவிட்டு வளர்ந்து விடுகிறது.

தன்னுடைய கஷ்டங்களுக்கெல்லாம் தெய்வாதீனமாக இப்படி ஒரு ஆனந்த விடுதலை வரும் என்று அவன் சிறிதும் எண்ணியிருக்கவில்லை. பல சமயங்களில் அவன் இது கதையோ, வாழ்க்கையோ என்று பிரமையடைந்து இருக்கிறான். அப்படி அவன் பிரமையடைந்து நம்புவதற்கேதுவாக அவனுக்கு அந்த வருஷம் துணைப்பாடமாக இருந்த கதைப் புத்தகம் அமைந்திருந்தது. அந்தக் கதைக்கும், அவனுடைய வாழ்க்கையில் நேர்ந்திருக்கும் சம்பவங்கள் எதற்கும் ஏதும் நெருங்கிய தொடர்பு இல்லாதபோனாலும், தான் யூகிப்பது சரியே என்று அவன் சந்தேகத்தை உறுதியாக்கக் காரணமாக இருந்தது. பிரபல ஆங்கில ஆசிரியர் ஒருவர் எழுதிய நாவல் அது. அதில் வரும் கதாநாயகனுக்கு எதிர்பாராத விதமாகத்தான் திடீர் அதிர்ஷ்டம் அடிக்கிறது. அவன் தாய் தந்தையற்ற சிறுவனாக இருக்கையிலேயே அவன் யாரென்று அறிந்து

கொள்ளாத வண்ணம் மறைவிலிருந்து ஒருவர் அவனுக்குக் கல்வியும் செல்வமும் அளித்து அவன் மனிதனுக ஆவதில் சிரத்தைகாட்டுகிருர். பையன் குறிப்பிட்ட ஒருவரையே மனசில் வைத்து அவர் உதவிதான் என்று எண்ணியிருக்க, அவன் சற்றும் எதிர்பாராத இடத்திலிருந்து அந்தச் செல்வமும் அன்பும் கிடைத்திருக்கிறது. இந்த உண்மை தெரியவரும்போது அவன் உள்ளமுருகி விடுகிருன்.

பாலு இந்தக் கதையில் மூழ்கிப்போஞன். உண்மையில் அவனுக்கு வந்திருக்கும் உதவியும் இப்படி மறைமுகமாகத் தூண்டப்பெற்று வந்திருக்கலாம் அல்லவா? இல்லாவிட்டால், கலாசாலைகளில் படிக்கும் எத்தனையோ ஏழை மாணவர்களுக்கு 'நந்தா' உபகாரச் சம்பளம் வழங்கப்படுகிறது என்ருலும் அதற்குரிய பரீட்சை தேறவேண்டும்; மேலும் பாதியில்தான் அவன் உதவி பெறுகிருன். மாதா மாதம் நந்தாவிடமிருந்து • தனியாக வன்ருே அவனுக்குப் பணம் வந்தது? அது எப்படி? நந்தா குடும்பத்தினர் அவனிடம் நெருங்கி விசுவாசம் காட்டுவானேன்? குடும்பத்தில் ஒருவன் போலல்லவோ அவன் கருதப்படுகிருன்?

அவனுக்கு வேண்டியவராக, அவன் நலனில் மிகுந்த சிரத்தை கொள்ளக்கூடியவராக இந்த உலகில் அவன் யாரை நினைக்கப்போகிருன்? தாய், தந்தை, சகோதரி முதலிய அவனைச்சேர்ந்த பந்துக்கள்தாம் அவனை நேரிலேயே விரட்டிவிட்டார்களே? பின் வேறு யாராக இருக்க முடியும்?

அவள், அவளாகத்தான் இருக்கவேண்டும்!

பெரிய நந்தா இன்னுரைத்தான் அறிவார், இனனுரை அறியமாட்டார் என்று சொல்லமுடியுமா? பகிரங்கமாக சுதாவால் அவனுக்கு எப்படி உதவிசெய்ய முடியும்?...... எனவே அவள்தான் மறைமுகமாக அவனைக் கண் காணித்து வரவேண்டும்!

நாடகத்தின் காட்சிகளும் ஜோடனைகளும் நடிகர்களும் அற்புதமாக இருந்தபோதிலும் திரை தூக்குபவனின்

ஒத்துழைப்பு இன்றி அவை உயிர்பெற முடியாது. அப்படி அவனுடைய முன்னேற்றத்தில் சிரத்தை கொண்ட ஒருவர் உண்டு...... அது......சுதாவாகத்தான் இருக்கவேண்டும்! ஹேமா இதைக் கருத்தில் வைத்துத்தான் அவனிடம் கேலியாகக் கேட்டு இருக்கிருள்.

இந்த முடிவுக்கு வந்ததும் அவனுடைய உள்ளம் சுதாவை நோக்கித் தாவியது. அவனுடைய மனக்கண் முன் அவள் நின்ருள். பெருமிதமும், பூரிப்பும், நன்றியுணர்ச்சியும் அவனுடைய விழிகளில் போட்டி யிட்டன. 'சுதா...!' என்ற சொல்லிலே அவன் கரைந்து போனன்.

டாண் டாண் என்று மாதாகோயிலின் மணி கம்பீரமாக ஒலித்தது.

## 18

வளைந்து வளைந்து மலைப்பாதையில் வண்டி சென்று கொண்டிருந்தது. அப்போது ஆவணி மாதத் துவக்கம். வானத்திலே அற்புத நாடகங்கள் நடக்கும் காலம் அது. கார் மேகங்கள் மத யானைகள் போல ஒன்ருேடொன்று மோதிப்பிளிறும். வானம் பொழியும். அடுத்து திரைப் படத்திலே காட்சிகள் மாறுவதுபோல் வானத்தில் கதிரவன் புன்முறுவல் செய்வான். பஞ்சுக் குவியல்கள் போன்று மேகக் குழந்தைகள் வான் திரையில் ஓடி ஓடிக் கண்ணுமூச்சி ஆடும். இயற்கையும் அங்கு வானம் செய்யும் ஜாலங்களுக்கு இணையக் காட்சி தருவாள். பாலுவுக்கு அந்தப் பாதையும் அவன் செல்லும் இடமும் புத்தம் புதியதல்ல. ஏற்கனவே போய்ப் பழகி இருந்த இடம்தான். ஆனலும் அன்று அவனுக்கு அந்தப் பிரதேசம் என்றுமிலாதவகையில் மனசைப் பரவசப்படுத்துவதாக இருந்தது. பாதைக்குக் கீழும் மேலும் அடர்ந்து இருந்த மரங்களும் செடி கொடிகளும் பசுமையுடன் சிலிர்த்து நகை செய்வன போல் தோன்றியது.

'சர்......கிர்...' என்ற ரீங்காரத்தை எழுப்பிக்கொண்டு வண்டி மலைகளைச் சுற்றிச் சுற்றி ஏறியது. பாலுவுக்கு

இன்பமலையின் சிகரம் ஒன்றுக்கு சுகமாகக் கொண்டு செல்லப்படுவது போலிருந்தது.

ஆயிற்று, இன்னும் சற்று நேரம்தான். மணி ஒன்பதரை, பத்து......பத்தரை......அவனுடைய இருதயத் துடிப்புடன் கடிகாரத் துடிப்பு போட்டி போட முடியாது போலிருந்தது. வறண்ட உள்ளங்களிலும் பசுமையைச் சொரியும் அழகிய மலைப் பிரதேசம். அங்கே .........அவள், அந்தச் சந்திப்போ ?

காய்ந்து வெடிக்கும் நிலையிலுள்ள நிலம் ; விசும்பில் மிதக்கும் கனத்த மேகங்கள் ; சிலிர்க்கும் காற்று வீசுகிறது ; அமுதம் பொழியும் ; வறண்ட பூமியும் குளிரப் போகிறது !

உம்...இல்லை. அது சரியில்லை. அவனுடைய உள்ளம் அவளை எண்ணி வறண்ட நிலையிலா இருந்தது ?...... இல்லை. அவளைப் பற்றிய நினைவில் இது நாள் வரை ஏக்கம் மட்டும் தோய்ந்திருந்தது. ஆனால் இப்போதோ ?

உலகிலே அவனுக்கு அவள் ஒருத்திதான் ஒளி. அவன் அறியாதவாறு அவனுடைய வாழ்க்கையில் அமுதத்தை வார்க்கும் மழை. மறைந்து இருந்து அவன் நலத்தை இதுநாள் கண்டு மகிழும் அவள் வானம். ஒளியும் மழையும் தரும் வானம் இன்றி செடிக்கு ஏது பசுமை ? பாலுவின் மனம் இந்த விதமான கற்பனைகளில் மூழ்கித் திளைக்கையிலேயே 'நந்தா சாரிட்டீஸ்' வண்டி 'ஹோட்டல் நீலமலை'யின் வாசலில் வந்து நின்றது. "தூற்றல் ஸார்......அப்பாடா, சிலுசிலுவென்று என்ன குளிர் ?" என்று வண்டியோட்டுபவனின் குரல் கேட்டபின் தான் சுய நினைவுக்குவந்து பாலு இறங்கினான். வாசலிலே—

'பிரதம மந்திரியின் உதவி நிதிக்காக உதவும் இன்னிசைக் கச்சேரி. கானக்குயில் குமாரி சுநந்தா அண்டு பார்ட்டியாரால்......' என்ற கொட்டை எழுத்துக்களுடன் காணப்பட்ட விளம்பர அட்டை வருகிறவர், போகிறவர்களின் கவனத்தை ஈர்த்துக் கொண்டிருந்தது. அவன் ஹோட்டலுக்குள் நுழைந்தான். 'கௌண்ட'ரில் குமாரி

சுநந்தாவின் சங்கீதக் கச்சேரிக்கு டிக்கெட்டுகள் விற்பனை யாகிக் கொண்டிருந்தன.

"என்றைக்கு ஸார் வர்ருங்க?"

"நாளைக்குத்தான் காலமே வர்ருங்க... இந்தப் பாழாய்ப் போகிற மழை நாளைக்குப் பிடிச்சுக்கிடாம இருக்கணுமே?..."

"பாழாய்ப் போகிற மழை யின்னு வையாதீங்கய்யா, அது தான் அமிழ்தம் என்கிறுர் வள்ளுவர்!"

"குமாரி சுநந்தாவின் பாட்டுக்கு முன்பு அது அமிழ்த மாகாது. வள்ளுவர் அவுங்க பாட்டைக் கேட்டிருந்தால் வேறு விதமாகச் சொல்லி இருப்பார்!"

வள்ளுவரைச் சந்தியில் இழுக்கும் இந்த ரசிக கோஷ்டியின் சிரிப்பொலி பாலுவின் முகத்தை விளக்கெண்ணெய் விழுங்குபவனைப் போல் ஆக்கியது.

"ஏன் பிரதர்? குமாரி சுநந்தா முதல் தடவையாகத் திரையிலும் வரப் போகிருங்களாமே? நட்சத்திர வானிலே போட்டிருக்குதே? திரைக்கேற்ற உருவம் தானு?..."

"திரைக்கேற்ற உருவம் தானுவா? நீங்க பார்த்த தில்லையா? கச்சேரி மேடையிலே வந்து உட்கார்ந்தால் சபையிலுள்ள விளக்குகள் மங்கிப்போகும்; இந்த மாதிரி ஒரு உருவத்தைத் திரைக்குக் கொண்டுவந்தால் திரை உலகுக்கே புது ஒளி வந்திடுமே? ஆனுல் இதுநாள் வரை ஏன் முன் வரலேன்னுதான் தெரியலே..."

பாலு விடுவிடென்று தன் அறையைத் தேடிச் சென்ருன். உடல் சிலிர்க்கும் மலைச் சாரலிலும் அன்று முழுதும் அவனுக்கு எதிலும் நிலை கொள்ளவில்லை. படுக்கையிலும் இருப்பாக இல்லை; வேலையிலும் மனமில்லை; கவிதை, காட்சி என்றும் பற்றிருக்கவில்லை.

மறுநாள் பொழுது புலர்ந்தது. அறையின் ஜன்னல் திரையை விலக்கிவிட்டு மழைதானு, வெயில் வருமா என்று பார்ப்பவனைப்போல் பாலு வெளியே பார்த்தான்.

சாரலும் தூற்றலும் நிற்கவே இல்லை. ஹோட்டலுக்குக் கீழே உள்ள பள்ளத்தில் சாக்கு, கம்பளித் துண்டுகள் ஆகியவற்றால் உடலை மூடிக்கொண்டு மண்ணின் செல்வ மைந்தர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். குன்றைச் சுற்றிச் சரிவிலே இருந்த உருளைக்கிழங்கு வயல்கள், பூமி தேவிக்கு வரிவரியாகக் கோடிட்ட பச்சைப் பாவாடை உடுத்தி அழகு செய்தாற் போலிருந்தன. பச்சைப் பாவாடை என்ற நினைவு தோன்றியதுதான் தாமதம். அந்தப் பச்சைப் பாவாடை அழகி அவனுடைய நெஞ்சில் நிறைந்துவிட்டாள்.

அன்று நடக்கப்போகும் கச்சேரிக்கு அவன் செல்லுவதாக இல்லை. மேடையின்மீது அமர்ந்து அவள் பாடி ரசிகக் கும்பலை மகிழ்விக்கும் காட்சியைத்தான் முன்பே அவன் பார்த்துவிட்டானே? அந்தக் கச்சேரியே கடைசிக் கச்சேரியாக இருக்குமோ என்னமோ, ஒருவேளை!

அவனை அங்கு கண்டவுடன் அவளுடைய விரிந்த நயனங்கள் அசையாமல் நிலைத்துவிடும். அதில் அன்பு அதிகமாகுமா, சோகம் அதிகமாகுமா, வியப்பு மிஞ்சுமா என்பதை எப்படிச் சொல்ல முடியும்? அவளைப் பொது வாழ்விலிருந்து ஒரேயடியாக மறைத்துவிட வேண்டும் என்ற குறுகிய மனப்பான்மை யுடையவன் அல்ல அவன். ஆனால், கலை, கலை என்று போலிவேடம் பூண்டு கீழ்த்தரமான நோக்குடன் சபையை நிறைக்கும் மக்களிடையே அவளுடைய சங்கீதத்தை விற்க வரக்கூடாது. மேடைக் கச்சேரிக்காக, புகழுக்காக, பொருளுக்காக என்ற குறிகள் இல்லாது விடுதலையுடன் வளர்ந்தால் சுதாவின் சங்கீதம் இன்னும் இனிமை பயக்கக்கூடியதாக சோபிக்கும் என்பதில் என்ன சந்தேகம்? அங்கே, தூய்மை நிறைந்த உள்ளங்களுக்கு மத்தியிலே, தென்னைமரச் சூழலின் இனிய சலசலப்புக்கிடையே அவனுடைய சுதாவின் இன்பகீதம் கேட்பவர்களின் ஆத்மாவை லயிக்கச் செய்யும். கருநீல உப்பங்கழியிலே சிறு படகிலே செல்லும்போது, அவளுடைய மதுரகீதம் மென்காற்றின் அலைகளூடே சென்று மோனத்தில் கலக்கும். அவளிடமிருக்கும் கலை வியாபாரச்

சரக்கல்ல. சங்கீதம் தரம் மலிந்து வியாபாரச் சரக்காகி அவளையே விழுங்கி விடாதபடி அவன் மீட்க வேண்டும். அது அவன் கடமை. அன்புப் பணி. அந்த நேரம் நெருங்கிவிட்டது.

பாலு பார்த்துக்கொண்டே இருந்தான். மாடி முகப்பி லிருந்து கொண்டு அவன் கீழே வைத்த விழிகளை எடுக் காமல் இருக்கையிலேயே முன்னும் பின்னும் ஒரே அளவில் நீண்ட வடிவமுடைய சிவப்பு வர்ண வண்டி ஒன்று சரிவான பாதையில் வந்தது. ஹோட்டல் வாசலில் வந்து நின்றது. கதவு திறந்து 'பங்' கென்று அடிபடும் ஓசை கேட்டது. ஹோட்டல் வாசலிலேயே அவளை வரவேற்கச் சில ரசிகர்கள் நின்றனர். அத்தனை பற்களும் தெரிந்தன. எல்லோருக்கும் ஒரே புன்னகை, ஒரே கைகுவிப்பு.

அந்த மாடியில் கலகலப்பு நிறைந்தது. வந்து போகும் ஜோடுகளின் ஓசை, சிரிப்பின் ஒலி, பேச்சுச் சத்தம், எல்லாவற்றிலும் அவளுடைய உயிர்த் துடிப்பு கலந்திருந் ததுபோல் இருந்தது.

அவன் தன்னுடைய அறையினின்றும் வெளியே வந்து அவளை நேருக்குநேர் பார்க்கவில்லை. உதட்டிலே புன்னகையும் உள்ளத்தே தகாத எண்ணமும் கொண்ட போலி கோஷ்டியைச் சேர்ந்தவனா அவன்? அவளை அவன் தனியே அன்றோ சந்திக்க வேண்டும்?

இத்தனை நாட்கள் பொறுத்திருந்தவனால் இன்னும் ஒருநாள் பொறுக்க முடியாதா?...கடைசியில் அவன் காத் திருந்த பொழுது வந்தது.

மெல்ல அடிமேலடி வைத்து அந்த அறைக்குச் சென் றான். வெறுமே சாத்தப்பட்டிருந்த கதவை நுனி விரல் களால் மெதுவாகத் தட்டினான்.

"வரலாம்..." என்று வந்த குரல் கட்டிப் போயிருந் தது. அந்தக் குரலுக்கு உடையவள் அவள்தானா? கதவைப் பரபரப்பாகத் தள்ளினான் அவன்.

அவன் என்ன, அவள் கண்களுக்கு அப்படி விசுவரூப மாகத் தோன்றினு? அந்த அகன்ற விழிகளில் இருந்த குறுகுறுப்பு எங்கே போயிற்று? தளதளவென்றிருந்த கன்னங்களின் பொலிவு போலிப் பூச்சுக்கு வெட்கி மறைந்துவிட்டதா?

பாலுவின் அடி நெஞ்சிலிருந்து ஏதோ ஒரு கவாடம் மேலுக்கு எழும்பித் தொண்டையை அடைத்தது.

'மாண்டல் பீஸின்' மேல் வைக்கப்பட்டிருந்த மின்-கணப்பின் வரிவரியான சுடர்க் கம்பிகள் அந்த அறை முழுதும் வியாபித்து விட்டதுபோல் தெரிந்தது. அந்தச் சுடர் வளையங்களுக்கு மத்தியிலா சுதா இருந்தாள்? அவள் சுதாவா? அவனுடைய உள்ளத்திலே உறைந்திருந்த சுதாவா?...அவனுடைய இருதயம்தான் துடிக்க மறந்ததா, உலகமே துடிக்க மறந்துவிட்டதா?

"யார் நீங்கள்?" என்ற கட்டைக் குரல் அசாதாரணமான பயங்கர அமைதியைக் கிழித்துக்கொண்டு ஒலித்தது. கருணைக்கிழங்குக்கு உபமானமாக அன்றொருவன் கூறிய கணபதிதான் ஸ்நான அறையினின்றும் வெளிப்பட்டு சோபாவில் வந்து உட்கார்ந்தார்.

"உட்காருங்கள், நீங்கள் யாரென்பதை......அறியலாமா..." என்ற கேள்வியைப் போட்டு அவனை எந்த வகையில் சேர்க்கலாம் என்ற பாவத்தில் மேலும் கீழும் பார்த்தார் அவர், ஒரு போலிப் புன்னகையுடன். பாலுவுக்குத் தலை சுற்றியது.

என்ன மடத்தனம்? அவரை அவன் எதிர்பார்க்கவுமில்லை, நினைக்கவுமில்லை! முதல்நாள் காலையில் அவர் அவளுக்குப் பின்னல் வண்டியிலிருந்து இறங்கி வந்ததைக் கூடவா அவன் கவனிக்கவில்லை?

எப்படிக் கவனித்திருப்பான்? அவனுடைய பார்வையை, செயலை, நினைவை எல்லாவற்றையும் அவளே கொள்ளை கொண்டுவிட்டாளே?

அவளைக் கண்டதும் என்ன பேசவேண்டும், எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று அவன் இத்தனை நாட்களாகக் கட்டிய கோட்டைகளெல்லாம் என்ன ஆயிற்று? அவனுடைய கற்பனைக் கோட்டைகளே அதிர்ந்து விட்டனவா? அவன் எண்ணியிருந்தபடி அந்த அகன்ற விழிகளில் அன்போ, பிரிவின் தாபமோ, திடீர் மகிழ்ச்சியோ இருக்கவில்லை. நிலைத்துநின்ற விழிகளை அவன் பார்க்க இயலாதபடி அவள் சட்டென்று பின்புறம் திரும்பிக் கொண்டாள்!

நீண்டு தொங்கும் அவளுடைய பின்னலிலே இன்று பொய்க் கூந்தலின் குஞ்சம் தொங்கியது. சிவந்த பாதம் தெரியாதபடி மெல்லிய சாம்பல்நிற 'ஜார்ஜெட்' சேலை கீழ்வரை புரண்டது. பாலு அவள்மீது பதித்த விழிகளை அகற்றவேயில்லை.

"நீங்கள் யாரென்று தெரியவில்லையே? உட்காருங்கள்!" என்றார் மீண்டும் கணபதி.

பதிலே கூறாமல் அவளையே நிலைத்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்த அவனுக்கு அந்த மரியாதையைக் கொடுத்தது அவனுடைய தோற்றமும் உடுப்புகளும்தான். அவை இல்லாத பழைய பாலுவாக அவன் இருந்திருந்தால் அவனுக்கு அவரிடமிருந்து வேறுவிதமான 'மரியாதை' கிடைத்திருக்கும்!

எப்படியோ அவன் சுதாரித்துக் கொண்டான்.

"இல்லை, மன்னிக்கவும், நான் தவறுதலாக வந்துவிட்டேன்..." என்று எப்படியோ வார்த்தைகளைக் கொட்டிக் குழப்பிவிட்டு விடுவிடென்று அவன் தன்னுடைய அறைக்கு வந்துவிட்டான்.

வெளியே சாரல் காற்று விர்ரென்று அடித்தது. நீர்த்துளிகள் திறந்திருந்த கண்ணாடி ஜன்னலின் வழியாக வந்து படுக்கையை நனைத்தன.

பாலுவின் உள்ளத்தில் எரிமலை புரண்டு வந்துவிட்டதா? இல்லாவிட்டால் அந்தக் குளிர்ச்சியிலும் அவனுடைய நெஞ்சம் ஏன் அப்படிக் கொதிக்க வேண்டும்?

அவளுடன் அவன் வாய்திறந்து பேசவில்லை. மனசில் உள்ளதை இருவரும் வெளியிட்டுக் கொள்ளவில்லை. ஆனால் அவனுக்கு எப்படியோ புலனாகியது.

அடுக்கடுக்காக அழகாக எழும்பிய மாளிகையின் அஸ்திவாரம் தகர்ந்துவிட்டது. அந்த மாளிகையின் உயிராக இருந்த ஒளி உறங்கிவிட்டது. அவளுடைய விழிகள் அவனுக்கு எப்படியோ அதைத் தெரிவித்தன. இன்பமலையின் சிகரத்திலிருந்து உருண்டு கீழே விழுந்தவன் போல் அவன் துடித்தான்.

## 19

சிறு நெருப்பைப் பெருந் தீ விழுங்கிவிடும். மகன் மகன் என்று ஒருபுறம் வெந்த தாபத்தில் அவளுடைய பொறுமை யுணர்ச்சி இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது.

விமலாவுக்குக் குறைப் பிரசவம் நேர்ந்ததற்காக அவள் சென்னைக்கு வந்திருந்தாள். பாலு அந்த மாதக் கடைசியில் அங்கு வருவான் என்று மூர்த்தியும் விமலாவும் கூறினார்கள். அவள் வந்த காரியம் முடிந்த பின்னும் இன்னும் தாமதித்தாள்.

ஆனால் அவன் வரவில்லை. மாதக் கடைசியும் போய்ப் புது மாதமும் பிறந்துவிட்டது. அவன் ஏன் வரவில்லை?

ஒருவேளை அவள் அங்கு இருக்கிறாள் என்பதை அவன் அறிகிறானா? அதனால்தான் வரவில்லையா?

பாலு ஏன் வரவில்லை?

அவளுடைய கேள்விக்கு பதில், அவன் அவள் எதிர் பார்த்தபடி அங்கு செல்லாததன் காரணம், 'ஹோட்டல் நீலமலை'யின் அறை ஒன்றில் இருந்தது. 'அன்பரே' என்று ஆரம்பமாகி யிருந்த அந்தக் கடிதத்தின் ஒவ்வொரு வரியும் அந்த எரியும் மின்கணப்பின் சுருள் கம்பிகளைப்

போல அவனுடைய உள்ளத்தில் பதிந்தது; புண்ணுக்கியது.

கடும் பனிக் குளிரில் கையும் காலும் விறைத்துச் சுருங்கி எரிச்சல் காண்கையில் அந்த எரிச்சலுக்கு சூடு ஒருபுறம் இதமாகவும் இருக்கும். அதுபோல் அந்த வரிகள் அவனுடைய உள்ளத்தைப் புண்செய்த போதிலும் ஒருபுறம் இன்பத்தை அளித்தன.

பாலு திரும்பத் திரும்ப அந்தக் கடிதத்தைப் படித்தான். படித்துவிட்டுச் சித்தம் குலைந்தவன் போல் சிரித்தான்; அழுதான்; விம்மினுன்.

சுதா அவனைக் காதலித்தாள்; காதலிக்கிருள்; என்றும் காதலிப்பாள். அது அழியாதது, அழிக்க முடியாதது. மலரைப் பிடித்துக் கசக்கி விடலாம். ஆனால் மணத்தைக் கசக்கி எறிய முடியாதே!

சுதா அவனுக்கு எழுதியிருந்த கடிதம் இதுதான:

" அன்பரே,

இப்படி நான் அழைப்பதை நீங்கள் ஒருபோதும் ஏற்காமலிருக்க முடியாது. ஏற்காமலிருக்க மாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். அப்படி நான் சந்தேகப் படுவதாக இருந்தால் இந்தக் கடிதத்தை எழுதமாட்டேன். எழுதினுலும் அப்படி விளிக்கமாட்டேன். எனக்காக உண்மையில் ஒரு உள்ளம் தனிமையில் ஏங்குகிறது என்பதை என் உள்ளம் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விநாடியும் உணர்ந்திருக்கிறது. ஏனெனில் தூய உள்ளங்கள் ஒருதரம் கலந்த பின் ஒருபோதும் வெவ்வேருவதில்லை. ஊனையும் உணர்வையும் உயிரையும் தாண்டி அப்பால் தொடரும் அன்புக்கு எவ்வகையிலும் அழிவு வர முடியாது.

நான் மனிதர்களிருந்தும் அநாதையாக இருந்தேன். ஆதரவாளர் இருந்தும் ஆதரவற்றவளாக இருந்தேன். ஆம், அன்பென்ற உயிரில்லாமல் பிரதிபலனை மட்டும் எதிர்

பார்த்து ஆதரவு தரும் மனிதர்கள் இருந்தென்ன, இல்லாதென்ன?

தாயும் தந்தையும் அற்றவளாக எவரோ வழிப்போக்கரின் கருணையால் சிற்றப்பா என்று கருதப்படும் இவரிடம் நான் வந்தேன். என்னிடம் அழகு இருந்தது. அந்தப் பிஞ்சுப் பருவத்திலேயே அருங்கலையின் அருள் இருந்தது. கசாப்புக் கடைக்காரனிடம் ஒரு இளம் மறி அடைக்கலம் புகுந்தால் அவன் அதை எந்தவிதமான சந்தோஷத்துடன் ஏற்பான்? அந்த வகையில்தான் அவர் எனக்கு சங்கீதம் பயிலுவித்தார். என் புகழ் பரவ மிகுந்த சிரத்தை எடுத்துக்கொண்டார். என்னை ஒத்த குழந்தைகளுடன் நான் ஓடியாட முடியுமா? களிக்க முடியுமா?

'ஏய், சுதா? எழுந்திரு, சாதகம் பண்ணவேண்டாம்?' என்ற அவருடைய குரல் கேட்காமல் அதிகாலையில் ஒரு நாளேனும் தூங்கமாட்டோமா என்று என் பிஞ்சு நெஞ்சில் இருந்த ஏக்கம் ஒருநாள் கூட அகலவில்லை. கச்சேரி மேடைக்கு நான் முதன் முதலில் கொண்டு செல்லப்பட்ட போது எனக்கு வயசு பனிரண்டேதான். ஆசை காட்டப்பட்டு, அடிக்கப்பட்டு, பயமுறுத்தப்பட்டு, இப்படியெல்லாம் தான் நான் அக்காலத்தில் கச்சேரி மேடைக்குக் கொண்டு வரப்பட்டேன். நான் பயின்றிருந்த கலையை என் இஷ்டப்படி பாடிக் கொள்ளக்கூட எனக்குச் சுதந்திரம் கிடையாது. வீட்டுத் தோட்டத்தில், மாடியில், நிலவில், தனியாக இருக்கும் போதெல்லாம் என்னையுமறியாமல் என் கண்டத்திலிருந்து ஒலி எழும்பி இசை பரவும். அப்போதும், 'தனிமையில் என்ன பாட்டு? தொண்டையை விருதாவாகப் பாடி இப்படி வீணடித்துக் கொண்டால் நாளைக்கு சபாவில் எப்படிப் பாடுவது?' என்ற சொல் விலங்குகள் பறந்துவரும்.

உள்ளூர ஏங்கும் என் நெஞ்சுடன் நான் வேதனைப்படும் நாட்களிலேதான் நீங்கள் வந்தீர்கள். சொல்லாமல் கொள்ளாமல் எப்படியோ என் இதயத்தில் புகுந்து என் இதய வீணையை மீட்டிவிட்டீர்கள். நாதம் ஜீவனுடன் ஒலிக்கலாயிற்று. 'இதுதான் கடைசிக் கச்சேரி, இதுவே

தான் கடைசியாக இருக்கும்!' என்று உலகம் அறியாத பேதையாக அப்போதெல்லாம் நான் கோட்டைகள் கட்டினேன். காதல் பாதையில் வெகு சுலபமாக வந்து நீங்கள் என் கையைப் பிடித்து எங்கோ ஒரு ஆனந்த உலகுக்கு அழைத்துச் செல்லுவதாகக் கனவு கண்டேன். ஆனால்—

காதல் கற்பனைக்கு இனியதாக இருக்கிறது; அநுபவிக்கும்போதோ அந்த இனிமையுடன் சொல்லொணாத் துயரமும் கூடியிருக்கிறது. விதி நம் உள்ளங்களை இணைத்துவிட்டு உங்களை என் கண் காணாமல் பிரித்துச் சென்றது.

அன்று புத்தூர் மைதானக் கச்சேரிக்கு நீங்கள் வந்திருந்தீர்கள். பாதியிலேயே எழுந்து சென்றீர்கள். முகத்தில் ரத்தம் கொதிக்க நீங்கள் எழுந்து சென்றீர்கள். அதற்குக் காரணம் என்னால் அறிய முடியாததல்லவே?

நீங்கள் வந்து என்னை விடுவிப்பீர்கள் என்று நான் அல்லும் பகலும் எதிர்நோக்கி இருந்தேன். எனக்கு அந்தப் பாக்கியம் கிட்டவில்லை.

இறைவனுக்காக மலர்ந்து நிற்கும் வண்ண மலர் இது என்று பனி விட்டுவிடுவதில்லை. தன் கொடுமையைக் காட்டிவிட்டுத்தான் செல்லுகிறது. தங்களுக்குரியவள், தாங்கள் வந்து என்னை அடையும் வரை நான் தூய்மையுடன் காத்து நிற்க வேண்டியவள் என்பதை என்னைச் சூழ்ந்த மக்கள் அங்கீகரிக்கவுமில்லை, ஆதரிக்கவுமில்லை. புனிதமாக வைத்துப் பாதுகாக்கப்பட வேண்டிய மலரைச் சுற்றிப் பல விஷப பூச்சிகள் வண்டுகள் என்ற பெயருடன் ரீங்காரம் செய்வதைப்போல, கலையின் பெயரைச் சொல்லிக் கலையின் விளக்கத்துக்குக் கேடு தரும் நெஞ்சுடனே பல கயவர்கள் என் மேல் விஷப் பார்வையைப் பதித்தார்கள்; பதிக்கிறார்கள். என்னைப் பாதுகாப்பதாகச் சொல்லி வருபவர் அவர்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் செல்லுகிறார். காசுக்காக என்னிடமிருக்கும் அருங்கலையை எந்த விதமாக வெல்லாமோ 'கோலம்' செய்ய ஒப்புக்கொள்கிறார். நிர்ப்பந்தத்தால் என்னை உடன்பட வைக்கிறார். இந்த

இரண்டு மூன்றுண்டுகளில் என்னை நோக்குபவரின் கண்களிலே தூய்மையில்லை. என்னைப் பற்றிய பேச்சிலே தூய்மையில்லை. நெஞ்சிலே நேர்மையின்றி, நாவில் வந்தபடி பிதற்றப்படும் இந்தச் சொற்களுக்கு, புகழ் வார்த்தைகள், பாராட்டுக்கள் என்று பெயர்!

நான் விநாடிக்கு விநாடி, நாளுக்கு நாள் புகழ் வார்த்தைகள் என்ற இந்த மயக்க மருந்தால் அழிவுப் பாதைக்கு இழுத்துச் செல்லப்படுகிறேன். குடிப்பவனுக்கு தான் குடிப்பது பிழை என்று தெரியும். போதை தெளிந்த நிலையில் அவன் வெட்கமுறுவான். ஆனால் அவனுடைய கண்களில் மதுப்புட்டி தென்பட்டு விட்டால் அவனுடைய அறிவு மங்கிவிடும். என் உள்ளத்தில் உறுதி இருக்கிறது. ஆனால் வலிவைக் கொடுக்கும் சூழ்நிலையோ, சந்தர்ப்பமோ இல்லை.

இத்தனை நாட்கள் கழித்து நீங்கள் வந்தீர்கள்; தூய்மையுடன் பிரேமையாகிற மதுவேந்தி வந்தீர்கள்; என்னுள் வாடா விளக்காக என்றும் ஒளிரும் நீங்கள் என் கண்முன் வந்தீர்கள்......ஆனால், அன்பரே, வேண்டாம், போய் விடுங்கள். ஒருமுறை விஷத்தை உண்பதைவிட ஓராயிரம் முறைகள் விஷக் காற்றைச் சுவாசிப்பது அதிகக் கெடுதலானதே தவிரக் குறைந்ததல்ல. பூவிதழ்கள் மங்கி விட்டன. புறவிதழ்களின் பசுமைதான் மிஞ்சி இருக்கிறது. வெகு சீக்கிரம் மலர் உதிர்ந்துவிடும்.

என் உள்ளத்தில் என்றென்றும் பசுமையாக நின்று நிலவுகிறீர்கள். அதுவே என் நிறைவு.

ஆதலால் வேண்டாம், போய்விடுங்கள். உங்கள் வாழ்க்கைக்கு என்னை நாடாதீர்கள். மாசில்லாத உங்கள் வாழ்க்கைக்கு ஒளி செய்ய உகந்ததொரு நல்விளக்கைத் தேடி ஏற்றுக்கொள்ளுங்கள்...........

அன்புள்ள,

சுதா"

'என்னை வந்து நீங்கள் விடுவிப்பீர்கள் என்று அல்லும் பகலும் எதிர்நோக்கி இருந்தேன்...'—இந்த வரியை நினைத்ததும் பாலுவின் கண்களில் நீர் பெருகியது.

அவன் கோழை. தன்னை வாட்டிய வறுமையைக் கண்டு பயந்தான். வாழ்க்கையில் தெரியும் மேடுபள்ளங்களையும் பயங்கரமான திருப்பங்களையும் கண்டு மலைத்தான். பின்னால் தனக்கு அத்தனை அவசியமில்லாத பட்டத்தின் ஆசையிலும், அசட்டு கௌரவம் பாராட்டும் வீண் டம்பத்திலும் ஒன்றி ஒதுங்கினான். அப்போதே தைரியமாகச் சென்று அவளைக் கலைவரம்புக்கு அப்பால் இருக்கும் சகதியில் விழுந்து விடாதபடி காப்பாற்றி இருக்கலாம். உண்மை வழியிலே சென்று ஒளிர்ந்திருக்கலாம். அவன் அப்படிச் செய்யத் தவறிவிட்டான்; பின்வாங்கினான்; கிடைத்தற்கரிய செல்வத்தை இழந்துவிட்டான். காசு, காசு என்று அலையும் அற்பக்கூட்டம் அவனுடைய விலைமதிப்பற்ற பொக்கிஷத்தைப் பறித்துவிட்டது.

பாலு அன்று அறையை விட்டு வெளிவரவேயில்லை.

வெளியே மனிதனின் ஆசைப்பேயைப்போல வெறிகொண்ட காற்று சுழன்று சுழன்று அடித்தது.

நிறைந்த இன்பத்துடன் வந்து வெற்று இதயத்துடன் அங்கிருந்து அவன் புறப்படுகையில் அவனுடைய கைக்கு ஒரு தந்தி கிடைத்தது.

'உடனே புறப்படவும். மிக அவசரம். சொந்த விஷயம், நந்தா' என்று சென்னையிலிருந்து அவனைத்தேடி வந்திருந்த அந்தச் செய்தி அவனை ஒன்றும் கிளர்த்திவிடவில்லை. அவன்தான் கல்லாகி இருந்தானே?

## 20

**செ**ன்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் வந்து இறங்குகையிலேயே பாலு, களைகுன்றிய முகத்துடன் இளம் நந்தா தன்னை எதிர்நோக்கி நிற்பதைக் கண்டான். அவனும்

பாலுவின் ஒளி மங்கிய முகத்தைக் கவனிக்காமலிருந்திருக்க முடியாது.

"உன்னிடம் இத்தனை நாட்களாக ஒரு விஷயம் மறைக்கப்பட்டது, பாலு" என்றான் அவன்.

பாலு புருவங்களைச் சுளித்து அவனை உற்று நோக்கினான்.

"உன் நலனில் மிகுந்த சிரத்தை கொண்டு நீயறியாமல் ஒருவர் உனக்கு இதுநாள் உதவி வந்திருக்கிறார். அவர் தன்னை யாரென்று அறிவித்துக்கொள்ள இத்தனை நாட்கள் வரை இஷ்டப்படவில்லை..."

பாலுவின் உறைந்த நெஞ்சம் மீண்டும் உருகிப் பெருகியது.

"உனக்கு ஏற்கனவே தெரியுமா பாலு? நீ அறிவாயா?..."

'அவள் சுதாதானே...' என்று அவன் கேட்க நினைத்தது வெளியே வரவில்லை. வார்த்தைகளை நெஞ்சம் பிடித்துக்கொண்டது.

"அவர், உன் சகோதரி ஜானகிதான்..." என்றான் நந்தா.

"ஜானகியா?"

பாலுவின் விழிகள் குத்திட்டு நின்றன.

"உனக்குத் தெரியக்கூடாது என்பது அவருடைய விருப்பம். நீ பலமுறைகள் அறிய முயன்றாய். ஸ்தாபனம் இவ்வளவு தனிப்பட்ட முறையில் உன்னிடம் சலுகை காட்டியதை நீ முற்றிலும் நம்பவில்லை என்பது எங்களுக்குத் தெரியும். பாலு, நம் ஸ்தாபனத்துக்குப் பெரும் கொடை தந்து உதவியர், அப்பாவின் அத்தியந்த நண்பர் ஒருவர் உண்டு. அவருடைய சொந்த மருமகள்தான் உன் சகோதரி. ஒருநாள் உன்னுடைய அநாதரவான நிலையைத் தெரிவித்து அப்பாவை உடனே சற்றுக் கவனிக்கும்படி

உன் சகோதரி திடீரென வந்து கேட்டுக்கொண்டதும், அவர் உன்னை யதேச்சையாக மறுநாளே தோணித் துறையில் சந்தித்ததும் கூடிவிடவே, நீ எங்களுள் ஒருவனாக ஆனாய்..."

பட்டணத்துத் தார் ரோடில் வண்டிச் சக்கரங்கள் உருண்டு உருண்டு பறந்தன. பாலுவின் மனம் அதற்கு முன் பறந்தது.

ஜானகி...அவள் அவனைக் கைகொடுத்துக் காப்பாற்றி இருக்கிறாளா? கண்முன் உதாசீனம் செய்வானேன்? பல வாணங்கள் தீட்டப்பெற்ற ஒரே வட்டம் சுழலுகையில் வண்ணபேதங்கள் தெரிகின்றனவா? பாலுவும் அப்படித்தான் சுழன்றான்.

பல லட்ச ரூபாய்களை விழுங்கிவிட்டுப் புதிதாக எழும்பியிருக்கும் நவீன வசதிகள் கொண்டதொரு வைத்தியசாலைக் கட்டிடத்துக்குள் வண்டி நுழைந்தது. நந்தா வண்டியை நிறுத்திவிட்டு உள்ளே சென்றான். பாலுவும் யந்திரம்போல் தொடர்ந்து சென்றான். மாடியறை ஒவ்வொன்றாகக் கடந்து கடைசி அறைக்கு வருகையில் அவர்களுடைய நடை மெதுவாகியது.

அது ஒரு விசாலமான அறை. ஜன்னலுக்கு நேராகத் தெரிந்த கட்டிலின் மேலுள்ள படுக்கையில் இளஞ் சூரியனின் கதிர்கள் வந்து விளையாடிக் கொண்டிருந்தன. ஊசி விழும் சப்தம் கேட்கும்படியாக நிசப்தம் நிலவியது அங்கே. ஜானகி அந்தப் படுக்கையில் படுத்திருந்தாள். கிள்ளி எறியப்பட்ட முல்லை மலரின் நினைவு பாலுவின் நெஞ்சில் பதிந்தது.

அவளைக் குனிந்து இரு விழிகள் பார்த்துக்கொண்டிருந்தன. அந்த டாக்டர் யார்?...

பாலு பார்க்கையிலேயே அவன் கண்களிலிருந்து ஒரு சொட்டு நீர் வெள்ளை விரிப்பில் விழுந்தது. அவன் யார்?

நந்தா முன்னுக்குச் சென்றான்.

அடிச்சத்தம் கேட்டு டாக்டர் நிமிர்ந்தார். பாலு வைச் சந்தித்த அவர் விழிகள் அப்படியே நிலைத்தன.

"ராமு...!"—பாலுவின் மூளையில் பளீரென்று ஒரு நினைவு உராய்ந்து ஒரு மின்பொறியை உதிர்த்தது. அவன் சிலையாக நின்றான்.

"பாலு!"

"அண்ணா!" என்று பரிதாபமாக ஒலித்தது ஜானகி யின் குரல்.

எல்லாவற்றையும் அமுக்கிக்கொண்டு தாயின் குரல் அப்போது அங்கு பாய்ந்து வந்தது.

செல்லம் அலையக் குலைய ஓடிவந்தாள். அவள்பின் மூர்த்தியும் வந்தான். தாயுள்ளத்திலிருந்து பொங்கிவந்த துயரம் கண்ணீர் முத்துக்களாக வெடித்துக் கன்னங்களை நனைத்தது.

"நான் வேண்டுமென்று தெரிந்து உன்னைக் குழியில் வீழ்த்திேனனடி, கண்ணே. நான் மகாபாவி. ஜானகி அகங் காரி என்று பிறர் குறைகூறினார்கள், தூஷித்தார்கள். எல்லாவற்றையும் மனசுக்குள் வைத்து உருகிவிட்டாயேடி, நான் இதைப்பார்க்கவா இங்கு வந்தேன்?..."

கனலாகக் கனிந்து அவளை எரித்த வேதனை சொற் களாகப் பீறிட்டுக்கொண்டு வந்தது.

"இப்படியெல்லாம் சொல்லாதேயம்மா, எனக்கு இப் போதுதான் சந்தோஷமாக இருக்கிறது. நான் ஒருநாளும் குறைவாக நினைக்கவில்லையம்மா..."

"எனக்குத் தெரியுமடி தங்கம், பெற்றுவளர்த்த நானே குருடானேன், அறிந்து உன்னைத் தள்ளிய பாவி நான். குறையையும் நிறைவாக மதித்து எனக்கும் புத்தி சொல்லுவாயே? உன் குணம், மனசு எல்லா அருமை யையும் அறிந்து...நான் பாவி, உனக்கு அம்மா இல்லை..."

"இப்படியெல்லாம் சொல்லாதேயம்மா..."

கட்டிலின் தலைமாட்டிலே உட்கார்ந்த தாயின் மடியிலே அவள் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

குடம் நிறைந்துவிட்டது. ஒலிக்கு ஏது இடம்?

அணையும் தருவாயில் இருக்கும் அந்தச் சுடரை நிலைக்க வைக்க ராமு யார் யாரையோ கூட்டி வந்தான். ஏதோதோ முயற்சிகள் செய்தான். ஆனால் எண்ணெய் வறண்டு, திரியும் எரிந்து நுனிக்கு வந்துவிட்டது. இனி புது எண்ணெய் ஊற்றி என்ன பயன்?

எங்கோ பாரிஸிலோ, வியன்னாவிலோ இன்ப வேட்டை ஆடிக்கொண்டிருக்கும் உரியவன் அறியாமலேயே அந்தச் சுடர் முடிவிலே பூப்போலப் பொறியை உதிர்த்துவிட்டு அணைந்துவிட்டது.

சுடர் அவியப்போகிறது என்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும் அணைந்தபின்தானே இருள் கவிகிறது? கண்ணீர் விட்டேயறியாத நந்தாவுக்கும்கூட கண்களில் நீர் நிறைந்துவிட்டது. பாலுவுக்குச் சிந்திக்கும் சக்தி கண்ணீர் எல்லாம் வறண்டுவிட்டன. இன்பம், துன்பம் இரண்டும் எல்லை மீறினால் ஒன்றுதான் என்பார்கள். எல்லா உணர்ச்சிகளுமே எல்லை மீறிச் சூழ்ந்திருந்தால்?

# 21

மனிதருக்கும் தாம் இழைக்கும் நன்மைகளையோ, தீமைகளையோ நிமிர்ந்து பார்த்து விளைவுகளை எண்ணாமல் காலம் ஓடிவிடுகிறது. இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. பாலு அன்று சென்னைக்கு வந்தான்.

விம்லாவின் வீட்டுக் கூடத் தூணிலே சாய்ந்து நின்றிருந்தாள் செல்லம். பழைய செல்லமா அவள்? அந்தக் குறுகிய காலத்துக்குள் அவளுடைய கேசம் தும்பைப் பூவாய் மாறிவிட்டது. உடலிலே கொஞ்ச நஞ்சம் இருந்த வளமும் வற்றிச் சுருக்கங்கள் கண்டுவிட்டன. பெருங் காற்றிலும் மழையிலும் சுழன்று சுழன்று பேயாட்டம்

ஆடிய தன் பலனுகைக் கிளைகளிழந்து வெறிச்சிட்டு நிற்கும் மரத்தின் நினைவு வந்தது அவனைப் பார்க்கையில்.

அன்று ஏதோ விடுமுறைநாள். கூடத்திலே வேதா வும் மோஹனும் ஒரு கிழிந்த பலூனுக்காக சண்டையிட்டுக் கூச்சல் போட்டுக்கொண்டிருந்தனர். முற்றத்துக் குழாயடியில் முழங்கால் வரையிலும் சிற்றுடையைத் தூக்கிக் கட்டிக்கொண்டு மூர்த்தியின் தங்கை சீதா தோய்த்த துணிகளை அலசிப் பிழிந்துகொண்டிருந்தாள். பாலு உள்ளே வந்ததைப் பார்த்துவிட்டுச் சட்டென்று துணியைப் போட்ட அவள், "மன்னி!" என்று அழைத்தவண்ணம் அடுப்படியில் இருந்த விமலாவிடம் செய்தி தெரிவிக்க ஓடினுள். கூடத்திலேயே நின்ற செல்லம் அவனைப் பார்த்துக்கொண்டே இருந்தாள். ஆனுல் அவன் அவளை நிமிர்ந்து நோக்கவுமில்லை, பேசவுமில்லை. மௌனமாக வந்து முற்றத்துக் குழாயடியில் முகத்தை அலம்பிக்கொண்டான். சமையலறையிலிருந்து வெளிப்பட்டு வந்த விமலா, "இப்போதுதான் வருகிருயா" என்று விசாரித்ததற்குப் பதில் கூறிவிட்டுக் கூடத்து அறைக்குள் போய் உட்கார்ந்தான். 'மார்க்கெட்டு'க்குச் சென்றிருந்த மூர்த்தி கறிகாய்ப் பையும் கையுமாக வந்தான். முன்போல் அவனிடம்கூட பாலு நெருங்கிக் கலகலப்பாகப் பேசவில்லை. கேட்ட கேள்விகளுக்குப் பதில் கூறினுன். அவ்வளவுதான்.

அவர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள். செல்லம் சமையலறையிலே அடைந்துவிட்டாள். விமலா வாசலில் வெண்ணெய் வியாபாரியிடம் வாக்குவாதம் செய்துகொண்டிருந்தாள். சீதாவின் வளைக்கரங்கள்தான் உணவு படைத்தன.

சாயமில்லாது, மெருகில்லாது கண்ணுடி வளையல்களணிந்த அந்தக் கைகள் பாலுவுக்கு ஜானகியை நினைப்பூட்டின. அவன் சட்டென்று ஏதோ நினைவு வந்தவன் போல் நிமிர்ந்தான். எளிமை தவழும் அந்த விழிகள் அவனைத் தடுத்து நிறுத்திவிட்டன.

அழகு, அறிவு, அடக்கம் எல்லாம் நிறைந்த பெண் தான் அவள். ஆனுலும் இந்தக் காசு வெறிபிடித்த

உலகுக்கு அவளுடைய அருமை எங்கே தெரியப்போகிறது? ஜானகியைப் போலவோ, சுதாவைப்போலவோ.....சே? அவனுடைய கண்களில் ஏன் நீர் துளிர்க்கிறது?

"ஏன் பாலு? மிளகாயைக் கடித்துவிட்டாயா?" என்று கேட்டான் அவனைக் கவனித்த மூர்த்தி.

அவனுடைய உள்ளம் அன்று நிலையிலேயே இல்லை. விடுமுறை நாளைக் கொண்டாடுபவன்போல் சாப்பிட்டு விட்டு மூர்த்தி கூடத்து அறையில் பழைய பெட்டி ஒன்றைக் குடைந்துகொண்டிருந்தான். சுவற்றில் சாய்ந்து கால்களை நீட்டிக்கொண்டு மௌனமாக அவனையே பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்த பாலு, "அத்தான்?" என்றான் சட்டென்று.

மூர்த்தி ஏனென்று கேட்கும் பாவனையில் திரும்பிப் பார்த்தான்.

"சீதாவை நான் கல்யாணம் செய்துகொள்ளுகிறேன், அத்தான்!" என்றான். மூர்த்தியின் முகத்தில் வியப்பு மேலோங்கியது.

கையிலிருந்த சாமானை நழுவ விட்டுவிட்டு, "விமலா, விமலா!" என்று உற்சாகத்துடன் கூவினான்.

அவனுடைய அந்த வார்த்தைகள் அந்த வீட்டிலே சந்தோஷக் கலகலப்பை உண்டு பண்ணிவிட்டது.

பாலுவுக்கு அங்கு வேலை முடிந்துவிட்டது. அன்று அவன் ஊருக்குக் கிளம்ப இருந்தான். பத்து நாட்களில் சீதாவை ஏற்றுக்கொள்ள மீண்டும் அங்கு வருவான். எல்லோரும் சந்தோஷமாக அவரவர்க்குரிய வேலைகளில் ஈடுபட்டிருந்தனர். ஆனால்—

ஒரே ஒரு உள்ளம் மட்டும் இன்னும் துடித்துக்கொண்டிருந்தது. ஆம், அன்னையிடம் ஒரு வார்த்தை பேசக் கூட பாலுவுக்கு அவனுடைய வெறுப்பு இடம் கொடுக்கவில்லை. ஜானகியின் நலனிலும் தன் கடமையை எண்ணாது தவறிய அவளை அவனுடைய மனம் முன்னிலும் அதிகமாக வெறுத்தது. நகையிலும் துணியிலும் வீண்

பகட்டிலும் ஆசைகொண்டு கடமையினின்றும் வழுவும் சுயநலம் பிடித்த பெண் கூட்டங்களில் ஒருத்தியாக அவளைக் கருதியது.

பொறுமையிலே சிறந்த பூமி தேவியை ஒத்தவள் அன்னை. பூமிதேவி தன் தன்மையைப் புரிந்துகொள்ளாது தன்மீதே அலட்சியம் பாராட்டும் மக்களையும், இன்னும் தனக்கே தீங்கிழைக்கும் மக்களையும் தாங்குகிறாள்; தயை காட்டுகிறாள். ஆனால் எல்லை மீறும்போது அவளுடைய பொறுமையும் கனலாகக் கனிகிறது; வெடிக்கிறது. அந்த அன்னைக்குக் கோபம் வந்தால் மலைகள் மறைகின்றன; ஆறுகள் தடுமாறுகின்றன; கடல் பொங்குகிறது.

செல்லத்தின் உள்ளத்திலே பாலுவுக்கென குவிந்திருந்த ஆசை மலையினும் பெரியது. அவனுக்கென இருந்த உறுதியும் தெம்பும் வற்றாத சக்தி பெற்றவை. அவனுக்கென இருந்த அன்பு கடலினும் ஆழமானது.

அந்த அன்பு உள்ளம் இன்று பொங்குமாங் கடலாக ஆகிவிட்டது; அளவு மீறிக் கொந்தளித்தது. அவன் நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருந்த அந்த அன்னை உள்ளத்துக்கு ஒருவிதத்திலா சோதனை வந்தது? ஆறு பெருகி வரும் வேகத்தில் மலையானாலும், பசும் வயலானாலும், சோலையானாலும் பாராமல் ஒரே குறியில் செல்லுகிறதே, அப்படியன்றோ அவள் தனக்கென்றுள்ள மற்ற கடமைகளைக்கூட முழுதும் சிந்தியாமல் ஒரே நோக்கில் ஓடினாள்? இல்லாவிட்டால் கண்ணின் கருமணிக்குச் சமமான மாசற்ற அந்தக் குழந்தையை அவள் ஒரு மனிதனைக மதிக்கத் தகாதவனுக்குப் பலியாக்கத் துணிவாளா? பொருளை இழந்த பின்தான் அதன் முழு அருமையும் தெரிய வருகிறது என்பது எத்தனை உண்மையான வாக்கியம்.

ராமுவின் வெம்பிய முகத்தையும், உயிர் போகும் தருவாயிலும் அவனை நோக்கி ஒளிர்ந்த அந்தக் கருநீல விழிகளையும் கவனித்திருந்த அவளுக்கு இப்போதும் அதை நினைத்தால் அடிவயிற்றைச் சுருட்டிக்கொண்டு வேதனை

எழும்பியது. காதலின் தன்மையை உணர்ந்து வேதனை அடைந்தவளல்லவா அந்தத் தாய்? முகிழ்ந்து விரித்து மணம் வீச இடமின்றியே மோனத்தில் மறைந்த அந்தக் காதலை நினைக்கையிலேயே அவளுக்குக் கண்ணீர் வாராதோ?

வாழ்க்கையில் எதிர் நோக்கிய பலன் கிடைக்காததால் குமுறிச் சுழன்று பொங்கிக் கொந்தளித்த அவளுக்கு மௌனமாகப் புத்தி புகட்டிய அவள் தாய்க்குச் சமமானவள்; தன்னிடம் இருக்கும் ரத்தினத்தைக் காக்க வேண்டித் தன்னை அண்டுபவர்களைச் சீறி விஷத்தைக் காட்டி அப்பால் வெருட்டும் நாகசர்ப்பம் போன்று தன்னுள் இருக்கும் புண் வெளியே தெரியக் கூடாது என்று தன்னை அண்டியவர்களிடம் வெறுப்பும் அகங்காரமும் காட்டினளே அவள் மனிதத் தன்மையினின்றும் அப்பால் மேம்பட்டு நின்றவள்; தன்னுடைய விருப்பம், நலம் எல்லாவற்றையும் தன்னைப் பெற்றவருக்கும் உற்றவருக்கும் தியாகம் செய்த சுடர். அத்தகைய மணியை அவள் அறிந்து இழந்தாள்.

எல்லாம் யாருக்காக?........அந்த ஆசை மைந்தன் இன்னும் அவளை அறியவில்லை.

பலகணிக்குள்ளிருந்து வெளியே தூரத்தில் நிற்கும் குழந்தையைத் தாய் நன்றாகப் பார்த்துப் புரிந்துகொள்ளுவாள். ஆனால் வெளியே நிற்கும் குழந்தையால் பலகணிக்கு உள்ளே இருக்கும் தாயை அத்தனை தெளிவாகப் பார்க்க முடியாது.

பெட்டியும் கையுமாக பாலு ஊருக்குக் கிளம்பி விட்டான்.

"போய் வருகிறேன் அத்தான், விமலா!" என்று அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டான். குழந்தைகளுக்குத் தன் அன்பைத் தெரிவித்தான். மறைவாக நின்று தன்னைப் பார்த்த இரு கருவிழிகளையும் கூட அவனையுமறியாமல் அவனுடைய பார்வை சந்தித்து நன்றியைத் தெரிவித்துவிட்டது. ஆனால் அறை வாசல்

படியிலேயே துடித்துக் கொண்டு நிற்கும் ஒரு உயிருக்கு? அவனுடைய கனிவு ததும்பும் 'அம்மா' என்ற அழைப்புக்காக நம்பிக்கைக் கொடியை இன்னும் கையில் பிடித்துக் கொண்டிருக்கும் ஜீவனுக்கு?

அவன் வாசல்படியைத் தாண்டிவிட்டான். பின்னும் எதையோ விட்டுச் செல்வது போன்ற உணர்வு; அவன் திரும்பினான்.

பாறையில் மோதி மோதித் துடிப்பைத் தெரிவித்துக் கொண்டிருந்த கடல் இதற்குள் பொறுமையின் எல்லையைக் கடந்துவிட்டது. கரையை மீறி அது பொங்கிப் பொங்கிப் பெருகியது.

"பாலு .....!" —ஒரே சத்தம்தான். அடி வயிற்றிலிருந்து ஏக்கத்தையும் பாசத்தையும் அன்பையும் தாபத்தையும் கக்கிக்கொண்டு வந்தது அலறல்.

அந்தக் குரலிலே என்ன இருந்தது? கல்லான இருதயமும் கலங்கி விட்டதா?

"அம்மா...... !" என்ற எதிரொலி எழும்பியது.

கண்கள் சுழல, கரகரவென்று நீர் மல்க நின்ற தாயை மைந்தன் கீழே விழாமல் தாங்கிக்கொண்டான்.

"அம்மா? என்னம்மா? உனக்கு என்னம்மா? ....."

அவளுடைய செவிகளில் இன்பம் பாய்ந்ததா? கொதித்துக் கொந்தளித்துப் பொங்கிப் பெருகிய அந்த நெஞ்சு குளிர அமுதம் பாய்ந்ததா?

"அம்மா, என்னம்மா? விமலா! அம்மாவைப் பாரேன்?"

பாலு கத்தினான். எல்லோரும் ஓடி வந்து சூழ்ந்து கொண்டார்கள். செல்லத்தின் கனவு வீணாகவில்லை. கடைசி கடைசியாக அவள் எதிர்பார்த்துத் தாங்கிக் கொண்டிருந்த நம்பிக்கை மாய்ந்து விடவில்லை. அவளுக்கும் மலர்ச்சி கிடைத்துவிட்டது.

"உனக்கு எப்போதும் நான் நன்மையேதான் நினைத்தேன், பாலு. என்னை வெறுக்கமாட்டாயே?..."

அவனுடைய வெறுப்பு, கசப்பு எல்லாம் அந்தத் திணறும் அன்புக் கடலில் கரைந்துவிட்டது.

"இல்லை" என்று அவன் தலையை ஆட்டினான்.

கீழ் வானத்திலே அமுத கலசம்போல் சந்திரன் உதயமாகிக் கொண்டிருந்தான். அதற்காகவே காத்திருந்தவன்போல் பிழம்பாகி சொலித்துக் கொண்டிருந்த ஆதவன் மேல் திசையில் ஆழ்ந்தான்.

கண்ணீர் துளிர்க்கத் தன்னையே கவிந்து நோக்கும் மகனையே பார்த்துக் கொண்டு தாய் தான் அடைந்த மலர்ச்சியுடன் முடிவில் ஒன்றிவிட்டாள். ஒரு இலட்சியத்துக்காகவே உயிர் வாழும் பூச்சி இனமும்கூடத் தம் இலட்சியம் மலர்ந்ததும் துன்பத்தின் வடுவிலாத இன்ப முடிவை எய்தி விடுகின்றதன்றோ?



